# சங்கர பரமஹம்ச சுவாமிகள்

## திவ்விய சரித்திரம்



இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகள் அருளாசியுடன்

எழுத்தோவியம்

**ஜி. சிவராமன்**



## ஜி. சிவராமன்

தமிழை வாசிக்கும் இதயங்களில் இரண்டு தலைமுறைகளாக இடம் பிடித்திருக்கிற பெயர்

ஒரு பத்திரிகையாளராக, எழுத்தாளராக, சுற்றுச் சூழல் ஆராய்ச்சியாளராக, தொலைக்காட்சி வல்லுநராக, வானொலி சொற் சித்திர வித்தகராக ஆன்மிக நேசராக... பன்முகங் காட்டி வரும் இவரது உள்முகம் எளிமையானது. அழகானது. மனித நேயத் தோடும் இயற்கையோடும் இயைந்து நிற்பது.

உலக புத்தகத் தினத்தையொட்டி வெளியிடப்பட்ட தமிழில் வாசிக்கப்பட வேண்டிய 5000 நூற்பட்டியலில் இவரது 'சுற்றுச் சூழல் சட்டங்கள்' இடம் பெற்றிருக்கிறது. இதுவே சுற்றுச் சூழல் சட்டங்கள் குறித்த தமிழில் எழுதப்பட்ட முதன்மை நூல் என்பது குறிப்பிடத் தக்கது. இது தவிர, ஏழுக்கும் மேற்பட்ட நூல்கள் இவரது படைப்பில் வெளிவந்துள்ளன.

தமிழகத்தின் அரசியல் மற்றும் புலனாய்வுப் பத்திரிகைகளில் நிருபராக, இணை ஆசிரியராக, ஆசிரியராக இவரது படைப்புகள் இளம் பத்திரிகையாளர்களுக்கு இன்றும் வழிகாட்டும் ஒளி விளக்காகத் திகழ்கின்றன.

'ஞான ஜோதி' ஆன்மிக மாத இதழின் இணை ஆசிரியராகப் பணி புரிந்தது இவருக்குத் திருப்பு முனை.

'திருவிளையாடல்கள்' என்ற தலைப்பில் மறந்தும் மறைந்தும் போன தமிழர் விளையாட்டுகள் பற்றிய இவரது தொடர், தமிழரின் தொன்மங்கள் குறித்த இன்றியமையா ஆய்வு.

இயல், இசை, ஆன்மிகம் மற்றும் அரசியல் பிரபலங்களின் அகவுலகைச் சித்தரிக்கும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட நேர்காணல்களை தொலைக்காட்சிகளில் TALK WITH SIVA ஆக வழங்கிய அமுதக் குரலும் இவருடையது தான்!

நதிகளாகக் கிளை பரப்பி உயிர்களை நனைத்தாலும் கடலாக விரிந்து ஆன்மிகத்தையும் அரவணைத்து நிற்கும் இயல்பு இவருடையது.

சதுரகிரி தல புராணத்தை எளிமையாக எழுதி அதைத் தன் வசீகரக் குரலில் ஒலிப்பதிவு செய்து ஒலித்தட்டாக, வானுயர்ந்த சதுரகிரி மலையில் வெளியிட்டது, இவரின் ஆன்மிகத் தேடலின் அற்புதப் பதிவு.

இமய ஜோதி திருஞானானந்தா சுவாமிகளின் ஞான குருவான சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்விய சரித்திரத்தை எழுத்தோவியமாக இங்கே வரைந்திருக்கிறார், சிவராமன்.

இது எழுத்துப்பணியா, களப்பணியா, இல்லை உழவாரப்பணியா என வியக்கும் வண்ணம் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அற்புதங்களை நேரில் காண்பது போல நம்முன்னே நிகழ்த்திக் காட்டியிருக்கிறார்...

இது இவரது மகுடத்தில் இன்னொரு வைரக்கல்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள்

# திவ்விய சரித்திரம்

---

இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகள் அருளாசியுடன்

எழுத்தோவியம்

**ஜி.சிவராமன்**



**ஞானாலயா பதிப்பகம்**
1, R.K. நகர், நவாவூர் பிரிவு
பாரதியார் பல்கலைக் கழகம் அஞ்சல்
கோயமுத்தூர் - 641 046.

நூல் தலைப்பு : **சங்கர பரமஹம்ச சுவாமிகள் திவ்ய சரித்திரம்**

ஆசிரியர் : ஜி. சிவராமன்

பதிப்பு உரிமை : (C) ஞானாலயா வள்ளலார் கோட்டம்

நூல் வகை : ஆன்மிகம்

பதிப்பு : முதற் பதிப்பு, மே, 2015

ஓவியங்கள் : ஓவியர் ஜீவா, கோவை

அட்டை ஓவியம் : ஓவியர் சுப்பிரமணியன், கோவை

விலை : **ரூ. 150/-**

நூல் வெளியீடு : **ஞானாலயா பதிப்பகம்**
1, R.K. நகர், நவாவூர் பிரிவு,
பாரதியார் பல்கலைக் கழகம் அஞ்சல்
கோயமுத்தூர் - 641 046.
போன் : +91 422 2426272
அலைபேசி : +91 96262 50000
www.vallalaar.org

அச்சிட்டோர் : **ஸ்ரீ கருடா க்ராபிக்ஸ்**
79, D.B. ரோடு, ஆர்.எஸ்.புரம்
கோயமுத்தூர் - 641 002.
போன் : 0422 254 2555, 98422 32547
இ-மெயில் : garudagraphics@gmail.com

# உள்ளடக்கம்

அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருஞ்கருணை



அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி

*அன்பே சிவம்*



# அருளாசியுரை

*மெய்யன்பர்களே!*

*பார் போற்றும் உயர்ஞான செறிவுற்ற திருநாடாம் தெய்வத் தமிழ்நாட்டில் உதித்த உன்னத மெய்ஞ்ஞானிகள் ஏராளம்! ஏராளம்!!*

*அகத்தியப் பெருமான், வள்ளல் பெருமான் என வாழையடி வாழை என வந்த திருக்கூட்ட மரபினில் வாராது வந்த மாமணியாய் வந்து உதித்தவர்தான் சங்கர பரமஹம்ச சுவாமிகள்.*

*சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்விய சரித்திரத்தையும், அவர்தம் மெய்வாழ்வில் நிகழ்த்திய அருள் அற்புதங்களையும், கண்ணுறப் பார்த்து, காதுறக் கேட்டு, நாவாற ஓதி, மனமாற நினைந்து, உயிராற உள்ளுணர்ந்த, ஓரறிவு உயிர்கள் முதல் ஆறறிவு மனிதர்கள் வரை அத்துணை உயிர்களுக்குள்ளும் ஆன்மப் பேரொளி பிரகாசிக்கும்.*

*நாயினும் கடையேன் ஈயினும் இழிந்தேன் ஆயினும் அருளிய அருட்குருவாக இருந்து, மலத்தில் புழுத்த புழுவினும் சிறியேன் ஆகிய தமியனேனையும், தம் கருணைத் திறத் தினால் ஒருப் பொருளாகக் கொண்டு, உலகியல் பள்ளிப் பாடத்தையும் கூட கடக்காத சின்னஞ் சிறுவயதில், இப்பாமரச் சிறியேனையும் திருக்குறிப்பினில் கொண்டு, பாரே வியந்து போற்றும் வண்ணம், பேரருள் புரிந்து, ஒப்பற்ற உன்னத மெய்ஞ்ஞானத் தவிசினில் ஏற்றி ஒளியுறச் செய்த தெய்வீக மாண்பை என்னவென்று சொல்வது!*

*பாரம் சுமக்கும் பொதிமாடு என உழன்று, சுழன்று, இறப்பு பிறப்பு, இன்பம் துன்பம் ஆகியவற்றுக்கு ஏதுவான இருவினைகள் என்னும் பெரும்பாரங்களால் அழுந்தப் பெற்று, திக்கித்து, திணறி, தவித்த எம்மையும், தன் இன்னருள் வலத்தால் ஆட்கொண்டு மெய்யுணர்வை உணர்த்தி, அந்த மெய்யுணர்வில் ஐம்புல உணர்வை ஒடுக்கும் உபாயத்தைத் தந்து, நினைப்பு மறப்பற்ற சகஜ மோனானந்த நிட்டையை எமக்கு அருளி, வெருள் மனமாயை, வினை இருள் நீக்கி, உன் அருள் விளக்கு ஏற்றிய ஒப்பற்ற அருட்தன்மையை ஏதென்று சொல்வது!*

*ஒன்றுக்கும் உதவாது, மண்ணுக்குப் பாரமாகக் கிடந்த இந்த மண்ணாங்கட்டியையும், தன் தண்ணருள் வல்லபத்தால், மாசற்ற, உயர்மாற்று பொன்னாங்கட்டியாக மாற்றி, ‘‘உலகினில் உயிர்களுக்கு உறும் இடையூறு எல்லாம் விலக நீ அடைந்து விலக்குக, மகிழ்க, சுத்த சன்மார்க்க சுகநிலைப் பெறுக! உத்தமன் ஆகுக!! ஓங்குக!!! என்று எம்மையும் ஆற்றுப்படுத்திய தெய்வீக மாட்சிமையை ஓத நாவில்லை, உரைக்க வார்த்தைகளும் இல்லை, எழுத எழுத்துக்களும் இல்லை, எனில் அவை எண்ணில் அடங்கா*

*அருட்பெருஞ்ஜோதியாய் விளங்கி, தனித்த பேரன்பினால் அரவணைத்து, அருளரசாக இருந்து, எம்மை, இம்மையும் எம்மையும் பாதுகாத்து, தாயினும் சாலப் பரிந்து, ஞானத்தாயாக எழுந்தருளி, மாயாப் பிறவியின் மயக்கத்தை அறுத்து, எட்டும் இரண்டும் இன்னது என்று அறியாமல், மயங்கி தவித்த எமக்கு, எட்டையும் இரண்டையும் இனிது அறிவித்த மெய்த்தந்தையாகத் திகழ்ந்து, ஞானப் பெருந்தகையாய், அருட்பூரணப் புண்ணியமாய், தனையறியாது சிறுவனாய் விளையாடித் திரிந்தப் பருவத்தே, தமியனேனையும், பெருங்கருணைத் திறத் தினால் ஆட்கொண்டு, துன்மலம் அகற்றி, இன்னருள் புரிந்து, பரமஞானத்தை எமக்கு அளித்த பரம ஞானகுருவை, என்னைத் தானாக்கி தன்மயம் ஆக்கிய தவஞானப்பொற்பை, எமது ஊனிலும், உயிரிலும், அறிவிலும் ஆன்மாவிற்குள்ளும் கலந்து, உள்ளுருக்கும் ஞான தெள்ளமுதை, தேமாந்து, தேமாந்து,*

*பருகினும் தெவிட்டாத ஞானத் தெளிதேனை, சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருளமுதை, யாம் உய்த்து துய்த்த வண்ணம் இத்தாரணியில் உள்ள உயிர்கள் எல்லாம் உணர்ந்து உய்ய வேண்டும் என்ற உணர்வூற்று எம்முள் பொங்கியது. அது சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்விய சரித்தரத்தை ஆவணமாக்க, முனைப்பாக முனைந்தது.*

*‘அவன் அருளாலே அவன்தாள் வணங்கி என்ற திருவாக்குக்கு ஏற்ப, எல்லாம் வல்ல குருவருள், சிந்தனைச் சிற்பி சிவராமனாரை சுட்டிக்காட்டி, அவர்தம் திருக்கரத்தினால் எழுத்தோவியம் ஆக்க துணித்து பணித்தது.*

*சிந்தனைச் சிற்பியாரின் எழுத்தோவியத்தில் விரிந்த, சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்விய சரித்திரத்தைக் கண்ணுற்று கேட்டு உள்ளுணர்ந்தால், தாய்மைக்கே தாய்மை ஊற்றுப் பொங்கும் கருணைக்கே கருணைப் பெருக்கு பெருகும். ரெளத்திரமும் வீறுக் கொண்டு ரெளத்திரம் பழகும். அன்பே அன்பினுள் கரைந்து உருகும். அதனை உற்று உணர்ந்து கேட்பவர்களுக்கு உள்ளே, தாமும், சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருகில் ஒரு சாட்சியாக இருந்து, தமக்குள் அந்த அருள் அற்புதங்கள், அருங்காட்சி அனுபவமாக விரிவதை நன்றாக உணரமுடியும்*

*சங்கர பரமஹம்ச சுவாமிகள் ஒரு ராஜரிஷியாகத் திகழ்பவர். அவரது அருளரசாட்சியில், சிஷ்டபரிபாலனமும், துஷ்ட நிக்கிரகமும் ஒருங்கே நிகழ்ந்து உள்ளதைக் கண்ணாறக் காணலாம்.*

அறக்கருணையும் தனி மறக்கருணையும்
தந்து வாழ்விக்கும் ஒண்மைப் பதம்.

**- திருவருட்பா**

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைக் கட்டதனோடு நேர்.

**- திருக்குறள்**

*என்ற திருமறைகளுக்கு ஒப்ப சங்கர பரமஹம்ச சுவாமிகள் நிகழ்த்திய அருள் திருவிளையாடல்கள் ஏராளம்! ஏராளம்!!*

*அடாவடி அராஜகப் பேர்வழிகளுக்குச் சிம்ம சொப்பனமாய், அன்பர்களுக்கு அள்ளிஅள்ளித் தரும் பெரும் வள்ளலாய், கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து, குறை தீர்த்து நிறை கொடுக்கும் கண்கண்ட தெய்வமாய், தம்மை அண்டிய மெய்யன்பர்களுக்கு, மெய் உணர்த்தி, பொய் நீக்கி, மெய்யாக்கும் மெய்ஞ்ஞான சற்குருவாய் திகழும் சங்கர பரமஹம்ச சுவாமிகள், தமது திருவாழ்வில் நிகழ்த்திய அருள் அற்புதங்கள் கடலினும் பெரிது. அதில் தெறித்த மிக சில அருள் அற்புதங்களே இத்திருநூலில் இடம் பெற்றுள்ளது.*

*இந்த தெய்வீகத் திருநூலைக் கண்ணுற்று, பார்த்துக் கேட்டு உள்ளுணர்ந்து, சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருளைப் பெற்று, மெய்ஞ்ஞான வழியில் நடப்பவர்கள், இகத்தே பரத்தைப் பெற்று பேரின்பச் சித்திப்பெருவாழ்வில் வாழ்ந்து நித்தியர்கள் ஆவார்கள் என்பது சத்தியம் ..... சத்தியம்.*

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க!

அன்பே சிவம்.

*அன்புடன்*

**திருஞானானந்தா சுவாமிகள்**
ஞானாலயா வள்ளலார் கோட்டம்

# அணிந்துரை



**முனைவர் பா. இளங்கோ**
*முன்னாள் துணை வேந்தர்*
*பாரதியார் பல்கலைக் கழகம், கோவை*

*இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகள் சொல்லக் கேட்டு, திரு. ஜி. சிவராமன் அவர்களால் தமிழில் எழுதப்பட்ட சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கவின்மிகு வரலாறு இந்நூல். தெய்வீக மணம் வீசும் இந்நூலுக்கு அணிந்தரை வரைவது எனது பெரும் பேறாகக் கருதுகிறேன். சற்று ஏறக்குறைய 150 ஆண்டுகளுக்கு முன் நெல்லை மாவட்டம் பாப்பாங்குளத்தில் ஆதி சைவ குலத்தில் அவதரித்து, 1943 வரை வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, மக்களுக்குப் பல நன்மைகளைச் செய்து, நல்வாழ்வு வாழ வழி காட்டி, வியத்தகு பல அற்புதங்கள் நிகழ்த்திய சீரிய சித்தர் மகான், சங்கர பரமஹம்ச சுவாமிகள்.*

*இவர் ஆற்றி சமூக சேவைகள், பிரமிக்க வைக்கும் சித்து வேலைகள், அவர் தம் மனித நேயம், குற்றம் காண்கையில் கொள்ளும் சீற்றம், இவை பற்றி எளிய இனிய தமிழில் எழுதி வழங்கி உள்ளார் திரு சிவராமன்,*

*வரலாற்று நிகழ்வுகளை எல்லாம் மனத்தில் இருத்தி, நினைவு கூர்ந்து, சுவைபடக் கூறிய இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகள் பாராட்டுக்குரியவர் தனது பத்து வயதில் சங்கர சுவாமிகளின் காட்சி கண்டு, இருபது வயதில் தீட்சை பெற்றவர்; அருளாசி அடைந்தவர்; சங்கர சுவாமிகளின் சித்து வேலைகளை நன்கு அறிந்தவர்; முக்கியமான சீடர்களில் ஒருவர்; இன்றும் சங்கர சுவாமிகளுடன் உரையாடக் கூடிய வல்லமை வெற்றவர்.*

2005-ஆம் ஆண்டில், திருஞானானந்தா சுவாமிகளிடம் நான் யோகா, தியானம் பயின்று கொண்டிருந்த போது 'பசி வந்திடப் பத்தும் பறந்திடும்' என்ற பழமொழியில், அந்தப் பத்து குணங்கள் என்ன என்று உசாவிட, அவர் தற்சமயம் ஞாபகம் இல்லை என்றார்.

பிறகு, சிறிது நேரம் தனியாகத் தியானம் செய்து விட்டு எங்களிடம் வந்து அந்த பத்து குணங்களையும் பாங்குறச் சொன்னார்; நாங்கள் அதிசயித்த போது, அவர் புன்னகைத்து, 'நான் என் குருவிடம் பேசி விடை பெற்றேன்', என்றார்.

சங்கர சுவாமிகளின் வரலாறு ஒரு துப்பறியும் நாவலின் விறுவிறுப்புடன் எழுதப்பட்டுள்ளது. படிப்பவர் மனது பரவசப்படும் பண்படும் நன்மை செய்யும் முனைப்பு எழும். மெய்ஞ்ஞானம் அடைந்திட ஐந்து புலன்களின் அடக்கம் தேவை என்ற உண்மை உள்ளத்தை வந்து உறுத்தும்.

சங்கர சுவாமிகள் இளம் பருவத்திலேயே சரியான உச்சரிப்போடு வேத மந்திரங்களை கணீர் என்று சொல்வது, ஆன்மிகச் செய்திகளை ஆழமாகப் பேசுவது, ஆன்மிகம் கடந்து ஞான உரைகள் ஆற்றுவத போன்ற கலைகள்அவரது வாழ்வின் சிறப்வுக்கு அடித்தளமாய் அமைந்ததைக் காண்கிறோம்.

இளம் பருவத்து மொழிப் பயிற்சி எவ்வளவு சிறப்பானது, அது ஒருவரது முன்னேற்றத்திற்கு எந்த அளவுக்குத் தேவை என்பதை இந்த வரலாறு உணர்த்துகிறது.

திருஞானானந்தா சுவாமிகளுக்கும் இளவயதுப் பயிற்சி, தமிழில் ஆழ்ந்த அறிவினையும், பேச்சுத் திறனையும், எழுதும் வல்லமையையும், ஆன்மிக உணர்வினையும் வாரி வழங்கியிருப்பதைக் காண்கிறோம்.

மொழிப்பயிற்சியோ, கணிதப் பயிற்சியோ சரிவர அளிக்காது, குழந்தைகளுக்கும், இளைஞர்களுக்கும் மதிப்பில்லா மதிப்பெண்களை வாரி வழங்கி, ஒன்பதாம் வகுப்பு வரை எழுதக் படிக்கத் தெரியாவிட்டாலும், கட்டாயத் தேர்ச்சியை சட்டமாக்கி, சுய சிந்தனைக்கு வாய்ப்பே அளிக்காது, எந்தத்

திறனையும் வளர்க்காது, வீண் பட்டங்களை வழங்கிடும் இன்றைய கல்விச் சூழலுக்கு, இந்நூல் ஒரு கலங்கரை விளக்கம்.

'இளமையிற்கல்' என்றார் ஔவை; 'முதுமையில் மண்', என்றார் பாரதி. நமது நாட்டுக் குழந்தைகளும், இளைஞர்களும் சுய அறிவும் திறமையும் மிக்கவர்கள். அவர்களை வீணடிக்காது இளைய வயதிலேயே சிறந்த கணிதப் பயிற்சியும், மொழிப் பயிற்சியும் அளித்தால், அவர்கள் பிரமிக்கத் தக்க அற்புத ஆற்றலைப் பெறுவர்; நாடு முன்னேறும். கட்டாயத் தேர்வுச் சட்டம், வீண் பட்டங்கள் இவை நாட்டின் ஆக்கத்தை அழித்துவிடும் என்பதில் ஐயமில்லை.

துப்பாக்குடியில் கோயில் பணி செய்து தனது ஆன்மிகப் பயணத்தைத் தொடங்கிய சங்கர சுவாமிகள், அய்யன் பட்டர் என்று பெயர் பெற்று, பாப்பாக்குடியில் குருக்களாக்கி, முதன் முதலாக நிகழ்த்திய அற்புதம், சூடம் எரியும் தூபக்காலையும், கோயில் மணியையும் ஆதாரமின்றி அந்தரத்தில் நிறுத்திக் காட்டியதுதான்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளது தவ ஆற்றலையும், கோபத் தெறலையும், பிடிவாத குணத்தையும் விளக்கும் நிகழ்வுகள் பல இந்நூலில் சுவைபடக் காணப்படுகின்றன கடையத்தில் உள்ள நித்யகல்யாணி அம்மன் கோயிலில் பூஜை செய்யும் எந்த பூசாரியும் மறு நாளே இறந்துபடுவர் என்பது பலமுறை நடந்தும், அக்கோயிலில் பூசாரியாகி, அச்சமின்றி பூஜை செய்து இறப்புக்கு காரணம் கண்டு, பரிகாரம் செய்து, கோயிலின் வரலாற்றையே மாற்றியவர், சங்கர சுவாமிகள். பின் அங்குள்ள மலைக் குகையினில் வாழ்ந்து, ஒளியாகி மறைந்து, திருச்செந்தூரில் தோன்றி, அங்கு பல அற்புதங்களை நிகழ்த்திய இவரது வரலாறு நம்மை பிரமிப்பில் ஆழ்த்துகிறது.

மண் குழியில் புதைக்கப்பட்டு, பின் உயிருடன் வெளி வருதல், விளக்கெண்ணெய் கொண்டு அருமையான உணவு சமைத்தல், பிள்ளை வரம் வழங்கல், விரும்பிய படி உருவம் மாறுதல் (பரகாய சித்தி), தீயவர்களைத் தண்டித்தல், தன் உடலையே

*துண்டு துண்டாக்கிப் பின் ஒன்று சேர்த்தல் (கண்டச் சித்து), நீர் மேல் நடத்தல், தன்னை வெட்ட வந்தவனுக்கு ஒன்பது உருவமாகக் காட்சி அளித்து அலறி ஓடச் செய்தல், ஒரே நேரத்தில் பல இடங்களில் தோன்றல், ரசவாதம் அறிந்து தங்கக் கட்டிகள் செய்தல், இளநீரில் மீன் குஞ்சுகளை வரவழைத்தல், அவருக்குக் கொடுமை செய்த காவல் அதிகாரி பெரியம்மை கண்டு இறத்தல், வாய்த் தம்பலம் கொடுத்து நோய் நீக்குதல், இறந்த பிள்ளையை உயிர்ப்பித்தல், வறுத்த கொள்ளினை முளைக்கச் செய்தல் போன்ற பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டிய சங்கர சுவாமிகளின் இந்த சிறப்பு வரலாற்று நூல் படிக்கப் படிக்கத் தெவிட்டாதது.*

*இந்நூலை வெளியிட அருள் புரிந்த இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகளுக்கும், நற்றமிழில் எழுதி வழங்கிய திரு. சிவராமன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த பாராட்டுக்கள்,*

அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை



அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி

*அன்பே சிவம்*

எல்லா உயிகளும் இன்புற்று வாழ்க!!!
கொல்லா நெறியே குருவருள் நெறி என குவலயம் எல்லாம்
ஓங்குக! வள்ளல் மலரடி வாழ்க! வாழ்க!!

***நா. வைத்தியநாதன்*** MA., ML., M.Sc., M.Phil.,
*மாவட்ட நீதிபதி*
*காரைக்கால், புதுவை மாநிலம்*



# திருச்சிற்றம்பலம்

*வாழையடி வாழையென வந்த திருக் கூட்ட மரபில் வராது வந்த மாமணியாய்த் திகழும் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்விய சரித்திரம், இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகளின் அருளாசியுடன், சிந்தனைச் சிற்பி ஜி.சிவராமன் அவர்களால் எழுத் தோவியமாக எழுதப்பட்டுள்ளது என்பதற்கு பதிலாக தீட்டப்பட்டுள்ளது என்று சொன்னால் மிகவும் பொருத்தமாக இருக்கும். அப்படிபட்ட ஒப்பற்ற ஞான சித்தரின் சகாப்தத்திற்க்கு அணிந்துரை எழுத பணித்த, எமது ஞான குருநாதராக விளங்குகின்ற இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகளின் திருவடிகளைப் போற்றி இந்த அடியேனின், சிறு கனிந்துரையை, குருவின் திருவடிகளே திருவருளோடுக் கூட்டி வைத்ததாக எண்ணி, ஞான தாயாகிய குருவுக்கு அன்பின் காணிக்கையாக சமர்ப்பிக்கின்றேன்.*

*நம் தென்னாட்டுச் சித்தர்களில் பலர் உலகின் பல பகுதிகளுக்கும் சென்று பலவிதமான அற்புதங்களை நிகழ்த்தியவர்கள்.*

*நினைத்த மாத்திரத்தில், உடலை லோசாக்கி கொள்ளுதல், உடலை கனமாக்கி கொள்ளுதல், உலகத்தை தன் வசப்படுத்து தல், தன் கட்டளைக்கு அடிபணிய வைத்தல், இறந்தாரை எழுப்புதல், நீர்மேல் நடத்தல், கண்டச்சித்து, அட்டமா சித்தி, பரகாய சித்தி மற்றும் பல இடங்களில் தோன்றுவது போன்ற கலைகளை கற்று வைத்திருந்தார்கள். பெரும்பாலும் சித்தர் பிரான்களின் சித்தாடல்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தவும், நோய் நொடிகளைத் நீக்கி, மேன்மேலும் அவர்களை நல்வழிப்படுத்தி ஞானத்தை உபதேசிக்கவும், சித்தர்களால் மேற்கொள்ளப்பட்டது.*

*சங்கர பரமஹம்ச சுவாமிகள் நிகழ்த்திய சித்தாடல்கள் அதற்கு முன்னரும் பின்னரும் பற்பல சித்தர்களால் நிகழ்த்தப்பட்டவை என்பதை அறியும் போது சங்கர சுவாமிகளின் மேம்பட்ட சித்தர் நிலையை உணர முடியும்.*

*மக்களின் வாழ்க்கை முறைக்கு உதவும் சித்தாந்தங்கள் 18.*

*அவைகள் - சூரிய, பிரம்ம, வியாச, பராசா, அத்திரி, ரோமே, வசிஷ்ட, நிரிசிமனு, பௌலக, யவன, சௌனக, மனு, பிருகு, சனக, ஆங்கிரஸ, சச்சியப, கர்காசாரிப, நாரத சித்தாந்தங்கள் ஆகும்.*

*ஜோதிட சாஸ்திரம் சூரிய சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டது.*

*சிவன் பால் பற்றுக் கொண்டு சைவ மதத்தை தழுவிய அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் போன்றோர் தேவார திருமறைப் பதிகங்களை பாடி, ஆலயக் கதவுகளை தாமே திறக்கச் செய்தும், மூட செய்தும், இறந்தவர்களை பிழைக்க வைத்தும், தீராத நோய்களை தீர்த்து வைத்தும் நிரூபித்து உள்ளனர்.*

*அது போல் வைணவ மதத்தை தழுவிய பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசை யாழ்வார், மதுரகவியாழ்வார், நம்மாழ்வார், குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகிய 12 ஆழ்வார்களும். தங்களது தனித் தன்மையை நிரூபித்து உள்ளனர்.*

*ஞானிகளின் ஞான நிலைகள் நான்கு வகைப்படும்*

*கூடீசகம்,பகூதகம், ஹம்சம்,பரமறம்சம்.*

*இதில் பரமஹம்சம் என்பதே உச்சநிலை. இறைத்தன்மையை உணர்ந்து, இறைத்தன்மையோடு இரண்டறக் கலந்து, இறைத்தன்மையாகவே வாழ்பவர்கள். இந்த வழியில் வந்த சங்கர சுவாமிகளின் இறைத்தன்மை, உச்சநிலையில் திகழ்ந்ததால், அவர் சங்கர பரமஹம்சர் எனப் போற்றி வணங்கப்படுகிறார்*

*தீமைகள் எல்லாம் வேரறுத்து நன்மைகளை நிலை நிறுத்த வல்லவராக வலம் வரப் போகிறவர் என்ற எண்ணத்தில் இப்பெயரை சூட்டி உள்ளார்கள்.*

*பகவத் கீதை*

பரித்துருரானாய சாதுனாம்!
வினாசாய சதுஸ்கிருதாம்!
தர்ம சமஸ்தாபனசாயே!
சம்பவாமி யுகே! யுகே!

*என்று தர்மத்தை நிலைநாட்ட கிருஷ்ண பரமாத்மா அவதாரம் எடுத்தது போல், நமக்கு கிடைத்த பெரிய மகான், சங்கர பரமஹம்ச சுவாமிகள் ஆவார்.*

*அவருடைய மகா வாக்கியம் ''சங்கர, சங்கர சம்போ. தீருமூலரின் திருமந்திரம் ''ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்கிறது.*

*திருஅருட்பிரகாச வள்ளலாரின்*

அருட்பெருஞ்ஜோதி, அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

*மகா மந்திரமாக உள்ளது.*

*வாழ்க வையகம் வாழ்க வளமுடன் என்கிறார் வேதாத்திரி மகரிஷி அவர்கள். எங்களின் அன்பு நிறைந்த ஞானகுருவான திருஞானானந்தா சுவாமிகள் 'அன்பே சிவம் அன்பே சிவம்' என்கிறார்.*

*அவருக்கு ஞான உபதேசம் தந்த சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு அணிந்துரை எழுத இப்பிறவியில் என்ன பாக்கியம் பெற்றேனோ! என இறைசக்திக்கு நன்றி உடையவனாக உள்ளேன். அவரது சின்னஞ்சிறு பிராயத்தில், ஒளி முகம் கொண்ட மேனியும், பேரொளி மிக்க கண்களும் எல்லாரையும் ஈர்க்கும் வகையில் ஜோதி மயமாய் வலம் வந்தார் என்பது எல்லோரும் அறிந்ததே.*

'ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டேசு - **திருமந்திரம்**

''அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி ...''

*என்னும் தாயுமானவர் வாக்குப்படி இந்தப் பிரபஞ்சம் முழுவதும் நீக்கமற நிறைந்தோங்கும் இறைவனைக் கண்டு, அவன் கமல மலர் பாதங்களை சரணடைய வேண்டுமாயின், முதலில் இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றி அறிய வேண்டும்.*

*குருவை அறிந்தால் தன்னை அறியலாம், தன்னை அறிந்தால் தலைவனை அறியலாம். தலைவனை அறிய பிரபஞ்ச ரகசியங்களை அறியலாம். பிரபஞ்ச ரகசியங்களை அறியாவிடில் எதையும் அறிந்துணர முடியாது. எனவே அறிந்து உணர அடியேனுக்கு அருள்வாய்.*

''சித்தாகி சிவமாகி சத்து சித்தானந்த
முத்தாகி எத்திக்கும் தித்திக்கும் அமுதாகி
ஊற்றெழும் கங்கையை உறவாக்கி விட்டானை
போற்றினேன் போற்றினேன் வாழ்க பல்லாண்டு

அன்பாகி அறிவாகி அறிவெனும் சிவமாகி
சிவமெல்லாம் தாயாகி தாயெலாம் சேயாகி
சேயெலாம் சிவமாகிப் பார்த்தவர் மகிழ்ந்திட
என் போன்ற அடியேனை என்புருக அன்பொழுகி

வாரியணைத் தான் அம்மையே அப்பா
அணுவாகி அணுவுக்குள் ஓங்கார ஒளியாகி
விண்ணாகி மண்ணாகி கனலாகிக் காற்றாகி
வெளியாகி நின்று மனத்தினை ஆண்ட என்கோவே''

*பசி என்பது இறைவன் கொடுத்தக் கொடை என்கின்றனர் ஆன்றோர் பெருமக்கள். பசி என்னும் இயற்கைவேட்கை, உள்ளிருந்து உந்தவில்லை எனில் உணவு ஏன்? அதை உருவாக்கும் உழைப்பு ஏன்? உயிர்களும் இல்லை, உலகும் இல்லை அன்றோ.*

*பசியில் எத்தனை வகைப் பாரீர்*

1. வயிற்றுப் பசி
2. அறிவுப் பசி
3. அன்பு பசி
4. அருட் பசி
5. அறப் பசி

*அனைத்து பசியையும் உள்ளே அடக்கி வைத்து, அதை உடம்பிலே, மூலக் கனல் வாயிலாகத் தருபவன் இறைவன் ஒருவனே. இதைத்தான் பரிந்துரைத்து விளக்குகின்றார் திருமூலர்.*

*கொலை செய்து வருகின்ற கொடியவனே ஆனாலும் அவன் பசி என்று கேட்கும் நிலையில், அவனது பசியை ஆற்ற வேண்டும் என்கிறார் வள்ளலார் பெருமான்.*

*இரக்கமற்றவர்களும் கூட பசியால் வாடுபவர்களைப் பார்த்து பசிக் கொடுமையை உணர்ந்து ஒருகைப்பிடி உணவளிப்பார்கள்.*

“அற்று நின்றால் உண்ணும் ஊனே
அறனென்றும் கற்றன''

''யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானேசு - **திருமந்திரம்**

''அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு''.

''யாதெனின் யாதெனில் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'' - **திருக்குறள்**

*ஒருவன் எந்தெந்தப் பொருள்களில் இருந்து, பற்று நீங்கியவனாக இருக்கின்றானோ, அந்தந்தப் பொருள்களால், அவன் துன்பம் அடைவதில்லை என்பதற்கு இணங்க பல சித்தாடல்களை கற்று இருந்தார் சங்கர பரமஹம்ச சுவாமிகள்.*

*சங்கர பரமஹம்ச சுவாமிகள் தங்கள் சீடர்களுக்கு, குருவாய், தந்தையாய், தாயாய், தெய்வமாய் அருகிலிருந்து அருள் தந்தார்.*

*அவருக்கு மிகவும் பிடித்த பாடல்,*

''வழிபடு மெய்ஞ்ஞானம் வாய்க்கும் வழிகோளாய்
சுழினை என்னும் அவ்விடம் கருத்தும் விழி வைக்கும்
சாதகத்தினால் ஆண்டொன்று தப்பாமல் சாதிக்கில்
பேதகம் ஒன்றில்லை பிடி''.

*அவர் தம் திருவாயில் உச்சரிக்கும் திருவாக்கியம்.*

''சங்கர சங்கர சம்போ, சிவ சங்கர சங்கர சம்போ,

இறைவனது திருவடிகளைப் பற்றிக் கொண்டவர்கள் சித்தாடல்களில் சிறந்து விளங்குவார்கள் என்பதற்கு உதாரணமாக சங்கர பரமஹம்ச சுவாமிகள் விளங்கினார்கள் என்கிற உண்மை மெய் சிலிர்க்க வைக்கிறது. சித்து விளையாட்டுகளில் சில்லரையை தேடியவர்கள் சிதறும் தேங்காய் ஆனார்கள். சித்தாடல்களில் அன்பைத் தேடியவர்கள் இறைவடிவம் ஆனார்கள்.

குறிப்பாக

1. நீர்மேல் நடந்தது
2. இறந்தாரை எழுப்பியது
3. அட்டமா சித்து
4. மீன் வரவழைத்தல்
5. பரகாய சித்தி
6. பல இடங்களில் தோன்றுவது
7. வாய்த் தம்பலம்
8. வறுத்ததை முளைக்க வைத்தல்
9. ரச வாதம்

சிதம்பரத்தில் ஆடவல்லான் சிலையை அமைக்க, திருமூலர் ரசவாதம் செய்தது நிலைத்திருக்கும் வரலாறு. அதுபோல அம்பாசமுத்திரத்தில் அகத்தியர் சிலை நிலைத்திருக்க சங்கர சுவாமிகள் அருள் செய்துள்ளார். சுவாமிகளின் திவ்விய சரித்திரத்தை, அவர் நிகழ்த்திய அற்புதங்களைப் படிப்போரும், கேட்போரும், அதன் வழி நடப்போரும் எல்லாம் வல்ல அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரின் தனிப் பெருங் கருணையினாலும் குருவருளின் திருவருளினாலும், நன்மனை, நன்மக்கள், நல் ஆரோக்கியம், நிறை ஞானம், நிறை கீர்த்தி, நிறை செல்வம், நிறை வல்லமை, நீள் ஆயுள் பெற்று நிறைவாக வாழ்வார்கள் என்பது திண்ணம்.

திருஞானானந்தா சுவாமிகளுடன் இமயத்தில் உள்ள ஜோதிபர்வத மலையில் அமைக்கப்பட்டுள்ள திருவருட்பிரகாச வள்ளல்பெருமானின் திருக்கோயிலை தரிசிக்க ஒரு வாய்ப்பு

கிடைத்தது. அதில் நானும் என்னுடன் பணி புரியும் திரு. செல்வகுமார் மற்றும் வெங்கடேஷ் அவர்களும் கலந்து கொண்டோம். அங்கு நாங்கள் உணர்ந்த, சுவாமிகளுடைய உண்மையும், அன்பும், ஒழுக்கமும், பெரியோர்களிடத்திலும், பெண்களிடத்திலும் காட்டிய தூய்மையான பரிவும் எங்களால் மறக்கவே முடியாதவை. மீண்டும் ஒருமுறை அந்த வாய்ப்பு கிடைக்கும் எனில், இறைஆற்றலுக்கு நன்றிக் கடன் பட்டவர்களாக இருப்போம் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. குறிப்பாக சுவாமிகளோடு இமயமலைச் சாரலில் பயணித்த போது எந்தவித பயமும், பசியும் இன்றி இறையருளைப் பெற துணையாக இருந்தார்.

அத்திரி மகரிஷி, அகத்தியப் பர்வதம், மகா அவதார் பாபாஜி குகை, ஏசுநாதர் தவம் செய்த குகை போன்ற இடங்கள், தற்போது நான், எப்பொழுது தவநிலையில் இருந்தாலும், என் கண் முன்னே வந்து செல்கின்ற அப்படியொரு அரிய பொக்கிஷப் புதையல். அதை, எங்களுக்கு எந்தவித பாரபட்சமும் இன்றி அள்ளித் தந்தவர் திருஞானானந்தா சுவாமிகள். அவர் சன்மார்க்க உலகத்திற்கு கிடைத்த ஒரு நடமாடும் வள்ளல், வாழும் சி த்தர். சின்னஞ்சிறு வயதிலே கங்கை நதியையேக் கடக்கும் துணிச்சல் என்று அவருடைய தவ ஆற்றலுக்கு எத்தனையோ எடுத்தக்காட்டுகளை கூறலாம். அப்படிப் பட்ட ஒரு மகானை சன்மார்க்க உலகத்திற்கு ஆசானாக, வழிகாட்டியாக, ஒரு தலைவனாக ஏற்று நடந்தோமேயானால் உலகமே ஒரு சன்மார்க்க குடையின் கீழ் வரும் என்பதில் ஐயமில்லை. கண்யாகுமரியில் இருந்து இமயம் வரை பரவியிருக்கும் சன்மார்க்க புகழ், அவர் மூலம் உலகமெல்லாம் பரவி நிற்க நாங்கள் எப்பொழும் துணை நிற்போம்.

‘‘அப்பா நான் வேண்டுதல் கேட்டு அருள் புரிதல் வேண்டும்
ஆருயிர்க் கெல்லாம் அன்பு செய்ய வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே
எந்தை நினது அருட் புகழை இயம்பிடல் வேண்டும்
செப்பாத மேனிலை மேல் சுத்த சிவ மார்க்கம்

திகழ்ந்தோங்க அருட்ஜோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான் செயினும் நீ பொறுத்தல் வேண்டும்
தலைவ நினைப் பிரியாத நிலைமையும் வேண்டுவனே''

**- திருவருட்பா**

*என்ற வள்ளல் பெருமான் அருளிய அருட்பாவை நாங்கள் மீண்டும், மீண்டும் அவருக்காக பாடிப் பணிந்து இந்த அணிந்துரையை சமர்ப்பிக்கின்றேன்.*

அன்பே சிவம்

**- நா. வைத்தியநாதன்**

# ஞானிகளின் படி நிலைகள்

ஞானிகளின் ஞானநிலைகள் நான்கு வகைப்படும்.

கூடீசகம், பகூதகம், ஹம்சம், பரமஹம்சம் என்பனவே. இவை நான்கும் ஞானப்படிநிலைகள்.

இவற்றில் பரமஹம்சம் என்பது உயர்நிலை.

பரமஹம்ச ஞானிகள் ஞானத்தின் உச்சநிலையைத் தொட்டவர்கள். இறைத் தன்மையை உணர்ந்து, இறைத் தன்மையோடு இரண்டறக் கலந்து, இறைத் தன்மையாகவே வாழ்பவர்களே உண்மையான பரமஹம்சர்கள்.

சங்கர சுவாமிகளின் இறைத்தன்மை உச்சநிலையில் திகழ்ந்ததால், அவர் சங்கர பரமஹம்சர் எனப் போற்றி வணங்கப்படுகிறார்.

# சங்கர பரமஹம்ச சுவாமிகளின்
# திவ்விய சரித்திரம்

*இன்றைக்குச் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னர், திருநெல்வேலி மாவட்டம் முக்கூடல் அருகில் இருக்கும் பாப்பாங்குளம் என்னும் சிற்றூரில் சங்கர சுவாமிகள் அவதரித்தார்.*

*அருட் தன்மை மிக்க சுந்தரமூர்த்தி நாயனார் வம்சம். தமிழ் மரபு ஆதி சைவ குலத்தில், சிவாலய பூஜை செய்யும் ஒரு குடும்பத்தில் தோன்றிய அவருக்குப் பெற்றோர் சூட்டிய பெயர் சங்கரர்.*

*தீமைகளை எல்லாம் வேரறுத்து, நன்மைகளை நிலைநிறுத்த வல்லவராக வலம் வரப் போகிறவர் என்ற எண்ணத்தில் தான் இப்பெயரைப் பெரியவர்கள் சூட்டியிருப்பார்கள் போலும்.*

*சங்கரர் என்றாலே குற்றத்தை நீக்கி, ஒளிப்பிழம்பாய்த் திகழ்ந்து மங்கலத்தைத் தருபவர் எனப் பொருள். அது பொய்யாகவில்லை.*

*'ஒரு நூறாண்டுக்கு ஒரு மகான் தோன்றுவார்' என்பது ஆன்மிகக் கணக்கு. அக்கணக்கை மெய்ப்பிக்கவே சங்கரர் பூவுலக சஞ்சாரம் செய்ய அவதாரம் எடுத்தார்.*

*பாப்பாங்குளத்தில் உள்ள வடக்கு வாசல் செல்லியம்மனே சங்கரரது குலதெய்வம். இருப்பினும் மிகமிக அருகிலிருக்கும் துப்பாக்குடியில் உள்ள கோயிலில் குருக்களாய்ப் பூஜை செய்து வந்தனர், சங்கரரது மூதாதையர்.*

*இளம் பிராயத்தில் சங்கரர், ஜபதபங்களில் சிறந்து விளங்கினார். அவரது ஒளி மிகுந்த மேனியும், பேரொளிமிக்க கண்களும் எல்லோரையும் ஈர்த்தன. பார்த்தவர்கள் எல்லாம்*

திரும்பத்திரும்பப் பார்க்க எண்ணும் படியாக ஜோதிமயமாய் வலம் வந்தார்.

அச்சிறுவயதிலேயே சங்கரர் கோயில் பணிகளிலும் ஈடுபடலானார். குல வழக்கப்படி சங்கரர் அருகிருந்த கோயிலில் சிவாலய பூஜை செய்து வந்தார்.

பொதுவாகப் பூஜை செய்பவர்களைக் குருக்கள், சாமிகள், அய்யர், அய்யன், பட்டன் என்று அழைப்பது தமிழகத்து வழக்கம்.

அந்த வகையில் சங்கரரைச் சிலர் 'பட்டர்' என்று அழைத்தனர். சிலர் 'அய்யன்' என்று கூப்பிட்டனர். இன்னும் சிலரோ 'அய்யன் பட்டர்' என்று பெயரிட்டு அழைத்தனர். எப்படியோ ''அய்யன் பட்டர்'' என்ற நாமகரணமே நிலைத்து நின்றது.

இளம் பருவத்திலேயே சரியான உச்சரிப்போடு வேத மந்திரங்களைக் கணீர் என்று சொல்வது, ஆன்மிகச் செய்திகளை ஆழமாகப் பேசுவது, ஆன்மிகம் கடந்து ஞான உரைகளாக எடுத்துரைப்பது போன்றவை சங்கரருக்குக் கைவந்த கலையாக இருந்தன.

தக்க காலத்தில் பெற்றோரும் உற்றோரும் சேர்ந்து அய்யன்பட்டருக்கு ஓர் அருமையான பெண்ணைத் தேர்வு செய்து திருமணம் செய்து வைத்தனர்.

மனைவியாய் வாய்த்த மங்கை நல்லாள் துணையோடு இனிய இல்லறம் நடத்திய சங்கரருக்குப் பெயர் சொல்ல ஓர் ஆண் மகவு பிறந்தது.

பொதுவாக ஆன்மிக உரம் பெற்றவர்கள் அறத்திற்கும் ஆன்மீகத்திற்கும் புறம்பான செயல்களுக்கு இடம் தரமாட்டார்கள். கோயில் உண்டு, குடும்பம் உண்டு என்று வாழ்ந்து வந்த அய்யன்பட்டரும் அப்படியே.

அவர், அறத்திற்கும், ஆன்மிகத்திற்கும் புறம்பான செயல்களை எதிர்க்கவும் செய்தார். ரௌத்ரம் அவர் குணமாயிருந்தது. எதையும் சட்டென விடுத்து, விலகிவிடும் போக்கு அவருக்கு இயற்கையில் இருந்தது.

ரௌத்ரம் உச்சமடைகிறபோது மட்டுமின்றி. யதேச்சையாகப் பேசும் போது கூட சில கெட்ட வார்த்தைகள் அவர் வாயில் இருந்து தெறிப்பது சகஜமாயிருந்தது.

அவரது ரௌத்ரத்தில் வரும் வார்த்தைகள் பலரைத் திருத்தி இருக்கின்றன. அவர் வார்த்தைகளில் ரௌத்ரம் இருந்ததே தவிர உள்ளத்தில் அன்பு மட்டுமே பூரணமாகப் பூத்திருந்தது. அதுவே அவரது ஆன்மிகப் பலமாக இருந்தது.

எல்லோரிடமும் வித்தியாசம் பாராமல் சரி சமமாகப் பழகியதால், வார்த்தைகள் மட்டும் சற்று வன்மை. அது அவருக்கான தனித்துவத்தைத் தந்தது என்று கூடச் சொல்லலாம்.

துப்பாக்குடியில் கோயில் பணி செய்து வந்த அய்யன்பட்டருக்கு அருகில் இருக்கும் பாப்பாக்குடியில் குருக்கள் வேலை கிடைத்தது. அதைச் செவ்வனே செய்து வந்தார்.

அப்போதெல்லாம் அவர் சித்தர் நிலையை எட்டியிருந்தாரா, சித்து வேலைகளை வெளிக்காட்டாமல் இருந்தாரா என்பது குறித்துத் தகவல் இல்லை. இது வெளிப்பட்ட சம்பவம் மட்டும் வெளிச்சத்திற்கு வந்திருக்கிறது.

அய்யன்பட்டரைப் பற்றிப் பாப்பாக்குடியில் இருந்த சிலருக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை. அவதூறு செய்தார்கள். தப்பாகப் பேசினார்கள்.

ஒரு நாள் அவர்கள், அய்யன்பட்டர் கோயிலிலேயே தவறுகள் செய்வதாகச் சொல்லி ஊரையே கோயில் முன் திரளச் செய்திருந்தனர்.

கோயிலில் பூசை செய்து கொண்டிருந்த அய்யன்பட்டர், அவர்கள் செயல்களால் வெகுண்டு, அந்தரத்திலேயே சூடமெரியும் தூபக்கால், ஒலி எழுப்பும் மணியை விட்டு விட்டுக் கோயிலை விட்டு வெளியேறினார்.

இச்சம்பவம் மூலம் மூன்று விஷயங்கள் வெளிப்பட்டன. ஒன்று அய்யன்பட்டரின் தவஆற்றல்; இரண்டு அவரது ரௌத்ரம்; மூன்று அவரது பிடிவாதம்.

இம்மூன்றும் தாம் அவரது சிறப்பாக இன்று வரை பேசப்பட்டு வருகின்றது.

அவரது தவ ஆற்றல் சித்துகள் உலகெங்கும் பல அன்பர்களை அவரது அடிமைகளாகக் கொண்டிருக்கிறது. அவரது ரௌத்ரம் பல அன்பர்களை நல்வழிப்படுத்தி உள்ளது. அவரது பிடிவாதம் பல்வித அற்புதங்களை உலகுக்கு வழங்கி உள்ளது.

இம்மூன்றுக்கும் ஆயிரமாயிரம் சான்றுகள் உள்ளன. ரௌத்ரத்தில் அவர் உதிர்த்த வார்த்தைகள் கூட இன்றளவும் நினைவு கூரப்படுகின்றன.

இந்த நிகழ்வுக்குப் பின்னர் அய்யன்பட்டர் தன் பாட்டுக்குத் தேச சஞ்சாரம் செய்யத் தொடங்கினார். 'சித்தன் போக்கு சிவன் போக்கு' என்பதே அவர் பாணி. இக்காலகட்டத்தில் அவர் சங்கர சுவாமிகள் என்று அழைக்கப்பட்டார்.

கடையத்தில் அருள்மிகு ஸ்ரீ நித்யகல்யாணி அம்மன் அருள்பாலிக்கும் திருக்கோயிலில் ஒரு முதிய பெண்மணி தொண்டு செய்து வந்தார்.

அக்கோயிலில் தேவிக்குப் பூஜை புனஸ்காரம் செய்யும் எந்த ஒரு குருக்களும் மறுநாள் மரித்துப் போவார். முதல் நாள் பூஜை, மறுநாள் பாடை என்ற நிலையே இருந்து வந்தது.

பாப்பாக்குடியில் குருக்கள் வேலையை விட்டு விட்டுக் கடையம் பக்கம் வந்த சங்கர சுவாமிகள் அந்தப் பெண்மணி கண்ணில் பட்டார். அன்றைய வழிபாட்டுக்குச் சுவாமிகளை அழைத்தார்.

அந்த மூதாட்டி கோயிலின் தன்மையைக் கூற, தேவியின் ஆளுமையைப் புரிந்து கொண்ட சங்கர சுவாமிகள் அதுவரை ஏற்பட்டிருந்த பிரச்சினைகளைத் தன் தவ வலிமையால் தீர்த்து வைத்தார்.

அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க அக்கோயிலில் பணி தொடர்ந்தார்.

பூஜையின் போது யாரும் குறுக்கிடக் கூடாது, உத்தரவிடக் கூடாது, அம்மன் கூடத் தலையிடக் கூடாது என்பதே அவர் நிபந்தனை. அதற்கும் ஒரு நாள் தொந்தரவு வந்தது.

ஜமீன்தார் கோயிலுக்கு வருவதை உரத்துச் சொல்லிய வண்ணம் வந்தவனின் குரல் பூஜையிலிருந்த சங்கர சுவாமிகளுக்கு எரிச்சலைத் தந்தது.

‘எவனோ வர்ரானாம்... நான் பூஜையை நிறுத்தணுமாம்... நீயே பாத்துக்கோ’ என்று அம்மனிடம் சொல்லிவிட்டுக் கோயில் பணிக்கு விடை தந்துவிட்டு வெளியேறினார் சங்கரசுவாமிகள்.

இங்கும் அந்தரத்தில் மகா தீபத் தட்டையும், மணியையும் விட்டுவிட்டு வெளியேறினார். பாப்பாக்குடியில் நேர்ந்த அதே சூழல். சுவாமிகளின் அதே ரெளத்ரம். பின்னர் அக்கோயிலுக்கும் அவர் செல்லவில்லை. அதே பிடிவாதம்.

கோயிலின் பின்புறம் ஓர் அழகான மலை. அடர்ந்த காடு. ஆர்ப்பரிக்கும் விலங்குகள் எனச் சித்தர்களுக்கு ஏற்ற சிறந்த மலை.

அதில் இயற்கையே ரசிக்கும் ருசிமிகு சுனை. அமைதி தவழும் தவக் குகை.

அங்கு போன சங்கர சுவாமிகளுக்கு அந்த மலையும், சுனையும், குகையும் பிடித்துப் போயின.

அதோடு தவமே அவரது வாழ்வானது.

சுவாமிகள் அக்குகையில் தங்கியிப்பதும், தவமிருப்பதும் ஊரார்க்கு எட்ட, அன்பர்கள் அவரைத் தரிசிக்க வந்தனர். மெளன சாட்சியாய்ச் சுவாமிகளின் அருளாட்சி சித்தர்மலையில் தொடர்ந்தது. அந்த மலை ஆன்மிகச் செறிவில் ஒளிர்ந்து நிரம்பியது.

ஒரு நாள் மாலை தென்றல் தவழ்ந்து மூலிகை மணம் மலையெங்கும் பரவியிருந்த வேளை.

அன்பர்கள் சங்கர சுவாமிகளைச் சூழ்ந்திருந்த நேரம். அன்பர்களிடம் அளவளாவிக் கொண்டிருந்த சுவாமிகள் திடீரென என்ன நினைத்தாரோ, எழுந்தார். தவக்குகைக்குள் சென்றார்.

சிறிய குகை என்பதால் உள்ளே நடப்பது வெளியே அமர்ந்திருக்கும் அத்தனை பேருக்கும் தெரியக் கூடியதாய் இருந்தது. அன்பர்கள் செயல்பாடுகளைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென ஓர் ஒளி; ஆயிரம் கோடிச் சூரியன்கள் இணைந்த பேரொளி. ஒரு கணம்தான். சுவாமிகள் இறையோடு இறையாக இரண்டறக் கலந்தார். மறைந்தார்.

தவக்குகை வெற்றிடமானது அன்பர்களின் ‘சங்கரா சங்கரா’ என்ற ஓங்கார ஒலி அந்த வெற்றிடத்தை மட்டுமல்ல வெளிப்பரப்பையும் நிரப்பியது.

இச்சம்பவம் தான் அவரது சித்தர் தன்மையை முதன் முதலில் உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டியது.

அதன் பின்னர் அவர் அருவாய் அம்மலையில் சஞ்சாரம் செய்து கொண்டிருப்பதாகப் பலரும் நினைக்க, உருவாய்த் திருச்செந்தூர் சுற்று வட்டாரத்தில் உலா வரலானார்.

இது சித்த பெருமான்களுக்கே உரித்தான சித்தயோகம் அன்றி வேறென்ன?

திருச்செந்தூர் சுற்று வட்டாரத்தில் அவர் நிகழ்த்திய அற்புதங்கள் ஏராளம் ஏராளம். அதனால் அப்பகுதிகளில் அவருக்கு அநேக அன்பர்கள் குவிந்தனர். அவர்களுக்கு ஆன்மிக வழிகாட்டியாக விளங்கியதோடு அன்றாட வாழ்க்கைக்கு வழித்துணையாகவும் இருந்து வந்தார்.

இக்காலகட்டத்தில் அன்பர்கள் மூலமாகவும் சில நிகழ்வுகளை நிகழ்த்திக் காட்டி பல வாழ்வியல் சூத்திரங்களைக் கற்றுத் தந்தார்.

ரௌத்ரமும், சாபமும், தண்டனை வழங்குதலும் அவரது அடிப்படை குணங்களாயிருந்த போதிலும், இன்னொரு புறம் கருணையும், தயவும், அரவணைப்பும் அருங்குணங்களாய் ஒளிர்ந்தன.

இயல்பாய் அவரிடத்தில் எல்லோருக்கும் ஓர் ஈர்ப்பு இருந்தது. இது நாளொரு மேனியும், பொழுதுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தது.

ரௌத்ர சுவாமிகள் என்பதே பெரும்பாலானவர்களின் எண்ணமாயிருந்தது. அன்பர்களும், உறவினர்களும் பயந்தபடியே தான் அவரிடம் நெருங்கினர். ஆனால் அவரது அருளுக்காக அனைவரும் எத்தனை நாள் வேண்டுமானாலும் காத்திருந்தனர்.

நோய் நொடி என்று வருவோருக்குத் திருநீறு வழங்குவார். பலருக்கும் உடனே சரியாகி விடும்.

சுவாமிகளுக்குக் குழந்தைகள் மீது கொள்ளைப்பிரியம் தானும் குழந்தையாகி அவர்களுடன் விளையாடி மகிழ்வார்.

பெண்களிடத்தில் அளவற்ற மரியாதை உண்டு. பெண்களைத் 'தாயே' என்று அழைத்துத் தயை காட்டுவார். அம்மன் வடிவமாகவே நினைத்துப் பெண்களைப் போற்றி வந்தார்.

ரவுடித்தனம் அவருக்கு வெறுப்பூட்டும் விஷயம்.

தவநிலையிலேயே ரவுடிகளை அடையாளம் கண்டு நேரடியாக வம்புக்குப் போய்க் கடுந்தண்டனை கொடுத்துவிட்டுத் தான் அடுத்த காரியம் பார்ப்பார். ரவுடிகளிடம் சதா காலமும் சண்டை போடுதல் அவரது வாடிக்கை.

சில சமயம் ரவுடிகள் ஒன்று சேர்ந்து சுவாமிகளை அடித்து இரத்தம் ஒழுகச் சாலையில் போட்டுவிட்டுச் செல்வார்கள். 'இனிச் சுவாமி அவ்வளவுதான்' எனக் கொக்கரித்தபடி அவர்கள் செல்லும் போது எதிர்ப்புறத்தில் அப்போது தான் குளித்து முடித்து பூஜை செய்து விட்டு வருபவர் போல் புத்தம் புதியராய் ஒளி பொருந்தியவராய் ஒன்றுமே நடக்காத மாதிரி வருவார்.

ஒருமுறை ஏரல் தாமிரபரணி ஆற்றங்கரையில் சுவாமிகளை அடித்துக் கிணற்றில் தூக்கிப் போட்டு விட்டுப் போய் விட்டார்கள். 'சுவாமிகள் தொலைந்தார்' என ஆடல் பாடலுடன் இருந்தவர்களுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. அவர்களுக்கு முன்னர், ஏரல் கடை வீதியில் சுவாமிகள் திருநடனம் புரிந்த வண்ணம் எதிரே வந்து கொண்டிருந்தார்.

ரவுடிகளைத் திருத்துவதிலும், தண்டிப்பதிலும் அலாதி விருப்பத்தோடு சித்து வேலைகளைக் காட்டுவார்.

அதிகம் பேசமாட்டார். 'சங்கர சங்கர சம்போ' தான் அவரது உள்ளமும், வாயும் உச்சரிக்கும் வேத மந்திரம். எதையும் காணாதது போல் போய்க் கொண்டிருப்பார். ஆனால், எல்லாம் அவருக்குத் தெரியும்.

நான்கு இடங்களில் அவர் சமாதி கொண்டதாகச் சொல்வார்கள்.

சமாதியாவதாகச் சொல்லிக் குழி பறிக்கச் சொல்லி குழிக்குள் அமர்ந்து கொண்டு மண்போட்டு மூடச் சொல்வார். கண்ணீர் மல்க அவர் சொன்னதைச் செய்து கொண்டிருப்போர் பின்புறம் நின்றபடி 'எலே, யாரெலெ வச்சு மூடி இருக்கே' எனப் பரிகசித்துச் சிரிப்பார்.

திருச்செந்தூர் செந்தில்வேலன் திருக்கோயில் சூரசம்ஹார மேடையை அடுத்து கடற்கரை அருகே சங்கர சுவாமிகள் இறைலயமான திருக்கோயில் உள்ளது.

இங்கு தான் 1943-ஆம் ஆண்டு பங்குனி மாதம் மக நட்சத்திரம் கூடிய திருநாளில் சங்கர சுவாமிகள் சித்தி அடைந்தார்.

வடக்குப் பாப்பாங்குளம் என்ற ஊரில் சுவாமிகளின் வம்சாவளியினர் வசித்து வந்தனர். அவர்களில் சுவாமிகளின் பேரன் அழகர் பட்டாச்சார்யா மீது மிகுந்த பற்றும் பாசமும் கொண்டவர் சுவாமிகள். அவர் தான் சுவாமிகளுக்கு உணவு தயாரித்துப் பல காலம் கொடுத்து வந்தார்.

இடையில் சில நாட்கள் சங்கர சுவாமிகள் காணாமல் போய்விடுவார். எங்கிருக்கிறார், என்ன செய்து

கொண்டிருக்கிறார் என யாருக்குமே தெரியாது. திடீரென ஒரு நாள் திரும்புவார். எங்குப் போயிருந்தார் எனக் கேட்க யாருக்கும் துணிவிருக்காது. கேட்டாலும் புன்னகை மட்டுமே பதிலாக இருக்கும்.

அப்படித்தான் ஒரு முறை யாரிடமும் சொல்லாமல் காசிக்குச் சென்றுவிட்டார். அங்கு முழுமையாகத் தவ நிலையில் ஆழ்ந்து விட்டார்.

பல வருடங்கள் இவ்விதம் கழிந்ததால், உறவினர்கள் அவர் நிரந்தரமாக இயற்கை எய்தி விட்டதாகக் கருதிப் பிதிர்க்கடன்களை நிறைவேற்றினர்.

அன்றிரவே சுவாமிகள் அழகர் பட்டாச்சார்யாரின் கனவில் தோன்றி, ‘நான் உயிரோடு தான் இருக்கேன். காசியில் இருக்கேன். எனக்குக் குருபூஜை செய்து வாலே...’ எனக் கட்டளை இட்டார்.

ஞானிகள், மகான்கள் போன்றவர்களுக்குத் திதி, தர்ப்பணங்கள் கிடையாது. இதை அறிந்திருக்கும் உறவினர்களும், அன்பர்களும் இன்றளவும் குருபூஜை செய்து வருகிறார்கள்.

முதலில் கல்லிலே அவரது உருவத்திருமேனியைப் படைத்து வடக்குப் பாப்பான் குளத்திலே வைத்துக் குருபூஜை செய்தார்கள். பேரருள் நிறைந்திருக்கும் சங்கர பரமஹம்சரின் அழகுத் திருமேனிச் சிலை பத்தமடை கரிசூழ்ந்த மங்கலத்தில் அருளாட்சி புரிந்து வருகிறது.

சங்கர சுவாமிகள் லயமான திருச்செந்தூர் கடற்கரைக் கோயிலிலும் துப்பாக்குடி திருக்கோயிலிலும் இன்றளவும் குருபூஜை தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் சீடர்களில் முக்கியமானவர் திருஞானானந்தா சுவாமிகள். பிரியத்துக்குரிய தன் சீடர் திருஞானானந்தாவிற்கு சங்கர சுவாமிகள் காட்சியளித்து அருள் மழை பொழிந்து ஆட் கொண்டார்.

அதனைத் தொடர்ந்து திருஞானானந்தா சுவாமிகள் ஞானாலயா வள்ளலார் கோட்டம் என்ற அமைப்பினை ஏற்படுத்திக் குருபூஜையை வாரம் தோறும் செவ்வனே நடத்தி வருகிறார். தினமும் எல்லா கோட்டங்களிலும் சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு வழிபாடு நடக்கிறது.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் சில காலம் தவம் மேற்கொண்டு இறையோடு இறையாய் இரண்டறக் கலந்து இறைலயமான சித்தர் மலையின் அடிவாரத்தில் சங்கர பரமஹம்சருக்கு கோயில் அமைக்கும் பணியில் ஈடுபட்டு உள்ளார் திருஞானானந்தா சுவாமிகள்.

உலகமெங்கும் வசித்து வருகிற சங்கர சுவாமிகளின் பக்தர்கள் குருபூஜை, அன்னதானம் போன்றவற்றை ஆண்டு முழுவதும் ஆங்காங்கே அவ்வப்போது செய்து வருவது சுவாமிகள் மீது அன்பர்கள் கொண்டிருக்கின்ற அளவற்ற ஈடுபாட்டுக்கும், பக்திக்கும் சான்றாக உள்ளது.

சுவாமிகளின் உறவினர்கள், சமூகத்தில் உயர்ந்த நிலையில் உள்ளனர். பெரும்பாலோனோர் கோயில்களில் குருக்கள் பணிகளை மேற்கொண்டுள்ளனர்.

சங்கர சுவாமிகள் பணிபுரிந்த கடையம் நித்யகல்யாணி அம்மன் கோயிலில் இன்றளவும் சுவாமிகளின் வம்சாவளியினரே பணிபுரிகிறார்கள். சுவாமிகள் இறை நிலை அடைவதற்கு முன்பு ஒரு நாள் வமிசாவளிப் பேரன் அழகர் பட்டாச்சாரியார் வீட்டிற்கு வந்தார். தனது அழகிய அருள் ஓவியத்தை அப்போது கொடுத்து அருளினார். அவ்வோவியமே சங்கர சுவாமிகளின் திரு உருவப்படமாக இன்றும் பூஜிக்கப்பட்டு வருகிறது.

சங்கர சுவாமிகள் போன்ற ஞானிகள், சித்தர்களின் திருஉருவங்களைக் கேமரா மூலம் புகைப்படமாக எடுக்க முடியாது. மகான்களின் மேனியை ஒளி ஊடுருவிச் சென்றுவிடுவதால் புகைப்படம் விழாது. அவர்கள் நிழல் கீழே விழாது.

எனவே தான் சங்கர சுவாமிகளே தனது உருவத்தை ஓவியமாக்கித் தந்தருளி உள்ளார் போலும்.

திருச்செந்தூர் கடையம் பகுதிகளில் வசிக்கும் அன்பர்களும் சுவாமிகளின் உறவினர்களும் சங்கர பரமஹம்ச சுவாமிகளை 'தாத்தா சுவாமிகள்' என்றே குறிப்பிடுகின்றனர். குழந்தைகளுடன் இன்னொரு குழந்தைபோல் விளையாடும் வழக்கம் கொண்ட சுவாமிகளைக் குழந்தைகள் 'தாத்தா' என்றே அழைத்தனர். காலப்போக்கில் 'தாத்தா சுவாமிகள்' என்ற பெயரும் நிலைத்துவிட்டது.

சங்கர சுவாமிகள், அய்யன்பட்டர், சங்கர பரமஹம்ச சுவாமிகள், தாத்தா சுவாமிகள் என எப்படி அழைத்தாலும் கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து உதவி, நல்வழி காட்டக் கூடிய நற்குருவாய் விளங்கி வருகிறார் சங்கர பரமஹம்ச சுவாமிகள்.

# நூல் பயன் ...

*சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்ய சரித்திரத்தையும் பெருமானார் நிகழ்த்திய அற்புதங்களையும் படிப்போரும், கேட்போரும் அதன் வழிநடப்போரும் எல்லாம் வல்ல அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் தனிப் பெருங்கருணையினாலும் குருவருளின் திருவருளினாலும், கல்வி, கேள்விகளில் கடலினும் சிறந்து, அன்பு, அறிவு, ஒழுக்கம், நல்உருவம், சீலமும் நன்கு அமையப் பெற்று நீவீர் குடும்பத்துடனே தீர்க்க ஆயுளும் செல்வப் பெருக்கும், நோயற்றபெரு வாழ்வும், நுவலரும் கீர்த்தியும், சிவம்திகழ் ஞானமும் சித்தியும் பெற்று ஆல் போல் தழைத்து அருகு போல் வேரோடி வாழையடி வாழையென வையத்து வாழ்வாங்கு வாழ்வீர்கள் என்பது நிச்சயம்.*

ஸ்ரீ நிரஞ்சனானந்தா

# 1

# வாழையடி வாழையென வந்த சித்தர் மரபு

இளம் பிராயத்தில் கோயில் பணியாற்றிக் கொண்டிருக்கும் போது சங்கர பரமஹம்சருக்குப் பொதிகைமலை வாழ் அகத்தியப் பெருமான் காட்சி தந்தார். அருளாசி தந்தார். அரவணைத்துக் கொண்டார். அது முதல் அவரது சிந்தனை இறை ஞானத்தை ஒட்டியே இருந்தது. அவரது பேச்சும் செயலும் ஞான வயப்பட்டதாக மிளிர்ந்தது.

பின்னொரு நாள், அவருக்கு இன்னொரு பேறு கிடைத்தது. தவநிலையில் இறை சிந்தனையோடு ஐக்கியமாகி இருந்த சுவாமிகளுக்கு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் கருணையினால் வடலூர் வள்ளல் பிரான் இராமலிங்க சுவாமிகள் தரிசனம் தந்து ஆட்கொண்டார். அன்பும், அருளும், தயவும் கொண்டு தடுத்தாட் கொண்டார்.

அகத்தியப் பெருமான், வள்ளல் பெருமான் ஆகியோரது அருட் செறிவால் நிறைந்த சங்கர சுவாமிகள் நிறை ஞானியானார்.

வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் வாழ்ந்து வந்த மாமணியாய் சித்தர் மகான்களின் அருட்காட்சியால் இணைந்த சங்கர பரமஹம்ச சுவாமிகளின் பாதை அதன் பின்னர் முழுக்க முழுக்க ஆன்மிகமாயிருந்தது. அன்பு மயமாய் இருந்தது. அருள் நிறைந்ததாய் இருந்தது.

# 2

# அந்தரத்தில் அதிசய ஆராதனை

பாப்பாக்குடி திருக்கடுக்கை மூன்றீசுவரர் திருக்கோயிலில் தான். சங்கர பரஹம்ச சுவாமிகள் முதன் முதலில் முழு நேரம் குருக்களாய் பணிபுரிந்து வந்தார்.

சுவாமிகளின் அணுகுமுறையும், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்கிற ரீதியில் சட்டெனப் பேசும் பாங்கும், யாராயிருந்தாலும் தப்பு தப்புதான் எனக் கடுமையாக ஏசுவதும், வேற்றுமை பாராட்டாது ஏழை எளிய மக்களிடம் சகஜமாக அன்பொழுக பழகியதும் ஊர் மக்கள் சிலருக்குப் பிடிக்கவில்லை.

சுவாமிகள் பற்றி அவதூறுகள் பலவற்றை அவர்கள் பரப்பி வந்தார்கள். கோயில் உள்ளேயே சுவாமிகள் கள், சாராயம், மது போன்றவற்றைச் சாப்பிடுகிறார். மீன், கருவாடு மாமிசம் என்று ஒன்றையும் விட்டு வைப்பதில்லை என்று பலவாறாகப் பேசி வந்தனர்.

சுவாமிகள் எதையும் கண்டு கொள்ளவில்லை. கோயில் உண்டு, தான் உண்டு, பூஜை உண்டு என்று வாழ்ந்து வந்தார்.

ஒரு நாள் அவதூறு பரப்பிய அநியாயப் பேர்வழிகள் ‘இப்ப கோயிலுக்குள்ளே நடந்துகிட்டு இருக்கிற அநியாயத்தைப் பார்க்க வாங்க. நீங்களே நேரில் பாருங்க அய்யன்பட்டர் பண்ற கூத்தை தெரிஞ்சுக்கங்க,‘ எனச் சொல்லி பாப்பாக்குடியையே திரட்டி வந்திருந்தார்கள்.

சங்கர சுவாமிகள் அப்போது தான் அபிஷேகம் முடித்து, அலங்காரம் முடித்து தீபாரதனை ஆரம்பித்திருந்தார்.

இறைவனே மயங்கும் தெய்வீக ஒலியோடு தீபாராதனைத் தட்டை ஒரு கையிலும், மணியை இன்னொரு கையிலும் பிடித்துக் கொண்டு அவற்றை நேர்த்தியாகக் காட்டிய படி சுவாமிகள் இருந்தார்.

கோயிலின் வெளியே கூடிய கூட்டம் ஏற்படுத்திய சலசலப்பு சுவாமிகளுக்கு எரிச்சலூட்டியது. மக்களைப் பொய்சொல்லி அழைத்து வந்திருந்த புரட்டுப் பேர்வழிகள் வன்மமாய் நோக்கியது கோபமூட்டியது.

ஒரு கணம் தான். ஒரே கணம் தான்.

அப்படியே தீபக்காலையும், ஒலித்துக் கொண்டிருந்த கை மணியையும் அந்தரத்தில் விட்டபடி, இடுப்புத் துண்டை அவிழ்த்து வேகமாக உதறி பரமஹம்ச சுவாமிகள் தோளில் போட்டுக் கொண்டு கோவிலை விட்டே வெறியேறினார்.

வாசலில் நின்று கொண்டிருந்தவர்கள் உள்ளே அந்தரத்தில் தீப ஆராதனை மணியோசையோடு சங்கர பரமஹம்ச சுவாமிகள் இல்லாமலே பூஜை நடப்பது கண்டு அதிர்ச்சி அடைந்தனர்.

சுவாமிகளின் மகத்துவம் புரிந்து தப்பு செய்து விட்டோமோ என கன்னத்தில் போட்டுக் கொண்டனர். ஒரு சிலர் காலில் விழுந்தனர்.

அதற்குள் ஒரு கூட்டம் கோயிலுள் நுழைந்து கெடுமதியாளர்கள் சொன்ன போதை, மாமிச சமாச்சாரங்கள் இருக்கிறதா எனத் தேடிப் பார்த்தனர். கோயில் உள்ளே ஆராதனைச் சாமான்கள் பூ, பழம், விபூதி, குங்குமம் போன்ற இறைப் பொருட்கள் தவிர ஏதுமில்லாதது கண்டு திருப்தி உற்றனர்.

அவை நேர்த்தியாக வைக்கப்பட்டிருந்ததோடு மூலஸ்தானம் உள்ளிட்ட கோயில் அறைகள் தெய்வீக மணம் கமழ்ந் திருப்பதைக் கண்டு மனம் மகிழ்ந்தனர்.

பொய்யும் புரட்டும் நிறைந்த போலி மனிதர்கள் தங்கள் முயற்சி பலிக்காமல் போகவே, யாரிடமும் சொல்லிக்

கொள்ளாமல் கூட்டத்திலிருந்து நழுவி வெளியேற முயற்சித்தனர்.

அத்தனை பேருக்கும் குற்ற உணர்ச்சி எழுந்து சங்கர பரமஹம்ச சுவாமிகளைத் தேடினர். அவர் பாட்டுக்குக் கோயில் வாயிலை விட்டு வெளியேறித் தெருமுனையில் போய்க் கொண்டிருந்தார். அவர் வாயில் 'சங்கர சங்கர சம்போ' என்ற பாட்டு கொஞ்சம் கோபமாகவே ஒலித்துக் கொண்டிருந்தது.

ஊர்க்காரர்கள் அவர் கோபித்துக் கொண்டு செல்வதைப் பார்த்து அவர் பின் ஓடோடி வந்து காலில் விழுந்து கெஞ்சினர். சிலர் அழுது புரண்டனர்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் எதையும் கண்டுகொள்ளவில்லை. எவர் புலம்பலையும் கேட்கவில்லை. யாரையும் திரும்பிப் பார்க்கவில்லை கோயிலைக் கூட பூஜித்து வந்த கடவுளைக் கூட-திரும்பிப் பார்க்கவில்லை. பார்ப்பதாயும் இல்லை.

இதுவே சங்கர பரஹம்சரின் குணாதிசயம். ரௌத்ரம், வைராக்கியம் அவரது சிறப்பம்சமும் கூட.

பாப்பாக்குடி மக்கள் கண்முன் சுவாமிகள் நிகழ்த்திய இந்த அற்புதம் ஓர் ஆன்மிகப் பரவசம்.

# 3
# அகத்தியப் பெருமான் ஆலயத்தில்

அம்பாசமுத்திரத்தில் அகத்தியப் பெருமான் கோயில் பிரசித்தி பெற்றது.

ஒருமுறை அம்பாசமுத்திரம் வந்த சங்கர பரமஹம்சர் அகத்தியர் கோயிலுக்குப் போனார். அப்போது கோயில் புனரமைப்புப் பணிகள் துரிதமாக நடந்து கொண்டிருந்தன.

ஒரு புறம் கட்டுமானப்பணி, இன்னொரு புறம் புதுப்பிக்கும் பணி என வேலைகள் களை கட்டி இருந்தன. கோயில் பணியாளர்களும் ஆன்மிகப் பிரமுகர்களும், சிவாச்சாரியார்களும் ஒவ்வொரு வேலையையும் பார்த்துப் பார்த்துச் செய்து கொண்டிருந்தனர்.

கோயிலினுள் ஓர் அறையில் தங்கத்தைக் காய்ச்சிப் பொன்னாலான உற்சவமூர்த்தியை உருவாக்கும் பணி தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. வைத்த கண் வாங்காமல் பயபக்தியோடு பலரும் கவனித்துக் கொண்டிருக்க உற்சவ மூர்த்தியின் சிலை வடிவம் உருவாகிக் கொண்டிருந்தது.

பலமுறை எவ்வளவோ முயற்சி செய்தும் ஏனோ அகத்தியப் பெருமானின் சிலை வடிவம் முழுமை பெறாமல் உருகி வழிந்தோடிக் கொண்டே இருந்தது.

ஒவ்வொரு பணியையும் பார்த்து ரசித்துக் கொண்டு வந்த சங்கர பரமஹம்சர் சிலை வார்க்கும் இடத்திற்கு வந்தார். சிலையை உருவாக்குபவர்கள் படும் பாட்டைப் பார்த்து நிலைமையைப் புரிந்து கொண்டார். புன்னகைத்தார்.



‘எலே... ஏன் சிரமப்படுறீக?... இந்தாலே, இந்தச் செப்புக் காசைப் போட்டு உருக்கி செஞ்சு பாருவே,’ எனத் தன்னிடமிருந்த ஒரு காசினை எடுத்துத் தந்தார்.

ஒரு பித்தனைப் போலிருந்த சங்கர பரமஹம்சரின் சொல்லில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லாத போதிலும், எப்படியேனும் சிலை அமைந்தால் போதும் என்ற நிலையிலிருந்த ஊழியர்கள் அவர் கொடுத்த செம்புக் காசினையும் சேர்த்து உருக்கினர்.

'அடாடா... என்ன ஆச்சரியம்!'

அவர்களின் கனவு மெய்ப்பட்டது போல அற்புதமானதொரு அழகுச் சிலை நிலை பெற்று, உருகி ஓடாமல் நேர்த்தியாய் அமையப் பெற்றது. சிலை உருவாக்கப் பணியில் ஈடுபட்டிருந் தோருக்கு எல்லையில்லாத வியப்பு. அனுபவம் நிரம்பப் பெற்றிருந்த அவர்களுக்குத் தெரியாத ரகசியத்தை நாடோடிச் சாமியார் போலிருக்கும் இவர் அறிந்திருக்கிறாரே எனப் பரவசப்பட்டுப் பரமஹம்சரைப் பாராட்டத் தேடினர்.

அவரோ வழக்கம் போல ஏதும் நடக்காதது போல, 'சங்கர சங்கர சம்போ' எனப் பாடிக் கொண்டு கோயில் வாசல் வழியே வெளியேறிக் கொண்டிருந்தார்.

சித்தர்கள் மட்டுமே ரசவாத வித்தை அறிந்திருப்பார்கள் என்பதும் அவர்களுக்கே இவ்வித்தை கைகூடும் என்பதும் ரகசியமற்ற உண்மை. நடமாடும் சித்தராய் உலவிய சங்கர பரமஹம்சர் செம்பைத் தங்கமாக்கும் ரசவாத வித்தை அறிந்தார் என்பதில் வியப்பொன்றும் இல்லை அல்லவா?

சங்கர பரமஹமசர் கொடுத்த செம்புக்காசு கெந்தகச் செம்பு என்ற ரசவாதத்திற்கு உரித்தான காசு.

இன்றும் அம்பா சமுத்திரத்தில் உள்ள அகத்தியப் பெருமான் கோயிலில் சங்கர பரஹம்சர் கெந்தகச் செப்புக் காசு வித்தையினால் உருவான அகத்தியப் பெருமான் சிலையே உற்வச மூர்த்தியாக விளங்குகிறது. சங்கர பரமஹம்சரின் குடும்ப உறவு வழி வாரிசுகளே இக்கோயிலில் பணிபுரிகின்றனர்.

பொதுவாக உற்சவ மூர்த்தி சிலைகளைப் பராமரிக்க, சுத்தம் செய்யப் பல்வேறு முறைகளைக் கையாளுவது வழக்கம். புளி போட்டுத் தேய்த்துக் கழுவிப் பளிச் என ஆக்குவது அவைகளில் ஒன்று.

ஆனால் இங்கிருக்கும் உற்சவ மூர்த்தியை லேசாகத் துணி வைத்துத் தேய்த்தால் போதும். புதிதாக அப்போது தான் செய்தது போல் அத்தனை 'பளிச் பளிச்'. இதை இப்போதும்

சொல்லிச் சொல்லிப் பிரமிக்கின்றனர் கோயிலில் பூஜை செய்துவரும் சுவாமிகளின் கொள்ளுப் பேரன்மார்கள்.

*அகத்தியர் பெருமான், சங்கர பரமஹம்சரின் ஞான குரு. சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு காட்சி தந்து அருள் தந்து தடுத்தாட் கொண்ட மகா சித்தர்.*

சங்கர சுவாமிகள், சித்தராய் கோயிலுக்கு வந்து தன் ரசவாச சித்தால் உற்சவ மூர்த்தியை உருவாக்கிய அற்புதத்தைக் குரு அகத்தியர் பெருமானுக்குச் சீடர் சங்கர சுவாமிகள் நிகழ்த்திய குரு காணிக்கை என்றே சொல்லலாம்.

# 4

# அருளாளர் சமைத்த அற்புத உணவு

---

**வ**டக்குப் பாப்பான் குளம்.

இந்த ஊரில் தான் சங்கர சுவாமிகளின் உறவினர்களில் பெரும்பாலானோர் வசித்து வந்தனர்.

அவர்களில் பேரன் அழகர் பட்டர், சுவாமிகள் மீது அளவற்ற அன்பும், பாசமும் கொண்டவர். அழகர் தான் பல காலம் தனது தாத்தாவான சங்கர சுவாமிகளுக்கு உணவு தயாரித்துத் தந்து வந்தார்.

சங்கர சுவாமிகளுக்குத் தேங்காய் பாலில் செய்த பாசிப் பருப்புப் பாயசம் மிகவும் பிடிக்கும். அழகர் பட்டர் அடிக் கடி பால் பாயசம் செய்து சுவாமிக்குத் தருவார். சுவாமிகள் மகிழ்ச்சியோடு அழகரைத் தட்டிக் கொடுப்பார்.

அன்று ஏதோ ஒரு விசேட நாள். சங்கர சுவாமிகளின் உறவினர்கள் கூடி இருந்தனர்.

'இன்றைக்கு உங்களுக்கெல்லாம் நான் சமைச்சுத் தர்ரேன்லே...' சுவாமிகள் திடீரென்று அறிவித்தார்.

குழுமி இருந்த எல்லாருக்கும் ஏக சந்தோஷம். 'ஆஹா... தாத்தா' சமையல் எனத் துள்ளிக் குதித்தனர்.

சங்கர சுவாமிகள் சமையல் கட்டில் நுழைந்தார். கொஞ்ச நேரத்தில் வீடே மணக்க சமையலை முடித்து விட்டார்.

அவரே அத்தனை பேரையும் உட்கார வைத்துப் பரிமாறினார். சாப்பிட்டவர்கள் முகம் பார்த்து மனம் மகிழ்ந்தார்.

'தாத்தா... இப்படி ஒரு உணவை நாங்கள் இதற்கு முன் சாப்பிட்டதே இல்லை. எல்லாமே ருசி. புதிய சுவை!... அற்புதம்!... அற்புதம்!!' என தாத்தாவைக் கொண்டாடி மகிழ்ந்தனர் உறவினர்கள்.

அழகர் பட்டர், சங்கர சுவாமிகளிடம், 'தாத்தா... என்ன மந்திரம் போட்டீர்கள்? நானும் தான் சமைக்கிறேன். என்னத்தைக் கொண்டு இப்படி அற்புதமாக செஞ்சீர்கள்?', என ஆசையோடு வினவினார்.

'அப்பா... இது விளக்கெண்ணெயில் தயாரித்த சாதம்...' என்றார், சுவாமிகள்.

'விளக்கெண்ணெயா!', வியந்து போயினர் அத்தனை பேரும்.

அதற்குப் பின்னரும் கூட, எக்காலத்திலும் அப்படியொரு சுவையான உணவை சுவாமிகளின் உறவினர்கள் உண்டதில்லை என்பதே சுவையான தகவல்.

# 5

# கடையம் கண்ட கருணை வள்ளல்

கடையம், சங்கர பரமஹம்ச சுவாமிகளின் வாழ்வில் முக்கியமான திருத்தலம்.

இங்கிருக்கும் நித்யகல்யாணி உடனுறை வில்வநாத சுவாமி ஆலயத்தில் ஒரு காலத்தில் சங்கர பரமஹம்சர் பணிபுரிந்திருக்கிறார். கோயில் பணியாளர் பட்டியலில் அவர் பெயர் ஆவணமாகப் பதிக்கப்பட்டுள்ளது.

கடையம் கோயிலில் சங்கர பரமஹம்சர் பணிபுரிந்தது ஒரு வரலாற்று நிகழ்வு.

இக்கோயிலில் ஒரு வயதான மூதாட்டி தொண்டு செய்து வந்தார். தினமும் ஒரு வேளை பூஜை தான் நடத்த முடிந்திருக்கிறது. அதற்கே அந்தப் பெண் மிகவும் சிரமப்பட்டார்.

மிகவும் கஷ்டப்பட்டு ஒரு குருக்களைத் தயார் செய்து கோயிலுக்கு அழைத்துச் செல்வாராம். பூஜை முடித்து மறுநாள் பார்த்தால் அந்தக் குருக்கள் பரலோகம் போய்விடுவார். மறுநாளே மரணம் என்ற நிலையில் குருக்கள் எவரும் இக்கோயிலுக்குப் பணி செய்ய வரவே பயந்தனர்,

இந்நிலையில் பஞ்சை, பராரி உருவில் பாப்பாகுடியில் குருக்கள் வேலையை விட்டுவிட்டு தேச சஞ்சாரம் செய்து கொண்டிருந்த சங்கர பரமஹம்சர் அப்பெண்மணியின் கண்ணில் பட்டார்.

அழுது, தொழுது சம்மதிக்கச் செய்து அவரைக் கோயிலுக்கு அழைத்து வந்தார் அந்த மூதாட்டி. இவரேனும் நிலைக்க



வேண்டும் என கண்ணீர் மல்க இறைவனிடம் பிரார்த்தனை செய்தார்.

பூஜை, புனஸ்காரங்கள் தொடங்குவதற்கு முன்பே, சங்கர பரமஹம்சருக்குப் பணிபுரிந்து வந்த குருக்கள், தொடர்ந்து மரணமடைந்து வருவதும் அதற்கான காரணங்களும் தெரியவந்தன.

அம்மன் சிலையைக் கூர்ந்து கவனித்தவருக்கு அடிப்படைக் காரணம் புரிந்தது.

பூஜை முடித்து வெளியே வந்தவர், அந்தப் பெண்மணியை அழைத்தார். பொதுவாகப் பெண்களைப் போற்றும் கண்ணியம் நிறைந்தவர் என்பதால் அவரது பேச்சு அன்பாய், ஆன்மிகமாய் இருந்தது. அதுவே ஆண் பிள்ளை என்றால் அவர் பேச்சு வேறு மாதிரி இருந்திருக்கும்.

அந்தப் பெண்ணிடம் சுவாமிகள், 'தாயே... இந்த அம்மன் இருக்காளே... ரொம்ப ஆக்ரோசமானவளா இருக்கா... மொத்தம் 16 கலைகள் இந்த அம்பாளிடம் இருக்கு... அதனாலே தான் அவ்வளவு உக்கிரம். வர்றவன் எல்லாம் மறுநாளே மேலோகம் போயிடறான்' என்றார்.

கலங்க, அவர் முகம் பார்த்திருந்த அப்பெண்மணியிடம் 'கவலைப் படாதே... மூன்று கலசம் கொண்டா... இன்னைக்கு இரவே இவளோட உக்கிரத்தைக் குறைச்சுவிடறேன்... அப்புறம் பாரேன்... அம்மன் சாந்த. சொரூபியா இருப்பா' என்று ஆறுதல் தந்தார்.

அப்பெண்ணின் முகத்தில் நம்பிக்கை பூத்தது. கொஞ்ச நேரத்தில் கலசங்களும் பூஜை சாமான்களும் வந்து சேர்ந்தன. அனைவரையும் வெளியே போகச் சொன்னார். திரையிட்டு விட்டு அம்பாள் அருகில் சென்றார்.

இனி அம்பாளுக்கும் அவளது அருந்தவப் புதல்வனுக்கும் தான் வேலை.

அம்மன் முகத்தில் வெளிப்பட்ட 16 கலைகளையும் மூன்று கலசங்களில் இறங்கச் செய்தார். அமைதிக் கலையை மட்டும் பூரணமாகப் பரவவிட்டார்.

இருப்பினும் அம்மன் மேல் நம்பிக்கை இல்லையோ என்னவோ. ஒரு கணம் அம்மன் சிலையை உற்றுப்பார்த்துவிட்டு யோசித்து முடிவுக்கு வந்தவராய் முகத்தைச் சற்றுச் சாய்த்துத் திருப்பிவிட்டார்.

அம்மனின் நேரடிப் பார்வை இனி எவர் மீதும் விழாது என்பது சங்கர பரமஹம்சரின் யுக்தி.

பின் மூலஸ்தானத்தை விட்டுக் கலசங்களுடன் வெளியே வந்தார். கோயில் உட்பிரகாரத்திலேயே ஒரு தரணி பீடம் அமைத்தார். கலசங்களைப் பீடத்தில் வைத்து உரிய பூஜைகள் செய்து அம்மனின் அனுகிரஹங்களைக் கலசங்களிலேயே இருக்க வைத்துவிட்டார்.

மீண்டும் கருவறை சென்று அம்மனிடம் தன் முயற்சிக்கு வெற்றிதர வேண்டுதல் வைத்தார்.

அம்மன் கேட்டாள், 'எல்லாம் சரி... உன் வேண்டுதலை ஏற்கிறேன். என் விருப்பத்தை நீ கொஞ்சம் கேட்கிறாயா?'

'இம்...' என்றார் சங்கர பரமஹம்சர்,

'தொடர்ந்து இங்கேயே இருந்து எனக்கு நீ தான் பூஜை செய்ய வேண்டும்' அம்மன் கட்டளையிட்டாள்.

இங்குதானே பிரச்சனை.

யாருக்கும் எவருக்கும் கட்டுப்படாத சித்தன் போக்கு; மூக்கிற்கு முன்னால் தயாராய் இருக்கும் ரௌத்ரம்; பாப்பாகுடி கோயிலில் போட்டது போட்டபடி ஒலிக்கும் மணியையும், தீபாராதனைத் தட்டையும் அந்தரத்தில்விட்டபடி திரும்பிப்பாராது வெளியேறிய நிலைப்பாடு; தேடலோடு அடுத்து அடுத்து என நகர்ந்து கொண்டே இருக்கும் வாழ்க்கை நெறி.

யோசித்தார், சங்கர பரமஹம்சர்.

கேட்பதோ, இல்லையில்லை கட்டளை இடுவதோ உலகாளும் உமையவள்!

அடுத்த கணமே 'சரி' என்றார்.

அதற்கு அடுத்த கணம் அம்பாளிடமும் துணிந்து சொன்னார்.

'எனக்கு யாரும் கட்டளை இடக் கூடாது. குறிப்பா பாப்பாகுடியில் நடந்த மாதிரி. 'நிறுத்து என்றெல்லாம் ஆணையிடக் கூடாது...'

'அவ்வளவு தானே அப்படி ஒரு வார்த்தை வரும் வரையில் இங்கே இரு சம்மதம் தானே?'

தலையசைத்தார், பரமஹம்சர்.

அதன்பின் சில காலம் அந்தக் கோயிலிலேயே பணிபுரிந்தார் அர்ச்சகராக. ஒரு நாள் 'அப்படியே நிறுத்து' என்ற குரல் சற்றுச் சத்தமாக ஒலித்தது.

அது தான் சங்கர பரமஹம்சருக்கு விதித்தது போலும்!

அப்பகுதி ஜமீன்தார் கோயிலுக்குப் பூஜை செய்யத் தனது பரிவாரங்களுடன் வந்தார். பரமஹம்சர் அப்போது அம்மனுக்கு மகாதீபம் காட்டிக் கொண்டிருந்தார்.

ஜமீன்தார் வருகையை எங்கும் எப்போதும் முன்னொலிப்பது என்பது வழக்கம். முன்னொலிப்பவரின் குரல் கட்டளை போல் ஓங்கி இருப்பது இயல்பு.

'எசமான் வர்றார், அப்படியே நிறுத்தி வை' என்று ஓங்கி ஒலித்தது ஒலிப்பவரின் குரல்.

வந்ததே ரௌத்ரம் சங்கர சுவாமிகளுக்கு.

'யாரையடா சொன்னாய் நீ' என்பது போல் வெளியே பார்த்தார். தூரத்தில் ஜமீன்தார் பரிவாரங்களுடன் வந்து கொண்டிருந்தது தெரிந்தது.

முரசறைவோன் போல் முன்னொலி செய்தவர் பரபரத்தபடி வந்து கொண்டிருந்தார்.

கையில் பிடித்து அடித்துக் கொண்டிருந்த மணியையும் தூபக்காலையும் அப்படியே அந்தரத்தில் விட்டு விட்டு அம்மனைப் பார்த்தபடி 'சொன்னேன்ல பார்த்தியா...' என்று முனகிக் கொண்டவர், மகாதூபக்காலைப் பார்த்த படி 'எவனுக்கோ எசமான் வர்றானாம் அவனுக்காக நீ நிப்பாயாம்...' அப்படியே நில்லு, என்று சொல்லிவிட்டு நடையைக் கட்டினார்.

அந்தரத்தில் தூபக்காலும், மணியும், தத்தம் பணியைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தன.

'உனக்கு உலகில் வேறு வேலைகள் நிறைய இருக்கின்றன அதற்குத் தான் நான் ஆசைப்பட்டேன். செல் மகனே செல். வெற்றி கொள் மகனே, வெற்றி கொள்' என்று அம்மனே தலைசாய்த்துச் சம்மதித்து அனுப்பி வைத்தது போலிருந்தது.

சங்கர பரமஹம்சர் இப்படி வெளியேறுவது இரண்டாம் தடவை. அம்மன் சம்மதத்தோடு இந்த முறை வெளியேறி இருக்கிறார். அது மட்டுமே வித்தியாசம். வெளியேறியவர் போன இடமும், தங்கிய இடமும், தவமிருந்த குகையும் வரலாற்றுச் சிறப்புமிக்கன.

# 6

# அன்னக் கொடி நாட்டும் அருளாளர்

*சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு அன்னதானம் செய்வதில் அலாதி விருப்பம். பசியாற்றுதலை ஒரு தவமாகவே செய்வார். ஏழை எளியவரின் பசிப்பிணியை நீக்கிப், பெரு மகிழ்வு கொள்வார்.*

*சுவாமிகள் ஒரு ஊருக்குச் செல்கிறார் என்றால், முதலில் ஊர் மக்கள் கூடும் மைதானத்தில் சிறு கொடிக் கம்பம் ஒன்றை நட்டு அதில் வெள்ளை நிறத் துணியைக் கொடி போல் கட்டி விடுவார். அது பட்டொளி வீசிப் பறக்கும். அதன் பெயர் அன்னக் கொடி.*

*அன்னக் கொடியை சுவாமிகள் பறக்க விட்டார் என்றால் ஊர் மக்களை அன்னதானத்திற்கு அன்போடு அழைக்கிறார் என்று அர்த்தம். இன்னுமொரு மகா அற்புதத்தையும் நிகழ்த்துவார்.*

*அது, பிள்ளை வரம்.*

*ஊர் மக்கள் அவ்விடத்தில் கூடுவர். சுவாமிகள் தன் திருக்கரங்களால் மக்களுக்கு அன்னம் வழங்குவார். மக்கள் எல்லையில்லா திருப்தியோடு உண்டு மகிழ்வர்.*

*அன்னதானம் வழங்கிய பின்னர், ஆற அமர்ந்து அருள் தானம் வழங்க ஆரம்பித்து விடுவார், சங்கர சுவாமிகள்.*

*மக்கள் தங்கள் கஷ்டங்களைச் சொல்லி அழுவார்கள். நோய் பீடித்திருக்கும் நிலையில் சுவாமிகளின் பாதங்களைப் பிடித்துக் கொண்டு கதறுவார்கள்.*

அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆறுதல், உதவி, அருள் முதலானவற்றை வாரி வாரி வழங்குவார் சங்கர சுவாமிகள்.

பிள்ளையில்லாதோர் பிள்ளை வரம் வேண்டி சுவாமிகளைச் சரணடைவார்கள். பிள்ளை வரம் தருவதில் ஈடு சொல்ல முடியாத அருளாற்றல் கொண்ட அருட் சித்தர், சங்கர சுவாமிகள்.

அவரிடம் வேண்டி நின்று, அவரருளால் பிள்ளைப் பேறு பெற்றவர்கள் ஏராளம்.

சுவாமிகளின் அருளால் பிறந்தவர்கள் சாமுத்திரிகா லட்சணத்தில் உள்ள அத்தனை உத்தம அம்சங்களோடு கூடிய கம்பீரமான தோற்றத்துடன் விளங்குவார்கள்.

சுவாமிகளின் அருளால் பிறந்த குழந்தையோடு வந்து, சுவாமிகள் வழங்கும் அன்னதானத்தை குடும்ப சகிதமாக உண்டு மகிழ்ந்து அருளாசி பெற்றுச் செல்வர்.

சங்கர பாண்டி நாடார், சங்கர நாராயணன் என்கிற ஆதித்தன் பிள்ளை, ஹரிராம் சேட் உள்ளிட்ட பலர் சங்கர பரமஹம்சரின் அருளால் பிறந்தவர்களே.

பிள்ளை வரம் தரும் போதே பிறக்கப் போகும் குழந்தைக்கு இன்ன பெயர் வை எனப் பெயர் சூட்டுவது சுவாமிகளின் தனித்தன்மை. அது ஓர் அருட் தன்மை.

இன்றைக்குத் தமிழகத்தின் தென் பகுதியில் குறிப்பாக, திருநெல்வேலி முதலான மாவட்டங்களில் சங்கரன் என்ற பெயர் கொண்டவர்களில் பெரும்பாலானோர் பூர்வ ஜென்மத்தில் ஏதோ ஒரு வகையில் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருளாசி பெற்றவர்களாக இருப்பார்கள் என்பது ஓர் ஆன்மிக உண்மை.

# 7

# இறந்தவரை எழுப்பிய இறைஞானி

திருச்செந்தூர் அருகில் உள்ள ஏரல் பக்கத்தில் சிறு தொண்ட நல்லூர் என்று ஒரு சிற்றூர்.

அவ்வூரில் ஆறுமுகம் நாடார் என்பவர் வசித்து வந்தார்.

அவருக்கு ஒரு பெருங்குறை. குழந்தை குட்டி ஏதுமில்லை. அது அவரின் கவலையை நாளுக்கு நாள் அதிகரித்தது. மன நோயாய் எரித்து உருக்கியது.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் பற்றிக் கேள்விப்பட்டு ஆறுமுக நாடார் சுவாமிகள் பாதம் பற்றினார். குழந்தைச் செல்வம் வேண்டிக் குமுறி அழுதார். சுவாமிகள். நாடாரை உற்றுப் பார்த்தார். சில நிமிடம் யோசித்தார்.

'எலே எழுந்திருலே. உனக்குக் குழந்தை தானே வேண்டும், தர்றேன்ல'

'ஆனால்...' மேலே பேச ஏனோ தயங்கினார்.

ஆறுமுக நாடார் மூச்சடைத்துப் போனார் 'எதுவானாலும் சொல்லுங்க சுவாமி ஏக்கத்துடன் சுவாமிகளைப் பார்த்தார்,

'வந்துல உனக்குப் பிள்ளையே இல்லாம இருக்கறது போதுமா..., இல்ல..., பிள்ளை பொறந்து அவன் ஏழு வயசுல அற்ப ஆயுள்ல செத்துப் போனா பரவாயில்லயா', மெதுவாய்க் கேட்டார் சுவாமிகள்.

நாடார் ஒரு கணம் கூட யோசிக்கவில்லை.



‘எனக்கு பிள்ளை வேணும் சாமி... பிள்ளை வேணும்’ இப்பப் பிள்ளை வேணும். மத்ததைப் பொறவு பாத்துக்கலாம்’ அடம்பிடித்தார்.

சுவாமிகள் கண்களை மூடித் தியானித்துவிட்டு விபூதி எடுத்து நாடாரிடம் கொடுத்து, ‘போலே, பையன் பொறப்பான். என் பேர வையுலே... சங்கர பாண்டின்னு வையுல’, என்று ஆசீர்வதித்து அனுப்பிவைத்தார்.

குருவருள் திருவருளால் ஆறுமுக நாடாருக்கு முத்துப் போல் ஒரு மகன் பிறந்தான்.

*சங்கர பாண்டியன் என்று பெயர் வைத்தார்கள். வீடு கல கலப்பானது. குழந்தை வளர்ந்து சிறுவனானான்.*

*அவனது ஆயுள் குறித்துச் சுவாமிகள் சொல்லி இருந்ததை ஆறுமுக நாடார் மறந்தே போனார். ஏறக்குறையக் குடும்பத்தினார் உள்பட எல்லோரும் மறந்திருந்தனர்.*

*''உள்ள பிணி தீர்ந்து போனால் உலகோர் பண்டிதரை நாடார்'' என்பது போல எல்லோரும் மறந்திருந்தாலும் உண்மை உறங்காமல் தக்க சமயத்திற்காகக் காத்திருந்தது.*

*ஒருநாள் விளையாடப் போன சங்கர பாண்டி பொத்தெனக் கீழே சாய்ந்தான். அடித்துப் பிடித்து ஓடிவந்தவர்கள் ஆள் ஆளுக்குத் துடித்துப் போனார்கள். சங்கர பாண்டி மடித்துப் போட்ட துணி போலானான்.*

*மரணித்துப் போனான்.*

*கணக்குப் போட்டுப் பார்த்த போது காலன் சரியாக ஏழாம் ஆண்டு எனக் கணக்குச் சொல்லிக் காரியத்தைக் கச்சிதமாய் முடித்துவிட்டிருப்பது தெரிய வந்தது.*

*ஒருநாள், ஒன்றரை நாள், பாலகன் சவமாகி அழுகத் தொடங்கினான்.*

*ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டவர் வருவாரா?*

*அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் ஆறுதல் சொல்லி அடுத்த காரியத்திற்கு வற்புறுத்த ஆரம்பித்தார்கள்.*

*ஆறுமுக நாடார் குடும்பத்தினரோ அழுத படியே இருந்தனர். நாடார், வீட்டுத் திண்ணையில் சாய்ந்தபடி அழுதழுது ஓய்ந்திருந்த வேளை. முதுகில் யாரோ தட்டி எழுப்ப, கண்கள் சொருகிய நிலையில் திரும்பிப் பார்த்தார்.*

*தட்டியவர் சங்கர பரமஹம்ச சுவாமிகள். அப்போது தான் நாடாருக்கு பிள்ளை வரம் தந்த போது சுவாமிகள் சொன்னது நினைவுக்கு வந்தது. 'இப்பத்தான் என் ஞாபகம் வருதாலே,'*

எனக் கேட்டார் சுவாமிகள். அவர் கேள்வியில் ஆயிரம் அர்த்தங்கள். துடிதுடித்தார் நாடார்.

'சுவாமி, காப்பாத்துங்க' திண்ணையிலிருந்து அப்படியே சரேலெனச் சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்தார்.

கல்லும் கரையும் சூழல். சுவாமிகள் ஏதோ திட்டத்துடனே தானே வந்திருப்பார்.

'எலே... இந்தப் பொட்டச்சிகளை எல்லாம் வெளியே அனுப்புலே' என்ற படி வீட்டினுள் நுழைந்தார்

முற்றத்தில் மீறிய துர்நாற்றத்தில் சங்கர பாண்டியின் பூத உடல். பெண்கள் வெளியேறினர்.

சுற்றி ஒருமுறை பார்த்துவிட்டுச் சுவாமிகள் சங்கர பாண்டியின் உடலை மூன்று முறை சுற்றிவந்து நெற்றியில் கை வைத்து 'எலே... எழுந்திருலே' என உத்தரவு இட்டார்.

என்ன ஆச்சரியம்! அந்த உடல் மறுகணமே உயிர் பெற்றது.

துர்நாற்றம் போய் வீடெங்கும் நறுமணம் சூழ ஆரம்பித்தது.

'பிழைச்சுக்கிட்டான்லே, பிழைச்சுக்கிட்டான்லே' எனச் சந்தோஷத்தில் துள்ளிய சுவாமிகள், 'கவலைப்படாதேலே. இனி 72 வயசு வாழ்வான்' என நாடாரிடம் முகம் மலர்ந்து சொன்னார் சங்கர சுவாமிகள்.

ஆசை ஆசையாய் அத்தனை பேரும் ஓடி வந்து பார்த்தனர். சங்கர பாண்டி தூக்கம் விழித்த சிறு பாலகனாய் அனைவரையும் மிரண்டு பார்த்துப் பின் சிரித்தான் கன்னம் குழிவிழ.

மகிழ்ச்சி வெள்ளம் பூரணமாக இருந்த தருணத்தில் விடை பெற்றார் சங்கர சுவாமிகள். போகும் போது ஆறுமுக நாடாரை அழைத்து 'எலே அருகம்புல் அழிஞ்சாலும் அழியும், ஆனால் ஆறுமுகம் பரம்பரை அழியாது' என்று பல தலைமுறைகளுக்கு உறுதி தந்தார்.

ஆண்களுக்கு 80 வகை லட்சணங்கள் உண்டு சாமுத்திரிகா லட்சணம் என்பார்கள். அதன் இலக்கணப்படி கொஞ்சம் கூட விலக்கு இல்லாமல் ஒரு ஆஜானுபாவனாகப் பல்லாண்டுகள் சங்கர பாண்டி வாழ்ந்தது இன்றும் ஒரு வரலாற்றுப் பதிவாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறது.

சுவாமிகள் சொல்லிய மாதிரியே ஆறுமுக நாடாரின் வமிசாவளியினர் இன்று வரை சிறப்போடு வாழ்ந்து வருவது கண்கூடு.

சங்கரபாண்டி நாடார்தான் பின்னாளில் திருச்செந்தூரில் சுவாமிகளுக்கு 47 ஆண்டுகள் குருபூஜை நடத்தி வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

பிள்ளை வரம் தருவதும் அப்பிள்ளைக்கு ஏதேனும் தொல்லை என்றால் தேடி வந்து உதவுவதும் சித்தர்களின் வாழ்க்கை நெறி.

சீரிய சித்தர் சங்கர பரமஹம்சர் இப்படிப் பிள்ளை வரம் தந்து பிள்ளைப் பேறு பெற்றவர்கள் ஏராளம்.

அன்பர்களுக்குத் துயர் வந்த போது உடன் ஓடி வந்து அருள்மழை பொழிந்ததும் ஏராளம்! ஏராளம்!!

# 8

# மாய வலைக்குள் சிக்கி மயங்கி விடாதே!

*சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு முரட்டுப் பக்தர்கள் நிறையப்பேர் உண்டு.*

*பாமரத்தனமும், முரட்டுத்தனமும், அளப்பரிய பக்தியும் அவர்களிடம் இருக்கும். அவர்களில் ஒருவர்தான் புளிய நகரில் வசித்து வந்த அய்யன்கண் தேவர்.*

*அய்யன்கண் தேவர், சுவாமிகளின் மீது அன்பை மீறிய வெறி கொண்டவர். முரடரும் கூட. அவருக்கு எல்லாமே சுவாமிகள் தான். சுவாமிகள் சொல்வதே வேதம். சுவாமிகள் காட்டுவதே பாதை. சில நேரம் சுவாமிகளுடன் இருப்பார்.*

*ஒருமுறை ஆத்தூர் கடைத் தெருவில் சுவாமிகள் சென்று கொண்டிருந்தார். வழக்கம் போல் அய்யன்கண் தேவர் சுவாமிகளின் ஓட்ட நடைக்கு ஈடுகொடுக்க முடியாமல் சற்றுத் தாவியபடியே பின் வந்து கொண்டிருந்தார்.*

*கடைத்தெருவில் ஓர் அழகிய மங்கை. எவரையும் ஒருமுறை திரும்பிப் பார்க்க வைக்கும் பேரழகி. பார்த்தவரை சில நேரமாவது ஏங்க வைக்கும் அழகிய ஆரணங்கு. அவள் கடைவீதியையே சுண்டி இழுக்கும் வண்ணம் நடை பயில்பவள் போல் வந்து கொண்டிருந்தாள்.*

*சங்கர சுவாமிகள் வழக்கம்போல் யாரையும் எதையும் சட்டை செய்யாதவராய் நடந்து கொண்டிருந்தார். அக்கணத்தில் அந்த மின்னல் அவரைக் கடந்தது. மின்னலோ, இடியோ,*

மழையோ, வெயிலோ எதையும் லட்சியப்படுத்தாத சுவாமிகள் அவளையும் பொருட்படுத்தவில்லை.

ஒட்டி வந்த அய்யன்கண் தேவருக்கு அந்தப் பெண்மணி கண்ணில் பட அவரது கண்மணிகள் அகல விரிந்தன. அப்படியே மயங்கிப் போனார். அவளை ரசித்தபடியே தயங்கித் தயங்கிச் சுவாமிகளைத் தொடரலானார்.

முன்னால் சென்று கொண்டிருந்த சுவாமிகளுக்குத் தான் எல்லாம் தெரியுமே. அனைவரின் உள்ளமும் புரியுமே. சட்டெனத் திரும்பி தேவரைப் பார்த்துப் புன்னகையை ஒருமுறை தவழவிட்டு 'நீ உடனடியாக தென்னந் தோப்புக்குப் போ' என உத்தரவிட்டார்.

தேவர், சுவாமிகள் சொல் மீறாதவராயிற்றே, அந்தப் பெண்ணை அக்கணமே துறந்து, சுவாமிகள் சொன்ன தென்னத்தோப்புக்கு விரைந்தார்.

தென்னத் தோப்பில் அய்யன்கண் தேவர் கண்ட காட்சி அவரை நிலை தடுமாறச் செய்தது. கடைவீதிப் பெண்மணி தேவரைப் பார்த்து கண் சிமிட்டி சைகை செய்து அழைத்தப்படி தோப்பில் நின்று கொண்டிருந்தாள்.

உடலெங்கும் பூரிப்பு. உளமெங்கும் மத்தாப்பு. அதே பெண் கண்டாரைச் சுண்டி இழுக்கும் அதே மங்கை. கடைவீதியைக் கலக்கிய அதே பெண்மணி. இங்கே எப்படி. சாத்தியமே இல்லையே. புத்தியைத் தீட்டினார் அய்யன்கண் தேவர். இவள் பெண்ணா... பேயா, மோகினியா? உள்ளத்தில் ஒரு பயம் படர்ந்தது. முகம் வேர்த்தது.

இருப்பினும் இந்த அளவிற்குத் தன்னை பயப்படச் செய்து புத்தி புகட்டும் காரியத்தை சங்கரபரமஹம்ச சுவாமிகள் தான் செய்கிறார் என மூளையின் ஓரத்தில் மத்தாப்பு ஒளிர்ந்தது.

சுவாமி இந்த வேலைக்கெல்லாம் இனிப் போகவே மாட்டேன் என்று மனதிற்குள் கூறியவாறே அந்த அழகியைப்



பார்த்து ''சுவாமி என்கிட்டே விளையாடுறீங்களா? என தேவர் மனமுருகிக் கேட்டார்.

'எலே... நீ கண்டு பிடிச்சிட்டியாக்கும்' என்றவாறே பெண் வடிவத்திலிருந்து, தன்னுடைய சுயரூபத்திற்கு மாறினார் சங்கர சுவாமிகள்.

கீழே விழுந்து சுவாமிகளின் திருவடிகளைப் பற்றிய தேவரை, சுவாமிகள் தோள் பிடித்து எழுப்பி காதோடு

*காதாக, மெலிதாகச் சொன்ன வார்த்தை; 'எப்போதும் மாய வலைக்குள் சிக்கி மயங்கி விடாதே!'*

*அதன் பின்னர் மனம் திருந்திய மைந்தராய் வாழ்வு முழுவதும் அய்யங்கண் தேவர் வலம் வந்தார்.*

*சுவாமிகள், தன் அன்பர்களிடம், அடிக்கடி உபதேசிக்கும் வாசகங்களில் ஒன்று ''மாய வலைக்குள் சிக்கி மயங்கி விடாதே...''!*

*அது தேவருக்கு மட்டும் அல்ல உலகுக்குச் சொன்ன உண்மை வாக்கு.*

# 9

# கண்டிப்பும், தண்டிப்பும்

சங்கர பரமஹம்சர் சுவாமிகள் ஏழை எளிய மக்களுக்கு மிகவும் நெருக்கமானவரான இருந்தார். அவர்களிடம் மிகுந்த பரிவு காட்டினார்.

அன்புமயமான அவரிடம் தங்களின் கஷ்டங்களைச் சொல்வதை இறைவன் திருவடியில் சமர்ப்பிப்பதாகவே அவர்கள் கருதினர். சுவாமிகள் அவர்களை ஆற்றுப்படுத்துவதில் வள்ளலாகவே திகழ்ந்தார்.

பாமர மக்களை ஏமாற்றுபவர்களையும் அப்பாவிகளை அச்சுறுத்துபவர்களையும் கண்டால் சுவாமிகள் பொறுக்கமாட்டார்.

அவரே நேரே களத்தில் இறங்கிவிடுவார். தடுப்பார், தண்டிப்பார், மன்னிப்பார், தடுத்தாட் கொள்வார்.

தூத்துக்குடி மாவட்டம் கூட்டாம்புளியில் ஓர் அராஜகப் பேர்வழி.

ஊரை அடித்து உலையில் போடும் கலையில் வல்லவன். மலை முழுங்கி மகாதேவன். ஏழைபாழைகள் என்றால் ஏகத் திற்கும் இளக்காரம். போதாக்குறைக்குக் கள் வியாபாரம் தான் அவனது பிரதானத் தொழில். கிராமத்தாருக்குத் தாராளமாக, ஏராளமாகக் கள் கொடுப்பான். காசில்லாத போதும் கடனுக்கு விற்பான். ஒவ்வொருவர் பற்றியும் ஒரு கணக்கு வைத்திருப்பான்.

ஒற்றைக் கால் கொக்கு கணக்காய் சமயம் வரும் வரை காத்திருப்பான். திருப்பித்தர முடியாத அளவிற்குக் கணக்கை ஏற்றிக் கடனுக்காகச் சொத்தை எழுதி வாங்கி விடுவான். ஏமாந்தால் முழுச் சொத்தையும் பிடுங்கி ஏப்பம் விட்டு விடுவான்.

போதையில் வாங்கு வாங்கு என வாங்கிக் குடித்தவர்கள் ஓட்டாண்டியாகித் தெருவில் அலைய வேண்டியதுதான்.

மது மயக்கத்தில் எழுதி வாங்கிய சொத்தைக் கைப்பற்ற அவன் ஆடும் ஆட்டம் கொடூரமாயிருக்கும். கடனைத் திரும்பிக் கட்டாமல் இருக்கிறோமே என்ற குற்ற உணர்வில், ஏதும் செய்ய முடியாத நிலையிலிருக்கும், அந்த அப்பாவிகளைக் கூனிக் குறுக வைத்திடுவான்.

வீட்டில் உலை பொங்கிக் கொண்டிருக்கும் போது கள்ளுக்கடைக்காரனின் கையாட்கள் வீட்டில் புகுந்து சோற்றுப் பானையை எட்டி உதைத்து ஆர்ப்பாட்டம் செய்வார்கள். வீட்டினுள் இருக்கும் பொருட்களை வெளியே வீசி எறிந்து ஊர் கூட்டி அசிங்கப்படுத்துவார்கள்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு அக்கம் பக்கத்தில் நடக்கும் சங்கதிகள், அநீதிகள், எல்லாம் தூரதிருஷ்டியில் காட்சியாகத் தெரிந்துவிடும். சில சமயங்களில் மௌனம் காப்பார். தக்க சமயத்திற்காகக் காத்திருப்பார்.

பல வேளைகளில் உடனடியாகச் செயலில் இறங்கித் தான் யாரெனக் காட்டிவிடுவார்.

அவர் கண்ணில் பட்ட எமகாதகர்கள் காலத்திற்கும் அந்தத் தப்பை மீண்டும் செய்ய மாட்டார்கள். அந்த அளவிற்குத் திட்டித் தீர்த்துத் தண்டனையும் தந்துவிட்டுத் தான் வேறு காரியம் பார்ப்பார்.

கள்ளுக்கடைக்காரனின் கொட்டம் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது. கடன்பட்டோரின் கூக்குரல் தியானத்திலிருந்த சுவாமிகளுக்குச் சாட்சியாய் விரிந்து கேட்டது.



ஒருநாள் வந்ததே ரௌத்ரம் சுவாமிகளுக்கு! அந்த கொடூரனுக்குப் பாடம் புகட்ட உடனே புறப்பட்டார். அய்யண்கண் தேவர் என்பவர் சில நேரம் சுவாமிகளின் அருகிலேயே இருப்பவர். அவர் சுவாமிகளின் சீடர் நிலையில் இருப்பவர் அல்லர். முரட்டுப் பக்தர். கூப்பிட்ட குரலுக்கு ஓடி வருவார். சுவாமிகளின் எண்ணங்களைப் புரிந்து கொண்டு செயல்படுவார்.

அய்யண்கண் தேவரை அழைத்து ‘எலே உனக்குக் கள் குடிக்க வேண்டுமா?’ எனக் கேட்டார்.

அவருக்குக் கள் குடிக்கும் பழக்கம் இருந்ததால் சுவாமிகள் எதற்குக் கேட்கிறார் என்று புரியாமல் விழித்தார். கண்ட மேனிக்குத் திட்டப் போகிறாரோ எனப் பயந்து பேசாமலிருந்தார்.

‘எலே உன்னைத் தான்லே கேட்கறன். கள்ளு குடிக்கிறாயா,’ என்ற படி வேகமாக எழுந்தார் சுவாமிகள்.

நெளிந்தபடியிருந்த தேவர் இன்றைக்கு ஏதோ பெரிதாக நடக்கப் போகிறது என்பதைப் புரிந்து கொண்டு பதில் கூறாமல் தயக்கத்துடன் சுவாமிகளுடன் சென்றார்.

போகும் வழியிலும் சுவாமிகள் விடவில்லை ‘எலே நிஜமாகத் தான் கேட்கேன். கள்ளு குடிக்கிறயா...?

தேவர் அப்பவும் நெளிந்தாரே தவிர ‘ஆம்’ எனப் பதில் சொல்லத் தைரியமில்லாமல் இருந்தார் ரௌத்ர சுவாமி ஆயிற்றே, பதில் சொல்லி வகையாக மாட்டிக் கொண்டால்...

‘ஒன்றும் சொல்ல மாட்டேன், வா லே’ என்று தைரியம் சொல்லித் தேவரை இழுத்தபடி சுவாமிகள் போன இடம் அந்தக் கள்ளுக்கடைக்காரனின் கடைக்குத்தான்.

கடைக்காரனைப் பார்த்து ‘எலே கள் ஊத்துலே’, என்று கட்டளை இட்டார். கடைக்காரன் மொந்தையில் கள்ளை ஊற்ற, ‘குடிலே’ எனத் தேவரைப் பார்த்துக் கட்டளை இட்டார் சுவாமிகள்.

கரும்பு தின்னக் கசக்குமா என்ன தேவருக்கு? தேவர் மொந்தையை எடுத்து மடமடவெனக் குடித்துவிட்டு வைத்தார்.

‘இன்னும் கொடுலே, நீ குடிலே’ கடைக்காரனிடமும் தேவரிடமும் மாறி மாறி சுவாமிகள் கட்டளை போல் இட ஆரம்பித்தார்..

மொந்தை நிறைய, தேவர் குடிக்க, ஒன்பது மொந்தைகள் காலியாயின. இரண்டு மொந்தைக் கள்ளிலேயே தலை சாய்ந்து விடும் தேவருக்கு ஒன்பது மொந்தை உள்ளே போயும் போதை ஏறவில்லை.

கடைக்காரனுக்கு அப்போது ஒரு சந்தேகம் எழுந்தது.

இரண்டு பேருமே பஞ்சைப் பராரிகள் போலிருக்கிறார்கள். காசு பணம் இருக்குமா.... என நினைத்தான். குடிப்பவர் இப்படி மொடாக் குடிகாரனாக இருக்கிறாரே என்ற வியப்பும் கள்ளுக்கடைக்காரனுக்கு எழுந்தது.

உண்மை தான். இரண்டு பேருமே பார்க்க, பஞ்சைப் பராரிகளாகத் தான் இருந்தார்கள். இடையிலே ஒரு வேட்டி. தோளில் ஒரு துண்டு. கையில் ஒரு சிறு பிரம்பு. தோளில் தொங்கும் ஜோல்னா பை. இது தான் சுவாமிகளின் தோற்றம்.

தேவர் இடுப்பில் வேட்டி, அதன் மேலே ஒரு துண்டு, அவ்வளவு தான்.

இப்படி இருந்தும் சுவாமிகளின் அதிகார தோரணை.

'காசு இருக்கா?... முதல்ல குடிச்ச ஒன்பது மொந்தைக்கும் காசு தா'. கண்டிப்பு காட்டினான், கள்ளுக்கடைக்காரன்.

'ஏன்லே... நம்பிக்கை இல்லையா?' வெடித்தார் சுவாமிகள். 'நானும் வந்ததிலிருந்து பாக்கேன்... பெரிய சீமையிலிருந்து வந்த மாதிரி பேசிக்கிட்டு இருக்கே முதல்ல காசை வைவே', கள்ளுக்கடைக்காரனும் எகிறினான்.

'பணத்தைக் கொடுத்துவிட்டு மேற்கொண்டு குடி... எவ்வளவு வேண்டுமினாலும் குடி... நான் ஏன்னு கேட்பேனா' என உரத்துப் பேசினான். முறைத்தான்.

'அவ்வளவு தான்லே இந்தா', என ஜோல்னா பைக்குள் கையைவிட்டு எடுத்துக் கள்ளுக்கடைக்காரனிடம் கொடுத்தார், சுவாமிகள்.

அது பணமல்ல, தங்கக்கட்டி பெரிய தங்கக்கட்டி, இரண்டு கிலோ இருக்கும் அத்தனையும் பத்தரை மாற்றுத் தங்கம்!

'இந்தா,' என நீட்டப்பட்ட பெரிய தங்கக் கட்டியைப் பார்த்து திகைத்த கள்ளுக்கடைக்காரனிடம், 'இதுக்கு உன் கிட்டே பணம் இருக்காலே,' எனக் கேலியாகக் கேட்டார் சுவாமிகள்.

ஜொலிக்கும் தங்கக் கட்டி கடைக்காரனுக்குப் பேராசையைத் தான் ஊட்டியது. பஞ்சைப்பராரிகள் தானே, ஏமாற்றி அபகரித்துவிடலாம் எனத் திட்டம் போட்டான்.

'என் அண்ணன் வீட்ல களவு போன தங்கக் கட்டி மாதிரியில்ல இது இருக்கு', என்று மிரட்டலில் இறங்கினான் அந்த முரட்டுக் கள்ளுக்கடைக்காரன்.

தேவருக்கு ஒன்றுமே புரியவில்லை. எல்லாவற்றையும் சுவாமிகள் பார்த்துக் கொள்வார் என எண்ணினார்.

பாவம் அவருக்கு அவர் கவலை. இன்னும் போதை ஏறவில்லையே என்ற கவலையில் மீளாதிருந்தார்.

கள்ளுக்கடைக்காரன் மூளை வேகமாக வேலை செய்தது. 'டேய் வாங்கடா. இந்த 'திருட்டுப் பசங்க, ரெண்டு பேரையும் கட்டிப் போடுங்கடா', எனச் சத்தம் போட்டான்.

அடி ஆட்கள் போலிருந்த முரட்டு ஆசாமிகள் ஓடி வந்தார்கள். சங்கர சுவாமிகள் ஏதும் பேசவில்லை. அமைதியாய் கள்ளுக்கடைக்காரனைப் பார்த்து 'தூ...', எனச் சொன்னார்.

அவ்வளவு தான். காட்சி மாறத் தொடங்கியது. கள்ளுக் கடைக்காரன் பேச்சு மூச்சில்லாமல் படார் எனத் தரையில் விழுந்தான். கட்டிப் போட வந்த அடியாட்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. திகைத்தபடி முதலாளியை நெருங்கித் தொட்டுப் பார்த்தார்கள்.

நாடி இல்லை பேச்சு இல்லை, மூச்சும் இல்லை.

நடுங்கியபடி கதறத் தொடங்கினார்கள்.

தொடாமல் படாமல் சுவாமி முதலாளியை வீழ்த்தி விட்டாரே, அடுத்து இந்தக் கதி நமக்குத் தானா என அஞ்சி எழுந்தோட நினைத்தனர்.

சுவாமிகள் பிரயோகித்த முறை, நோக்கு வர்மம் என்றும், அது சித்தர்களுக்கு மட்டுமே சாத்தியமானது என்றும், உடனிருக்கும் அய்யன்கண் தேவருக்கே தெரியாத போது அந்த முரடர்களுக்கு எப்படித் தெரியும்?

சக்தி வாய்ந்த சாமியார் எனப் புரிந்து கொண்டு அவரது அடுத்த செயலுக்காகப் பயந்தபடி பார்த்திருந்தனர்.

கள்ளுக்டையில் அதற்குள் கூட்டம் கூடிவிட்டது.

செத்த பிணமாய்க் கடைக்காரன் கிடக்கிறானே என்ற ஓலம் உற்றார் உறவினர்களை அங்குக் கொண்டு வந்து சேர்த்தது. ஊரே ஒட்டுமொத்தமாகச் சுவாமிகளின் காலடியில் விழுந்தது. ‘சுவாமி அவன் செஞ்சது தப்பு தான். உயிர்பிச்சை தாருங்க’, என்று மனைவி மடிப்பிச்சை கேட்டாள்.

கதறிய படியே. ‘தாத்தா சாமி, வரம் தந்து பிழைக்க வையுங்கள்’ குழந்தைகள் குமுறினார்,

உறவினர்கள், ‘சுவாமி என்ன செய்யச் சொல்றீங்களோ அப்படியே செய்யறோம்,’ எனச் சத்தியம் செய்தனர்.

‘ஊரை ஏய்ச்சுக் கொள்ளை அடிச்சான். சாமிஆரணங்கு கிட்டே மாட்டிக்கிட்டான். சங்கறுத்து விட்டாரு, சங்கரரு ஊர் பேசி ஓய்ந்தது. சுவாமிகள் பதிலுக்காக ஊரே காத்திருந்தது.

சுவாமி அமைதியாய், ஆனால் ஆணித்தரமாய்ச் சொல்ல ஆரம்பித்தார்.

‘எலேய் எல்லாருக்கும் இது பாடமாயிருக்கட்டும். ஊரையே ஏமாத்திக் கொள்ளை அடிக்கிறவனுக்கு இந்த கதிதான் ஏற்படும். பெண்டு பிள்ளைகளைத் தாயா புள்ளையா நினைக்காம பெண்டாள நினைக்கிறவனுக்கும் இதே கதிதான். இவனை மீண்டும் பொழைக்க வைக்க என்னால

முடியும். ‘அதுக்கு என்ன வேணுமானாலும் செய்யறோம் சாமி’, ‘ஒட்டு மொத்தக் குரலும் உறுதியாய் எழுந்தது.

இவன் முறை தவறிச் சம்பாதிச்ச சொத்தெல்லாம் உரியவங்களுக்குத் திரும்ப கொடுத்திடணும். இவனாலே சொத்து பறிக்கப்பட்டு, அடையாளம் இல்லாமல் ஊரை விட்டே ஓடிப் போனவர்களின் சொத்தினை வித்து ஒரு தம்பிடி கூட மீதம் இல்லாமல் அத்தனையும் அன்னதானம் செய்திடணும். இம்மியளவும் மீறக்கூடாது. மீறினால் தொலைச்சுப் புடுவேன் தொலைச்சு. நான் இங்க தான் எங்கவாவது சுற்றிக் கொண்டிருப்பேன். ஜாக்கிரதை....

சுவாமிகளின் குரல் கூடியிருந்தோருக்குச் சரியான தீர்ப்பாய்த் தெரிந்தது.

‘சத்தியம் செய்யறோம்’ என்று கதறியபடி உறவினர்கள் சுவாமிகளின் காலைத் தொட்டனர்.

நோக்குவர்மத்தால் இறந்தவர்களை மூன்றே முக்கால் நாழிகையில் பிரயோகித்த சித்தர்களால் உயிர்ப்பித்து விடவும் முடியும்.

சங்கர சுவாமிகள் திருப்தியான புன்னகையோடு சவமாயிருந்த கள்ளுக்கடைக்காரனை அர்த்தத்தோடு நோக்கினார்.

கள்ளுக்கடைக்காரன் கண்விழித்தான்.

நடந்தவற்றை நினைத்துப் பார்த்தான். சுவாமிகளின் காலடியை இறுகிப் பற்றினான். கண்ணீரால் பாதமலர்களை நனைத்தான். சுவாமிகள் எழச் சொல்ல, மெல்ல எழுந்தான். அப்போது அவன் புதிதாகப் பிறந்திருந்தான்.

பின் அவன் நல்லவனாய் ஊர் போற்றக் காலம் தள்ளினான்.

என்னே, சுவாமிகளின் கருணையும் கண்டிப்பும்! தண்டிப்பும், மன்னிப்பும், தடுத்தாட்கொள்வதும்.

சங்கர சுவாமிகளுக்கு இணை சங்கர பரமஹம்ச சுவாமிகள் தான்.

# 10

# 'கண்டச் சித்து' கண்ட சுவாமிகள்

சித்தன் போக்கு, சிவன் போக்கு என்கிற மாதிரி சங்கர பரமஹம்சர் எங்கேனும் செல்வார். கிடைக்கிற இடத்தில் ஓய்வெடுப்பார். அவருடன், அவருடைய பரம பக்தர் அய்யன்கண் தேவரும் சில நேரம் ஒட்டிக் கொண்டு இருப்பார்.

ஒருமுறை ஒரு கிராமத்திற்கு சென்று திரும்ப நேரமாகிவிட்டதால் ஓர் அன்பரின் குடிசையில் இருவரும் தங்கினர். சுவாமிகள் கட்டிலில் படுத்துக் கொள்ள, தேவர் அருகில் தரையில் படுத்துக் கொண்டார்.

புது இடம் என்பதால் அய்யன்கண் தேவருக்குத் தூக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு படுத்தார். சுவாமி தூங்கி விட்டரா.... என்று எட்டி பார்த்தார்.

அய்யன்கண் தேவர் பார்த்த மாத்திரத்தில் ஆடிப் போனார். சப்த நாடியும் ஒடுங்கிப் போயிற்று. கத்த முயற்சித்தார். வாயாடியதே தவிர, நாக்கு அசைந்ததே தவிர, சொற்கள் பெயரவில்லை அவர் உடம்பு நடுங்க ஆரம்பித்தது. மூச்சு முட்டத் துவங்கியது.

கட்டிலில் சுவாமிகளின் தலை, கால், கைகள், முண்டம் எல்லாம் தனித் தனியாகப் பிரிந்து துண்டுதுண்டாகக் கிடந்தன.

அந்த நடுக்கத்திலும் ஏதாவது கனவாய் இருக்கும் என்று தன்னைக் கிள்ளியும் பார்த்தார். உண்மைதான், கனவல்ல நிஜம் தான்.

உண்மையிலேயே சுவாமிகளில் உடல் உறுப்புகள் வேறு வேறாகத்தான் கிடந்தன. மீண்டும் கட்டிலைப் பார்க்கப் பயம்.

'அய்யோ', நம் சுவாமியை யாரோ வெட்டிப் போட்டுவிட்டார்கள்' என மூளை கூக்குரல் இட்டது. எதிரொலியாய்க் கத்த நினைத்தாரே தவிர சொற்கள் எதுவும் எழவில்லை.

இறுக்கி கண்களை மூடிக் கொண்டு சில நிமிடம் யோசித்தவர் நடப்பது நடக்கட்டும் எனத் தைரியமாக எழுந்து உட்கார்ந்து கண்களை மெல்லத் திறந்தார்.

இப்போது கட்டிலில் ஒரு நாகப் பாம்பு... 'உஸ்ஸ்' என்று படமெடுத்து சீறியதுச் பாம்பைப் பார்த்ததும் தேவருக்கு உயிர் ஒடுங்கிப் போயிற்று. பயந்து மீண்டும் ஒடுங்கி அப்படியே தரையில் சாய்ந்து விட்டார்.

அதன் பின் கண் திறக்கவே இல்லை.

கொஞ்ச நேரம் கழித்து சுவாமிகளின் குரல் மெதுவாகத் தேவரை எழுப்பியது. கலவரம் குறையாமல் கண்விழித்தார் தேவர்.

கட்டிலில் ஏகாந்தமாய் உட்கார்ந்திருந்த சுவாமிகள் 'என்னலே பயந்திட்டியா' என அர்த்த புஷ்டியுடன் சிரித்தபடி கேட்டார்.

'இம்...இம்... ஆமாம்' என அப்போதும் பயந்தபடியே பதில் சொன்னார் தேவர்.

உடலை அக்குவேறு ஆணிவேராகப் பிரித்துப் போடுவது, பின் ஒன்று சேர்ப்பது சித்தர்களுக்குக் கைவந்த கலை.

இதை 'கண்டச் சித்து' என்பார்கள்.

முதலில் பயந்து போன அய்யன்கண் தேவர், சுவாமிகள் நிகழ்த்திய கண்டச் சித்துவை நேரில் கண்டபின் நெகிழ்ந்து போனார்.




இந்நிகழ்ச்சிக்குப் பின்னர், அன்பர்கள், சங்கர பரமஹம்சரின் மகாமித்தியங்களை மனமுருகிக் கேட்கும் போது எல்லாம் சுவாமிகள் நிகழ்த்திக் காட்டிய கண்டச் சித்துவையும் தான் பார்த்து பயந்து மயங்கிய நிகழ்வையும் சிரிக்கச் சிரிக்க மெய் சிலிர்க்கச் சொல்வது அய்யன்கண் தேவருக்கு வழக்கமாய் போனது.

# 11

# அடாவடிகளை அடக்கும் அற்புதச் சுவாமிகள்

சங்கர பரமஹம்ச சுவாமிகள் யாருக்கும் எதற்கும் பயப்படமாட்டார். அவருக்கு முன்னே ரௌத்ரம் தயாராய் பயணித்துக் கொண்டிருக்கும். அவருக்கே உரித்தான வார்த்தைகளில் தான் எவரையும் விளிப்பார்.

ரவுடித்தனம் பண்ணுபவர்களைக் கண்டால் தான் அறவே பிடிக்காதே! ரவுடி வலுத்தவனா, கூட்டம் சேர்த்துக் கொண்டு வருவானா என்றெல்லாம் பார்க்க மாட்டார். காமா சோமாவென்று கண்டபடி திட்டித் தீர்ப்பார். அவர் பேசுவதே பயங்கொள்ள வைக்கும். சுவாமிகளைப் பற்றி அறியாத ரவுடிகள் அவரின் ஏச்சுகளைத் தாங்காமல் கைகலப்பில் இறங்கி விடுவதும் உண்டு.

சண்டை என வந்து விட்டால் சுவாமிகள் குஷியாகி விடுவார். ரவுடிகளைத் தண்டிக்க அப்போது தான் முடியும் என நினைப்பார்.

ரவுடி தனியே வந்து தாக்கினாலும் சரி, கூட்டமாக வந்து அடிக்க ஆரம்பித்தாலும் சரி, 'அடி மவனே அடி, படு மவனே படு' என்று ராகம் போட்டுப் பாடியவாறே அடிகளை வாங்கிக் கொண்டு இருப்பார்.

இத்தனைக்கும் சிலம்பாட்டத்தில் வல்லவர், சுவாமிகள்.

அடிக்கப்படும் அடி எதுவும் அவரைத் தீண்டாது. அவருக்கு அவை மலர்த் தூவலாய் அமைந்து போகும்.

பதிலாக ஒவ்வொரு அடியும் ஐந்தாறு மடங்குகளாக அடிப்பவருக்கே அடியாய் விழும். ஓரிரு அடிகளில், அவை தமக்குத் திருப்பிவிடப்பட்டதை உணர்ந்து வலி தாங்காமல் ரவுடிகள் துவண்டு விழுவர்.

சிலர் பேச்சு மூச்சில்லாமல் சவம் போல் எழாமல் இருப்பர்.

பிறகு அந்த ரவுடிகளின் சொந்த பந்தங்கள் ஓடி வந்து சுவாமிகளின் காலடியில் விழுவார்கள். அவர்களுக்காக ரவுடிகளை எழச் செய்வார். ரவுடிகளும் மன்னிப்புக் கேட்பார்கள். திட்டுவார். மன்னிப்பார்.

'எலே, ஒழுங்கா இல்லாட்டி தொலைச்சுப் புடுவேன் தொலைச்சு' என்று கறாராகச் சொல்லி அனுப்புவார்.

சுவாமிகள் உலவி வந்த இடங்களில் எல்லாம் ரவுடி ராஜ்யம் அழிந்து விடும். ஓடி ஒளிந்து விடுவர் ரவுடிகள்.

அங்கு சங்கர சுவாமிகள் நாட்டிய அன்புக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கும்.

# 12

# பேராசையை நிராசையாக்கிய பெருமகனார்

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் ஆற்றல்கள், சித்து விளையாட்டுகள் பரவலாக ஊருக்குத் தெரியத் தொடங்கிய காலம்.

அன்பர்கள் கூட்டம் அதிகரிக்க ஆரம்பித்திருந்தது. ரசவாதம், தீராத நோய்களை தீர்த்து வைக்கும் சித்த மருத்துவ ஞானம், கைராசி போன்றவை பேராசை கொண்ட அன்பர்களையும் உருவாக்கத் தொடங்கின.

எப்படியாவது சுவாமிகளிடம் நெருங்கி நம்பிக்கையைப் பெற்றுச் சில ஆற்றல்களைப் பெற்றுக் கொண்டு, குறுக்கு வழியில் சுக ஜீவனம் நடத்தலாம் எனத் திட்டம் தீட்டினர் மூன்று அன்பர்கள்.

சகலமும் அறிந்த சங்கர சுவாமிகள் அன்பர்களின் அடிமன ஆசைகளைத் துல்லியமாக அறிந்திருந்த போதிலும் அவர்களிடம் வேறுபாடு காட்டாமல் அவர்களையும் சமமாகவே நடத்தி வந்தார்.

ஆனாலும் அந்த மூன்று கில்லாடிகள் சுவாமிகளிடம் நச்சரிக்கத் தொடங்கினர். சில வித்தைகளையாவது கற்றுத் தரக் கோரினர்.

சுவாமிகள் 'கொஞ்சம் பொறுங்கள்' எனக் காலம் தாழ்த்திப் பார்த்தார். அவர்கள் பேராசை கொழுந்து விட்டு எரியவே, இனி அந்தத் தீயை அணைக்க வேண்டியது தான் என முடிவெடுத்தார்.



அது தாமிரபரணியில் வெள்ளம் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்த சமயம்.

ஒரு நாள் சுவாமிகள் அந்த மூன்று பேரையும் கூப்பிட்டு, 'எலே எவனுக்கெல்லாம் வித்தை வேணும்? வாங்கலே வாங்கலே,' என அழைப்பு விடுத்தார்.

இதற்காகவே வெறியுடன் காத்துக் கொண்டிருந்த மூன்று அன்பர்களும் 'காலம் கனிந்துவிட்டது' என்று உடனே

புறப்பட்டனர். 'வாங்கலே, ஒரு இடத்துக்குக் கூட்டிப் போறேன். அங்க வச்சு வித்தைகளைக் கத்துத் தர்றேன். என்றபடி அவர் முன் நடக்க அவர்கள் மூவரும் ஆர்வமாக உடன் சென்றனர்.

கரை புரண்டு நுங்கும் நுரையுமாக ஓடிக் கொண்டிருந்தது தாமிரபரணி ஆறு.

கரையிலிருந்து ஆற்றின் குறுக்கே வெள்ளம் குறையும் போது திசைமாற்றித் திறந்துவிட மடைகள் இருக்கும். அதைக் 'கலிங்கு' என்பார்கள். கொஞ்ச தூரம் ஆற்றின் குறுக்கே போடப்பட்டிருக்கும் கலிங்கின் தடுப்புச் சுவரில் நடந்து போனால் இரும்புச் சட்டம் கொண்ட இயந்திரம் இருக்கும். அந்தப் பகுதிக்கு அவர்களை அழைத்துச் சென்றார் சுவாமிகள்.

அங்கு வைத்துதான் ரகசியமாகச் சொல்லித் தருவார் போலிருக்கு, என்று நினைத்த மூவரும் காட்டாற்று வெள்ளமாய் ஓடிக் கொண்டிருக்கும் தாமிரபரணியில் தடுப்புச் சுவரில் நடப்பது உயிர்ப் பயத்தைத் தோற்றுவித்தாலும் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சுவாமிகள் பின்னால் சென்றனர்.

கரணம் தப்பினால் மரணம் கதை தான்.

ஆற்றின் நடுவே இயந்திரப் பகுதிக்கு அனைவரும் சென்றடைந்த பின்னர் 'எவனுக்கெல்லாம் வித்தை வேணுமோ அவனல்லாம் இங்க இப்ப குதிங்கல,' என்றார் சுவாமிகள்.

நின்று கொண்டிருக்கும் போது தப்பித் தவறி விழுந்தாலோ, சுவாமிகள் சொல்கிற மாதிரி நதியில் குதித்தாலோ அதோ கதிதான்.

ஒருகால் நீச்சல் தெரிந்தியிருந்தாலும் தப்பிக்க வழி இல்லை. நேரே கடலுக்குப் போய்ச் சேர வேண்டியது தான் என நினைத்த மூவரும் உயிர்ப் பயத்தில் மூழ்கினர்.

‘வித்தை கத்து கொடுக்கச் சொன்னா... சாகறதுக்கு வழி காட்டுராறே’ என உடனடியாக ஒருசேர நினைத்தார்கள்.

அவர்களில் இரண்டு பேர் தப்பித்தால் போதும் எனச் சொல்லாமல் கொள்ளாமல் பின்னங்கால் பிடரியில்பட அதே சமயம் ஜாக்கிரதையாக மதகின் மீது ஓடிக் கரை சேர்ந்து மறைந்தனர்.

மீதியிருந்த ஒருவர் மட்டும் சுவாமிகளைப் பார்த்து ‘சுவாமி, முதலில் நீங்க குதிங்க. நான் பின்னாடியே குதிக்கிறேன்’ எனக் கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சொன்னார்.

‘நான் குதிச்சா நீயும் குதிச்சுருவியா... சரிலே நான் குதிக்கிறேன்’ என்று சொல்லிவிட்டுச் சுவாமிகள் வெள்ளத்தில் குதித்தார். அந்த அன்பர் திக்கித்தபடி அடுத்து என்னாகுமோ என வெள்ளத்தைப் பார்த்தபடி இருந்தார்.

குதித்த சுவாமிகளோ இடுப்பில் கட்டிய வேட்டி கட்டியபடி இருக்க, தோளில் போட்டிருந்த துண்டு போட்டபடி இருக்க வெள்ளத்தின் மீது அப்படியே நின்று, பின் தண்ணீரின் மேல் நடந்து கரை சேர்ந்தார்.

கரையில் இருந்தவர்கள் இந்த அற்புத அதிசயக் காட்சியைக் கண்டு மெய்சிலிர்த்துக் கரம் குவித்து நின்றனர்.

ஞானவித்தைகள் தப்பானவர்கள் வசம் போய்ச் சேர்ந்துவிடக் கூடாது என்பதில் உறுதியாய் இருந்த சுவாமிகள் எதுவுமே நடக்காத மாதிரி, ‘சங்கர சங்கர சம்போ’ என்று ஆனந்தத்தோடு பாடியபடியும் ஆடியபடியும் தாமிரபரணிக் கரையினில் போய்க் கொண்டிருந்தார்.

தண்ணீரில் நடப்பது சுவாமிகள் போன்ற தவசிகளுக்கே வாய்ப்பது. போலிகள் அவ்வித்தையைக் கற்க முடியாது. நீரின் மேல் நிற்கவும் முடியாது நடக்கவும் முடியாது. இது ஓர் உயரிய சித்து.

# 13

# அடாவடிக்குத் தடாலடி

ஏரல் பகுதியில் ஒரு ரவுடி இருந்தான். அட்டகாசம் செய்வதும், ஏழை எளியவரை அச்சுறுத்துவதும், அப்பாவிப் பெண்களை அபகரிப்பதும் தட்டிக் கேட்பவர்களைத் தரங்கெட ஏசுவதும், வெட்டிப் போடுவதும் அவனது வாடிக்கை. எல்லோரும் தினம் தினம், அஞ்சிஅஞ்சி அடங்கியிருந்தனர்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் காதுக்கு விஷயம் வந்த போது 'இந்த மாதிரி செய்ய வேண்டாமன்னு சொல்லுலே' என்று சொல்லி அனுப்பினார்.

ரவுடி கேட்பதாயில்லை. கொக்கரித்தான். புத்தி சொல்ல வந்தவர்களிடம் சுவாமியைப் பற்றிக் கேலி பேசினான்.

அவர் தான் அட்டமா சித்தரயிற்றே. அவருக்கு எல்லாம் தெரியும். தெரியாதது என்று ஏதுமில்லை.

ரவுடியின் அடியாள் ஒரு நாள் சுவாமி கண்ணில் பட, அவனை அழைத்த சுவாமிகள் 'ரவுடித் தனம் வேண்டாம்லே. அது உதவாது. பார்க்கறீயாலே' என்று சொல்லி பரகாயப் பிரவேச சித்தி ஆற்றலைப் பிரயோகித்தார்.

அடுத்தவர் உடலையும் மனதையும் பிரயோகிப்பவர் இஷ்டப்படி இயக்குவதே பரகாய பிரவேசம்

அடுத்த கணமே அந்த அடியாள் தன்நிலை இழந்தான். பின் நடந்த கதையும், இயக்கமும் சங்கர சுவாமிகளின் அற்புதத்திற்குச் சான்றுகள்.



அதன்பின் அந்த அடியாள் ரவுடியின் மனைவியின் அதீத அந்தரங்கத் தொடர்புக்குள்ளானாள். அவர்கள் ரகசிய சந்திப்பும் உறவும் ரவுடிக்குத் தெரியவரக் கொதித்துப்போனான். ஒருமுறை நேரிலேயே பார்த்துக் கொலை வெறிக்கு உள்ளானான், அந்த ரவுடி.

அவன் கோபம் சுவாமிகள் பக்கம் திரும்பியது. சுவாமிகளைப் பழி வாங்கப் போவதாகச் சபதம் செய்தான்.

ஏரல் ஆற்று மணல்வெளியில் சுவாமிகள் படுத்துக் கொண்டு இருப்பதைக் கேள்விப்பட்டு விரைந்தோடி வந்தான், வெட்டரிவாளோடு.

நிற்கக் கூட முடியாத கடும் வெயில். சுவாமிகளோ வெயில் தரையில் சாவதானமாகப் படுத்திருந்தார். வெட்டரி வாளோடு ஒரே போடு. அவ்வளவு தான். வெட்டரிவாளை ஓங்கினான்.

சுவாமிகள் எட்டு உருவம் கொண்டு, எட்டு சுவாமிகள் சூழ்ந்திருக்க மொத்தம் ஒன்பது சுவாமிகளாகக் காட்சி அளித்தார்.

இதில் யாரை வெட்டுவது? குழம்பிப் போனான்.

ரவுடியின் ஓங்கிய கைகள் துவளத் துவண்டு போனான்.

'இப்படிப்பட்ட மகானையா கொல்லத் துணிந்தேன்' எனப்பயந்தான். அபயம் தேடி சுவாமிகள் திருவடியில் விழுந்தான்.

அவனைச் சுவாமிகள் மன்னித்ததும் அதன்பின் அவன் முழு மனிதனாக உலவியதும் சுவாமிகளின் பெருங்கருணை.

# 14

# நல்லவர்களுக்கு உதவும் நல்ல சுவாமிகள்

ஏரலில் 'ஆனந்த முதலியார் பர்ம்' என்ற ஒரு ஜவுளிக் கடை இருந்தது.

அக்கடையில் சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு எப்போதும் எந்த நேரத்திலும் ராஜ உபசரிப்பு தான். சுவாமிகள் கடைக்கு வந்தாலே முதலாளி முதற்கொண்டு ஊழியர் வரை அத்தனை பேருக்கும் ஆனந்தம் பெருகிவிடும்.

ஓடோடி வந்து கடைக்குள் சுவாமிகளை அழைத்துச் சென்று சுவாமிகளுக்கு ஒரு பட்டுத் துண்டைத் தோளில் போட்டுவிட்டு ஆசி கேட்பார்கள். சுவாமிகள் 'நல்லா இருப்பலே' என மனமார வாழ்த்திவிட்டுக் கடையை விட்டு வெளியேறுவார்.

அவர் வந்து சென்ற நாள் முழுதும் கடை வியாபாரம் அபாரமாயிருக்கும். கூட்டம் அலை மோதும். அதனால் அவர் வருகைக்குத் தினம் தினம் காத்திருப்பார் ஜவுளிக்கடைக்காரர்.

ஜவுளிக்கடைக்காரர் போட்டுவிட்ட பட்டுத் துண்டைத் தோளில் அணிந்தபடி வீதியில் சென்று கொண்டிருக்கும் சுவாமிகள் கொஞ்ச நேரமே அதைப் போட்டுக் கொண்டிருப்பார்.

யாரேனும் நல்ல ஏழை எளிய மனிதர் எதிரில் கிழிந்த துண்டுடனோ, தோளில் துண்டு இல்லாமலோ தென்பட்டால் போதும் சுவாமிகள் போகிற போக்கில் அவரது தோளில் தான் அணிந்திருக்கும் துண்டைப் போட்டுவிட்டு 'நல்லா

இருப்பலே' என்று வாழ்த்தியபடி அவரது அழுக்குத் துண்டைத் தானெடுத்துப் போட்டுக் கொண்டு போய்க் கொண்டிருப்பார்.

துண்டு பெற்றவர் வாழ்வு அதற்குப் பின்னர் அமோகமா யிருக்கும். அடுத்தவருக்குத் துண்டு போட்டவுடன் சுவாமிகளின் குதூகலம் அதிகரிக்கும். 'சங்கர சங்கர சம்போ' என ஓங்கி ஒலித்தபடி நடையைக் கட்டுவார். அவரது குரலைக் கேட்டுத் துள்ளாத மனங்கள் எல்லாம் துள்ளும்.

# 15

# தாத்தா சுவாமிகள்

*சிறு தொண்ட நல்லூரிலிருந்து சங்கர பரமஹம்ச சுவாமிகள் மணலூருக்குச் சென்று கொண்டிருந்தார்.*

*அவர் ஓர் ஊருக்கு ஏன் செல்கிறார், எதற்காகச் செல்கிறார், மீண்டும் அதே ஊருக்கு எப்போது வருவார் என்பதெல்லாம் யாராலும் சொல்லவோ, யூகிக்கவோ, முடியாத விஷயம். அது தானே சித்தன் போக்கு.*

*மணலூர் பக்கத்தில் ஓர் ஆறு வயதுச் சிறுமி. ஒரு கிளியை வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். பச்சைக்கிளி அந்தக் குழந்தையைப் போலவே அழகாயிருந்தது. கொஞ்சிப் பேசியது.*

*சுவாமிகள் அக்கிளியையும் சிறுமியையும் பார்த்தார். சிறுமியை அருகில் அழைத்தார். அவள் ஆசை ஆசையாய் வளர்த்த கிளியைக் கேட்டார். கொடுத்தாள். சில நொடிகளில் அக்கிளியின் கழுத்தைத் திருகிக் கீழே போட்டுவிட்டுப் பயணம் தொடர்ந்தார்.*

*அந்தச் சிறுமிக்கு எதுவுமே புரியவில்லை. கீழே விழுந்திருந்த கிளியைத் தூக்கினாள். அது செத்துப் போயிருந்ததால் அசையவில்லை. ஓடவில்லை. 'கீ... கீ' எனப்பாடவில்லை. அதிர்ந்தாள். அழுதாள். கூக்குரலிட்டாள். தரையில் விழுந்து உருண்டாள். புரண்டாள்.*

*சுவாமிகள் போன திசை பார்த்தாள். அவர் வெகு தூரத்தில் போய்க் கொண்டிருந்தார்.*

பின்னொரு நாள் ஏறக்குறைய எட்டு ஆண்டுகள் கழித்து அதே சுவாமி. அதே சிறுமி. இளம் மொட்டாய், அதே இடம்.

சுவாமிகள் 'சங்கர சங்கர சம்போ' பாட்டுப் பாடிய படி இறை நினைவாய் நடந்து வந்து கொண்டிருந்தார்.

திடீரென ஓர் இளமை மிளிரும் கை ஞானம் ஒளிரும் சுவாமிகளின் நடையைத் தடுத்தது. 'தாத்தா, நீங்க தானே அன்றைக்கு என் கிளியைக் கொன்று போட்டுட்டுப் போயிட்டீங்க.'

அவள் கண்களில் பொலபொலவெனக் கண்ணீர். சுவாமிகளுக்குப் பழைய சம்பவம் ஞாபகத்திற்கு வந்திருக்க வேண்டும்.

சிரித்தபடியே சுற்றும் முற்றும் பார்த்தார். அருகிலேயே ஒரு மண் குவியல் தென்பட்டது. அங்கு சென்று மண்ணைத் தோண்டினார். உயிருள்ள அதே கிளி 'கீ கீ' யெனக் கிள்ளை மொழி பேசிய படி உள்ளே இருந்து வந்தது.

அந்தக் கிளியைச் சிறுமியிடம் கொடுத்தார். பேச ஏதுமில்லை என நினைத்தாரோ என்னவோ நடையைக் கட்ட முயன்றார்.

சுவாமிகள் தந்த கிளியைத் தோளில் சுமந்த படியே அந்தப் பெண் அழுகையை விலக்கி ஆரவாரித்தபடியே சுவாமிகளின் காலில் விழுந்து ஆசீர்வாதம் கேட்டாள்.

சுவாமிகள் அருள் தருவதில் வள்ளல் ஆயிற்றே. வாரி வழங்கினார்.

அருளாசிகளைப் பெற்று எழுந்த சிறுமிக்கு மகிழ்ச்சி. சுவாமிகளைக் கொண்டாட ஆசை... 'தாத்தா தாத்தா' என்று கொஞ்சி மகிழ்ந்தாள். சுவாமிகள் பேசவில்லையே தவிர அச்சி றுமியின் பேச்சு அச்சூழலை ரம்மியமாக்கியது.



இந்நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்த மக்களும் சுவாமிகளைத் தொழுதனர். அவர்களும் ‘தாத்தா தாத்தா’ என அழைத்து மகிழ்ந்தனர்.

அதன் பின்னர் ‘தாத்தா’ என்ற பெயரே சுவாமிகளோடு ஒட்டிக் கொண்டது. எல்லோருக்கும் ‘தாத்தா சுவாமிகள்’ ஆனார்.

# 16

# அழைத்தவர் குரலுக்கு வரும் அற்புத சுவாமிகள்

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருமை பெருமைகள் திருநெல்வேலி மாவட்டம் முழுக்கப் பரவத் தொடங்கியிருந்த சமயம்.

நாளுக்கு நாள் அவருக்கு அன்பர்கள் பெருகிய வண்ணம் இருந்தனர். தாயிடம் குழந்தைகள் கேட்பது போல் என்ன கேட்கிறோம் எனக் கூட யோசிக்காமல் பிரியமாக எதை எதையோ கேட்பார்கள்.

உண்மையான அடியவரை அடையாளம் கண்டு கொள்ளக் கூடிய சுவாமிகளும், அவர்தம் விருப்பத்திற்கேற்ப வேண்டியவற்றை வழங்கி மகிழ்வார்.

வரண்டியவேல் கிராமத்தில் சங்கர சுவாமிகளுக்கு ஒரு பரம அன்பர். அவர் பேச்சும் மூச்சும் பரமஹம்சர் தான். யாரேனும் சுவாமிகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தால் போதும், நேரம் காலம் பார்க்காமல் கேட்டுக் கொண்டே இருப்பார்.

அவருக்கு எப்போதும் சுவாமி தன்னருகிலேயே இருக்க வேண்டும், தன்னிடம் பேசிக் கொண்டே இருக்க வேண்டும் என்ற பேரவா இருந்தது. ஒரு நாள் சுவாமிகளிடம் நேரில் பேசிக் கொண்டிருக்கும் போது, தன் ஆசையை வெளிப்படுத்தினார்.

அந்த அன்பரின் வேண்டுகோளைக் கேட்ட மாத்திரத்தில் சுவாமிகள் 'அவ்வளவு தானே லே, கொஞ்சம் பொறு. ஏற்பாடு பண்றேன்' எனக் காத்திருக்கச் சொன்னார்.

அவருக்குச் சடாச்சர சக்கரம் இயந்திரம் ஒன்றைக் கொடுத்து, ‘என் பேரைச் சொல்லி வழிபாடு செய். நான் கூடவே இருப்பேன்லே. நீ கூப்பிட்ட குரலுக்குப் பதில் கொடுப்பேன்லே, என்று உறுதியும் தந்தார்.

விரும்பிய போதெல்லாம் ‘சுவாமி’ என அவர் அழைக்க ‘என்னலே’... என்று இயந்திரத்தில் இருந்து குரல் எழும்பும். இருவருக்குமான பேச்சு தொடரும்.

‘அழைத்தவர் குரலுக்கு வருவேன்’, என்பார் கீதையிலே கண்ணபிரான்.

இந்தச் சித்தபிரானும் அப்படித்தான். பிடித்துப் போன அன்பர்கள் அழைத்தால் நேரங்காலம் பார்க்காது ஓடோடி வருவார். அருகிருந்து பாதுகாப்பார்.

# 17

# சாமி வருது சப்பரம் வருது

சின்னக் குழந்தைகள் என்றால் சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு மிகப் பிரியம். அவர்களோடு சேர்ந்து கொண்டு தானும் ஒரு குழந்தையாய் நேரம் காலம் இல்லாமல் விளையாடிக் கொண்டு இருப்பார்.

ஏரல் பகுதியில் சுவாமிகள் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருப்பதை அநேகரும் பார்த்துப் புளகாங்கிதம் அடைந்திருக்கிறார்கள்.

தென்னம் ஓலையை கொண்டு வரச் சொல்லுவார். அவரது பொடித் தோழர்கள் ஓடிப்போய் கொண்டு வருவார்கள்.

அதில் சுவாமிகள் வசதியாக சம்மணம் போட்டு உட்கார்ந்து கொள்வார். 'எலே இப்ப இழுங்க லே' எனப் பொடிசுகளுக்கு உத்தரவிடுவார்.

அவர்கள் 'ஹே' எனக் கத்தியவாறே மட்டையையும் அதில் ஜம்மென்று அமர்ந்திருக்கும் சுவாமிகளையும் ஒரு சேர வீதியில் வேகமாக இழுத்துச் செல்வார்கள். புழுதி பறக்க வேகமாகப் போகும் ஓலைக் கீற்று வாகனத்தில் அமர்ந்திருக்கும் சுவாமிகள் கைகளைத் தட்டியபடி குதூகலமாய்,

'சாமி வருது சப்பரம் வருது
சாமி வருது சப்பரம் வருது'

என்று சத்தமாகப் பாடிக்கொண்டு 'இழுங்கலே' என்று கட்டளை போடுவார். அவ்வாறு பாடிக் கொண்டே இழுக்கும் குழந்தைகளுக்கு ஊக்கம் தருவார்.



உற்சாகக் கொப்பளிப்பில் மூச்சிறைக்க இழுத்துச் செல்லும் தோழர்களை ‘லே லே கொஞ்சம் நிறுத்து அங்கே’ என நிறுத்தச் சொல்லுவார்.

‘எலே அங்க பாரு மிட்டாசு கடை. ரெண்டு மிட்டாசு பெட்டி வாங்கியாலே’ என்பார். ஒரு பையன் ஓடிச் சென்று திருநெல்வேலிப் பகுதிக்கே உரித்தான பனை ஓலையிலான மிட்டாய்ப் பெட்டிகளை வாங்கி வருவான்.

அதை வாங்கி மூடியைத் திறந்து கைகளால் வீதி மண்ணை எடுத்துப் பெட்டிக்குள் போட்டு மூடியைப் போட்டு மூடிவிட்டு, குலுக்கு குலுக்கு என்று குலுக்குவார்.

விளையாட்டாய் முக பாவனைகளை மாற்றி வேடிக்கை காட்டுவார்.

பிறகு மூடியைத் திறந்து மிட்டாய்ப் பெட்டியை தலை கீழாகக் கவிழ்ப்பார் பூந்தி, லட்டு, ஜிலேபி என இனிப்புப் பலகாரங்கள் கொட்டும்.

விளையாட்டுத் தோழர்கள் எல்லோருக்கும் இனிப்புகளை வாரி வாரி வழங்குவார்.

அவர்கள் ருசிப்பதை ரசித்தபடியே ஓலைக் கீற்றிலிருந்து எழுந்து, 'நான் போறேன்... நீங்க போய் விளையாடுங்கலே' என்று சொல்லி விட்டு 'சங்கர சங்கர சம்போ' என்று பாடியபடியே சென்று விடுவார்.

ஒருமுறை தென்னை ஓலைச் சப்பரத்தில் குதூகலத்தோடு பயணம் செய்த சங்கர பரமஹம்ச சுவாமிகள் ஒரு பெட்டிக் கடைக்கு முன்னர் நிறுத்தச் சொன்னார்.

சிறுவர்களும் இழுப்பதை நிறுத்தினர். சுவாமிகள் பெட்டிக்கடைக்காரரைப் பார்த்து 'எலே பிள்ளைகளுக்கு மிட்டாய் கொடுலே', என்று உத்தரவு போல் இட்டார்.

பாவம், சுவாமிகளின் அருமை பெருமைகள் அந்த கடைக்காரருக்குத் தெரியாது. அதனால் முடியாது என மறுத்துவிட்டார்.

சுவாமிகள் கோபத்தோடு சப்பரத்தில் பயணம் தொடர்ந்தார். அவர் சென்றதும் மிட்டாய் அனைத்தும் புழு பூச்சிகளாக மாறிவிட்டன.

இந்நிகழ்வுக்குப் பின்னர் சுவாமி வரும் பாதையில் சப்பரம் வருகிறதென்றாலே கடைக்காரர்கள் மிட்டாய்ப் பொட்டலம் தர நெகிழ்ச்சியுடன் காத்திருப்பது வழக்கமாகிப் போனது.

# 18

# எங்கெங்கு காணினும் சங்கர சுவாமிகள்

*மாறன் மங்கலம்.*

*இந்த ஊர் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்ய சரித்திரத்தில் இடம் பெற வேண்டிய முக்கியமான ஊர்.*

*சுவாமிகளின் அருமை பெருமைகளை இன்றளவும் பறை சாற்றிக் கொண்டிருக்கிற சுவாமிகளுக்குப் பிடித்துப் போன ஊர்.*

*மாறன் மங்கலத்தில் சுவாமிகளுக்குப் பிரியத்திற்குரிய அன்பர்கள் நிறையப் பேர் இருந்தனர். இவ்வூரில் இருக்கும் போது சுவாமிகள் உற்சாகமாகச் சிலம்பம் ஆடுவது வழக்கம். சிலம்பம் ஆடும் வீரர்களில் சிலர் சீடர்களாகவும் இருந்தார்கள்.*

*ஒரு நாள் சுவாமிகள் தீவீரமாக சிலம்பம் விளையாடிக் கொண்டிருந்த போது அவரைப் பார்க்க அன்பர்கள் சிலர் வந்தனர். ஆசி வேண்டிக் காத்து நின்றனர்.*

*மூக்காண்டி நாடார், சிறு தொண்ட நல்லூர் சங்கர பாண்டி நாடார், வாழவல்லான் பச்சை பெருமாள் நாடார், சிவத் தையாபுரம் பரிபூரணம் அம்மாள் ஆகியோர் ஆசி பெற வந்தவர்களில் முக்கியமானவர்கள்.*

*அந்த நான்கு பேரும் சுவாமிகள் விளையாடி முடிக்கும் வரை காத்திருந்து, முழுதாய் பாதம் தொட்டு தாள்பணிந்து வணங்கினர். ஆசி வாங்கினர்.*

பின் சகஜமாகத் தனித்தனியாகப் பேசிக் கொண்டிருந்த போது நான்கு பேரும் சுவாமிகளிடம் சொல்லி வைத்த மாதிரி ஒரு வேண்டுகோள் வைத்தனர்.

சுவாமிகள் ஒருமுறை அவர்கள் வீட்டிற்கு வருகை புரிந்து விருந்துண்ண வேண்டுமாம். சுவாமிகள் சம்மதித்து வரும் நாளை ஒவ்வொருவரிடமும் கூறினார். அவர்கள் மகிழ்ச்சியுடன் விடைபெற்றனர்.

இதில் ஆச்சரியமும் அதிசயமும் மிக்க செய்தி ஒன்று உண்டு. நான்கு பேருக்கும் உணவருந்த சுவாமிகள் தந்த நாளும், தேதியும், நேரமும் ஒன்றே.

இந்த விபரம் நான்கு பேருக்கும் தெரியாது. தங்கள் வீட்டிற்கு விருந்துக்கு வரப் போகிறார் என்ற மகிழ்ச்சியிலேயே அவர்கள் மெய்சிலிர்த்துச் சென்றிருந்தனர்.

அந்தத் திருநாளும் வந்தது, அவரவர் வீட்டில் சுவாமிகள் வருகிறார் எனத் தடபுடல் விருந்து. சுவாமிகள் வந்தார். பிறவிப் பயன் என வரவேற்றார்கள். உணவு படைத்தார்கள். பேசி மகிழ்ந்தார்கள். சுவாமிகளை வணங்கி ஆசி பெற்று விடைகொடுத்தார்கள்.

பின்னொரு நாளில் நான்கு பேரும் சந்தித்தார்கள். சுவாமிகள் தங்கள் வீட்டிற்கு எழுந்தருளிய நிகழ்வைப் பெருமைபடச் சொல்லி மகிழ்ந்தார்கள்.

எப்போது வந்தார் என்ற கேள்வி எழுந்த போது தான் நான்கு பேரின் விடையும் ஒன்றாக இருந்தது. ஆம் நான்கு பேர் இல்லத்திற்கும் ஒரே நேரத்தில் வந்திருக்கிறார், சுவாமிகள். சுவாமிகளின் மகிமை புரிந்தது.

ஒரே சமயத்தில் ஓரிடத்தில் என்ன நான்கு இடத்தில் என்ன, பல்வேறு இடங்களில் காட்சி கொடுத்து அருளாசி புரியும் மாட்சிமை பொருந்தியவர்கள் சித்தர் பெருமான்கள்.

*வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் வாராது வந்த மாமணியாய்த் திகழும் சங்கர பரமஹம்ச சுவாமிகளும் இவ்விதம் நான்கு இடங்களில் தோன்றியதில் வியப்பொன்றும் இல்லை அல்லவா?*

*என்னே! சுவாமிகளின் மகிமை!*

# 19

# தரை தட்டிய தலைக்கனம்

முக்கூடல் அருகே ஒரு சிறிய கிராமம்.

அந்தக் கிராமத்தில் சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு நெருக்கமான அன்பர். அவருக்குப் பக்கவாதம். மிகவும் கஷ்டப்பட்டு உயிரைப் பிடித்துக் கொண்டிருந்தார்.

சுவாமிகளுக்கு நிஷ்டையின் போது அந்த அன்பர் துடி துடித்துக் கொண்டிருப்பது தெரிய வரவே, அவரைப் பார்க்கப் போனார்.

அந்தக் கிராமத்தில் ஒரு தலை சிறந்த சித்த மருத்துவர் இருந்தார். தலை சிறந்தவர் என்பதால் தலைக்கனமும் நிரம்பவே இருந்தது.

சுவாமிகளுக்குத் தான் தலைக்கனம் கொண்டவர்களைக் கண்டாலே பிடிக்காதே! அவரின் தலையைத் தட்டும் நேரமாக நோயுற்ற அன்பரைப் பார்க்கப் போன நேரம் நேர்ந்தது.

வீட்டின் முன் நின்றபடி சித்த மருத்துவர் சுளகுவில் (முறத்தில்) மருந்துப் பொருட்களைக் கொட்டிப் புடைத்துக் கொண்டிருந்தார். புடைப்பதில் ஒருவித ஜம்பம் இருந்தது.

அந்த வழியே வந்த சங்கர சுவாமிகள் ‘என்னலே செஞ்சுகிட்டு இருக்கே’ என்று போகிற போக்கில் கேட்டார்.

‘இதெல்லாம் சொன்னா உனக்குப் புரியாதுப்பா’ என்கிற மாதிரி அலட்சியப் பார்வையை சுவாமிகள் மீது வீசிவிட்டுத்

தொடர்ந்து புடைக்க ஆரம்பித்தார், சித்த மருத்துவர்.

சுவாமிகள் விடாது, 'என்னலே... பதிலைக் காணோம்', எனச் சொல்லிவிட்டு முறத்தை ஒரு தட்டு தட்டிவிட்டுப் போக முற்பட்டார்.

சித்த வைத்தியருக்கு வந்ததே கோபம்! யாரோ சாலையில் போகிற ஒரு பரதேசி, முறத்தைத் தட்டியதோடு, தன்மை இல்லாமல் தாறுமாறாகப் பேசுகிறாரே என்று சுவாமிகளைப் பார்த்துப் சகட்டு மேனிக்குத் திட்டத் தொடங்கினார்.

கெட்ட வார்த்தைகளில் திட்டுவதில் வல்லவரான சுவாமிகள் பதிலேதும் பேசவில்லை. நகர்ந்து கொண்டிருந்தவர் சற்றுத் திரும்ப சித்த வைத்தியரைக் கூர்ந்து ஒரு பார்வை பார்த்தார். கிளம்பிவிட்டார்.

அடுத்து பக்க வாதம் பீடித்திருந்த அன்பரைப் போய் பார்த்தார் 'கவலைப்படாதேலே. எல்லாம் சரியாயிடும்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுவிட்டார்.

மறுநாள் அந்த கிராமம் முழுக்க இரண்டு செய்திகள் உலா வந்தன. கேட்டவர்கள் எல்லாம் நேரில் சென்று கண்டு வியப்படைந்தனர்.

ஒன்று பக்க வாதத்தால் பீடிக்கப்பட்டிருந்த அன்பர் முற்றிலும் குணமடைந்திருந்தார்.

செய்தி இரண்டு. அந்த நோய் சித்த வைத்தியருக்கு வந்திருந்தது.

ஒரு வருடம் கழித்து, அந்த கிராமத்து மக்களிடையே இன்னொரு செய்தியும் உலா வந்தது.

சித்த வைத்தியர் மனம் திருந்தி சுவாமிகளிடம் சரணடைந்து காலில் விழுந்து கதறி அழ 'நல்லா ஆயிரும்... எழுந்திருலே' என சுவாமிகள் ஆசீர்வதிக்க எழுந்திருக்க முடியாத நிலையிலிருந்த சித்த வைத்தியர் வாலிபரைப் போல் துள்ளி எழுந்தாராம்.

மீண்டும் விழுந்தாராம் சுவாமிகளில் திருப்பாதங்களில். மீண்டும் எழுந்த போது வைத்தியரின் தலைக்கனம் தரைதட்டிப் போயிருக்க, விலையிலா அருட்செல்வத்தை சங்கர சுவாமிகள் கொடுத்து அணைத்துக் கொண்டாராம்.

என்னே சங்கர சுவாமிகளின் அருள் வல்லமை .....

# 20

# பெண்ணே போகம் வேண்டாம் யோகம்; பெறுக!

திருநெல்வேலியில் உள்ள கொக்கிரக் குளத்தில் செல்லம்மாள் என்கிற சடைச்சி அம்மாள் என்ற பெண்மணி வசித்து வந்தாள்.

பார்க்க மிகவும் அழகாயிருப்பாள். அம்சமாய் தெரிவாள் துடுக்குத் தனமாய்ப் பேசுவாள். வித்தியாசமாகச் சிந்திப்பாள்.

நல்ல பெண்மணி தான் ஆனால் சந்தர்ப்ப வசத்தால் அவளது வாழ்வும் தொழிலும் கீழானதாக இருந்தது. அவள் தனது உடலை விற்று வாழும்  விலை மாதாய் காலம் தள்ளிக் கொண்டிருந்தாள்.

சடைச்சி அம்மாளின் வீட்டு வழியாக சங்கர பரமஹம்ச சுவாமிகள் செல்வது வழக்கம். சில சமயங்களில் சடைச்சியை அழைத்து ‘ஏளா தாகமா இருக்கு தண்ணீ கொடுளா’ என்று கேட்டு தண்ணீர் குடித்துச் செல்வதும் உண்டு.

இறைசாயலோடு இருக்கும் சுவாமிகள், அந்த அம்மாளின் கண்களுக்கு ஒரு நடமாடும் சுவாமியாக மட்டும் தெரிய வில்லை. அழகான ஆண் புருஷராகவும் தெரிந்தார்.

எனவே சுவாமிகள் மீது அந்த அம்மாவிற்கு ஒரு கண் உண்டு. பிரியமும் பரிவும் அதிகம் காட்டுவாள். தன் வாழ்க்கை தான் இப்படி ஈனமாகப் போய்விட்டதே என்று அடிக்கடி கலங்கும் அந்த அம்மணிக்கு ஒரு விபரீத ஆசை எழுந்தது. தன் வாழ்க்கை தான் இப்படி களங்கமானதாகப் போய்விட்டது

சங்கர சுவாமிகள் போன்ற ஒரு ஞானியின் மூலமாக ஓர் ஞானக் குழந்தையைப் பெற்று புகழத்தக்க வாழ்க்கை வாழலாம் என எண்ணினாள். அவரை தன் வயப்படுத்தி ஒரு வாரிசை உருவாக்கிக் கொள்ளத் தீர்மானித்தாள்.

அதற்கான தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தாள்.

ஒரு நாள் மாலை சுவாமிகளின் குரல் சடைச்சியை வழக்கம் போல் தண்ணீருக்காக அழைத்தது. ‘உள்ளே வாங்க இதோ தண்ணீர் எடுத்தாறேன் ‘உள்ளே வந்து குடியுங்கள்’, என வேண்டிக் கொண்டாள்.

சுவாமிகள் சிரித்தபடியே வீட்டினுள் நுழைந்து அங்கிருந்த கட்டிலில் அமர்ந்தார்.

தண்ணீர் எடுத்து வருவது போல் போக்கு காட்டிவிட்டு கதவைத் தாழ்பாள் போட்டாள், சடைச்சி தன் நீண்டநாள் விருப்பம் அன்று கண்டிப்பாய் ஈடேறும் என்ற எண்ணத்து டன் தாழ்பாளிட்டுத் திரும்பியவளுக்கு அதிர்ச்சி.

கட்டிலில் ஒரு பச்சிளங் குழந்தை கை கால்களை ஆட்டிய வண்ணம் சடைச்சியைப் பார்த்து அர்த்தத்தோடு சிரித்துக் கொண்டிருந்தது.

கட்டிலுக்கு ஆசைப்பட்டவளுக்கு, தொட்டில் போடச் சொன்னது குழந்தை.

‘சுவாமி மன்னித்து அருளுங்க’ என்றபடி ஓடோடி வந்து கட்டிலின் காலடியில் சடைச்சி விழுந்தாள். சுவாமிகளின் மகத்துவம் புரிந்து கண்ணீர் விட்டுக் கதறினாள்.

பச்சிளம் குழந்தை கணப்பொழுதில் சங்கர சுவாமிகளாக உருமாறியது.

சுவாமிகள் கைகொட்டிச் சிரித்தபடி, ‘ஏளா என் மூலமா உனக்கு புள்ள வேணுமா. இப்ப நானே உன் புள்ளையா மாறிட்டேன்ளா... என்னையே புள்ளையா வைச்சுக்கோ’ எனக் கூறிவிட்டு புறப்படத் தயாரானார்.

அவர் காலில் விழுந்த சடைச்சி அம்மாள் அவர் புறப்பட முடியாதபடி இரு கால்களையும் பிடித்துக் கொண்டு மனம் குமுறி அழுதபடி இருந்தாள்.

அவளால் ஆண்மகனாகப் பார்க்கப்பட்டவர் அழகிய தெய்வக் குழந்தையாகக் காட்சி தந்தது அற்புதமன்றி வெறென்ன!

சுவாமிகளுக்கு அவள் மீது கோபமில்லை. அவளது நிலைக்காக வருத்தமே அடைந்தார். சட்டெனக் கோபப்படும் சுவாமிகளுக்கு அதே அளவு கருணையும் நிரம்ப இருந்ததால் அந்த அபலைப் பெண்ணை உடனே மன்னித்தார்.

'ஏளா சடைச்சி... எழுந்திருளா' இனி உன் காலம் பூரா, மக்களுக்குத் தொண்டு செய். நல்லாயிருப்பளா என்றபடி அவளை எழச் செய்து ஆசி கூறிவிட்டு வீட்டை விட்டு ஒன்றுமே நடக்காத மாதிரி வெளியேறினார்.

வீதிக்கு வந்ததும் 'சங்கர சங்கர சம்போ' என்ன குதூகலித்துப் பாடிய படியே அவர் பாதையில் செல்ல ஆரம்பித்தார் புலன்களை வென்ற பேரருளாளர்.

காலப்போக்கில் சடைச்சி அம்மாள் தன் தொழிலை விட்டு விட்டுத் தன் வாழ்நாள் முழுதும் சுவாமிகள் காட்டிய பாதையில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டாள்.

தன் வாழ்நாள் முழுதும் சுவாமிகள் திருச்செந்தூரில் இருக்கும் போதெல்லாம் அவருக்குத் தொண்டாற்றி தன் பாவக் கறைகளைத் துடைத்தெறிந்து வாழ்க்கையை மகிழ்வாக நிறைவு செய்தார்.

# 21

# ஊருக்கு உதவ ரசவாதம்

கோபம் இருக்கும் இடத்தில் குணம் இருக்கும் என்பதற்குச் சரியான எடுத்துக் காட்டு சங்கர பரமஹம்ச சுவாமிகள்.

சில குடும்பங்களில் கல்யாணப் பேச்சு முடிவுறும் தறுவாயில் தடைபட்டுப் போயிருக்கும். நிச்சயம் செய்த திருமணம் நிச்சயிக்கப்படாத உறவாக முறிந்து போகும்.

கடைசி வரை காத்திருந்து பண உதவி கிடைக்காத காரணத்தால் கண்கலங்கி திருமணத்தையே நிறுத்தி விட வேண்டிய சூழல் எழுந்திருக்கும். உதவி செய்கிறேன் என்று உறுதி கொடுத்திருந்த உறவுகள் சமயத்தில் கை கழுவி விடுவதால் மணக்கோலம் பிணக்கோலம் காண்பதும் உண்டு.

இவ்விதம் இருளடைந்து போயிருக்கிற இல்லங்களையும் உள்ளங்களையும் சங்கர பரமஹம்ச சுவாமிகள் தன் தவத்தின் போது அறிய நேர்கிற போது துடிதுடித்துப் போவார்.

'எலே, இங்க வாலே' மணமகளின் பெற்றோரை அழைப்பார். அதிகாரத் தோரணையுடன் 'இந்தாலே இதை வைச்சுக்க. கல்யாணத்தை நல்ல விதமா நடத்துலே' என வாழைமரத் தோரணங்களை உடனே கட்டச் சொல்லி அவர்களுக்கு ரகசியமாகப் பொருள் உதவி செய்வார்.

அது ஒரு தங்கக் கட்டியாய் இருக்கும். ரசவாதம் தெரிந்த மகான் என்பதால் பரமஹம்சருக்கு எந்த உலோகத்தையும் தங்கமாக்கும் கலை அத்துப்படி. சித்தர்களுக்கே உரிய ரசவாதத்தின் மூலம் தங்கம் தயாரித்து அதை ஏழை

எளியவர்களுக்கும், நல்லவர்களுக்கும் வழங்கி விடுவார் கருணை வள்ளலான சங்கர பரமஹம்சர்.

உதவி பெற்றவர்களை, அவர் தங்கம் தந்ததைப் பற்றி யாரிடமும் மூச்சு விடக் கூடாதென்று கட்டளையிட்டு விடுவார். இருப்பினும் அரசல் புரசலாக அவர் பொன்னாக்கும் வித்தை ஊருக்கும் உலகுக்கும் தெரிந்தே இருந்தது.

அவரது ரசவாத சித்து அவர் ஓர் உயர்நிலை மகா சித்தரென கட்டியம் கூறத் தவறவில்லை.

# 22

## யார் பித்துக்குளி?

தூத்துக்குடி அருகில் உள்ள சிவத்தையாபுரத்தில் ஒரு சிலம்பு வித்வான் வசித்து வந்தார்.

அவர் சிலம்பு வித்தையில் வல்லவர். அவருக்கு எதிராகக் கம்பு சுழற்றி யாரும் வெற்றி பெற முடியாது. அதனால் அவருக்குக் கர்வமும் ஆணவமும் அதிகமாகவே இருந்தது.

அது நாளுக்கு நாள் கூடுதலாகிக் கொண்டும் இருந்தது. அதனால் அவர் ஏழைபாழைகளை அச்சுறுத்தி மிரட்ட ஆரம்பித்தார்.

சிலம்பு வாத்தியார் பேட்டை வாத்தியார் போல் அடாவடிகளில் இறங்கவும் ஆரம்பித்தார்.

ஓர் அரிய கலையை ஆணவத்தோடு தப்பான காரியங்களுக்குப் பயன்படுத்தி வரும் சிலம்பு வாத்தியாரின் அலம்பல்கள் பற்றிய செய்திகள் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் காதுக்கும் வந்தது.

உடனே சிலம்பு வித்வானுக்குப் பாடம் புகட்டப் புறப்பட்டார். நேரே சிலம்பு வித்வான் இருக்கும் இடம் தேடிப் போனார். அங்கே சிலம்புக் கூடத்தில் ஆரவாரமாக மாணவர்களுடன் சிலம்பாடிக் கொண்டிருந்தார், வாத்தியார். ‘எலே நீ என்ன பெரிய சிலம்பு வாத்தியாரா? என்கிட்ட கம்பு கட்டு பார்ப்போம்’, எனப் போட்டிக்கு அழைத்தார் சுவாமிகள்.

இறுமாப்பின் உச்சத்திலிருந்த சிலம்பு வித்வானுக்கு உண்மையிலேயே இறைத்தன்மையின் உச்சத்திலிருந்த சங்கர சுவாமிகளின் மகத்துவம் பற்றி ஏதும் தெரியாது.

ஏதோ தெருவில் அங்கேயும் இங்கேயும் வேலைவெட்டி எதுவும் இல்லாமல் சும்மா அலைந்து கொண்டிருக்கும் வெத்து வேட்டு சாமியார் என நினைத்திருந்ததால் அவருக்குக் கோபம் தலைக்கேறியது.

எகத்தாளமாய் 'ஏய் சாமியாரே, எவ்வளவு தைரியம் இருந்தா என்னை போட்டிக்கு கூப்பிடுவே? போட்டேனா ஒரு போடு' என்று கத்தியபடியே சுவாமிகளின் தலைக்கு மேலே கம்பை ஓங்கித் தூக்கி இது தான் கொண்டை அடி என்று சுவாமிகளின் நடு மண்டைக்குக் கம்பை வேகமாக இறக்கினார்.

கொஞ்சம் கூட அலட்டிக் கொள்ளாத சுவாமிகள், அதே நொடியில் எப்போதும் கையில் வைத்திருக்கும் சிறுபிரம்பை எடுத்து வித்வான் வீசிய கம்பைத் தடுத்தார்.

அடுத்த நொடி வித்வானின் சிலம்புக் கழி மூன்று துண்டுகளாக முறிந்து சிதறியது.

வாத்தியாரின் சிலம்புச் சண்டையைக் கண்குளிரப் பார்க்கலாம் என்று கைதட்டக் காத்திருந்த மாணவர்களுக்கு கழி மூன்று துண்டுகள் ஆனதைப் பார்த்ததும் அதிர்ச்சி! வித்வானுக்கோ அவர்களை விடப் பேரதிர்ச்சி அவமானம் வேறு!!!

'ஏய் பித்துக்குளி, குச்சியிலே ஏதோ மந்திரம் வச்சிருக்கே' என்றபடி சுவாமிகளை நோக்கி வேகமாகப் பாய்ந்து குச்சி யைப் பிடிக்க முயற்சித்தார். சங்கர சுவாமிகள் 'தூ...' என ஒரு முறை துப்பிவிட்டு 'ஏலே புத்தி கெட்ட பயலே, குச்சியிலே என்னலே இருக்கு' என்றபடி குச்சியை வீசிவிட்டு வந்த காரியம் முடிந்துவிட்டது என்று கிளம்பிவிட்டார்.

பாவம் சிலம்பு வித்வான். நிலை தடுமாறி தலையில் கைகளை வைத்தபடி அப்படியே தரையில் விழுந்தார். பிறகு திடீரென எழுந்தார். சுற்றி முற்றிப் பார்த்தார். அழுதார் சிரித்தார்.

ஏதேதோ உளற ஆரம்பித்தார். புத்தி பேதலித்து விட்டது எனக் கூடியிருந்தவர்களுக்குப் புரிய ஆரம்பித்தது. அவர்கள் சுவாமிகளைப் பயம்கலந்த பார்வையோடு பார்த்து அவர் போன திசை வணங்கி நின்றனர்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து மன்னிப்பு கேட்டு, மீண்டும் சுயநினைவு அடையக் கூடிய நிலை கூட இல்லாத அளவிற்கு பித்துக்குளியாக நீண்ட காலம் அவ்வூரில் அலைந்து கொண்டிருந்த சிலம்பு வித்வான் ஒரு நாள் மரித்துப் போனார்.

ஒருமுறை திருவைகுண்டத்தில் தாமிரபரணி ஆற்றுப் பக்கம் சுவாமிகள் சென்று கொண்டிருந்தார்.

ஆற்றின் கரையில் ஒரு கர்நாடக சங்கீத வித்வான் கழுத்தளவு தண்ணீரில் நின்றபடி சாரீர சாதகம் செய்து கொண்டிருந்தார்.

நன்றாகப் பாடும் ஆற்றல் நிறைந்த அவருக்கு தனக்கிணையான ஆற்றல் கொண்டவர் எவரும் இலர் என்ற இறுமாப்பு எப்போதும் உண்டு. சகலரையும் அலட்சியமாகவே பார்ப்பார். தனக்கு மிஞ்சி எவருமில்லை என்று மார்தட்டுவார். பேசுவார். எவரையும் அவமதித்து ஏசுவார். பிறரை மனம் நோக வைத்து மன மகிழ்ச்சி கொள்வார்.

அவரின் கெட்ட நேரம் பரஹமம்ச சுவாமிகள் தாமிரபரணி ஆற்றங் கரையோரம் வந்து கொண்டிருந்தார்.

சங்கீத வித்வானின் குரல் தாமிரபரணியின் கரைகளில் மெலிதாய் கரைந்து கொண்டிருந்தது. மீன்கள் கூடத் தண்ணீரிலிருந்து தாவி, பாடகரின் சங்கீத மழையில் நனைந்து கொண்டிருந்தன.

அப்படியொடு ராகம்! ஆர்ப்பரிக்கும் ஆலாபனை!! கரையோரம் ஒர் ஊமைச் சிறுவன் மெய்மறந்து வித்வானின் கானத்தில் லயித்துக் கொண்டிருந்தான்.

சாதகம் செய்தபடி கரைப்பக்கம் கண்களைத் தவழவிட்ட வித்வான் கண்களில் தன்னை மறந்து கானத்தை ரசித்துக் கொண்டு இருந்த ஊமைச் சிறுவன் தென்பட்டான்.

‘டேய் டேய் பாவி பாவி! நான் சாதகம் செய்வதை கேட்பதே தப்பு! ஊமை அதுவும் பிறவி ஊமையனான நீ கேட்பது மகா தப்பு! அபசாரம்!! அபசாரம்!! எனக் கோபமாகக் கத்தினார். சாபமாகச் சில சொற்களை வீசினார்.

பயந்து போன சிறுவனின் கண்களில் தாரை தாரையாய் கண்ணீர் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கண்களில் இந்தக் காட்சி பட்டது. காதுகளில் வித்வானின் அவச் சொற்கள்அவலமாய் நுழைந்தன.

ஏற்கனவே மனம் நொந்து வாழ்ந்து கொண்டிருக்கிற ஒரு ஊமைச் சிறுவனின் மனதை வித்வான் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போல் விஷ வார்த்தைகளால் தீண்டிக் கொண்டிருப்பதைச் சகிக்காமல் கோபமாய் சுவாமிகள் வித்வானை ஒருமுறை பார்த்துவிட்டுக் கருணையோடு சிறுவனைக் கூப்பிட்டார்.

'எலே இங்கே வாலே. நீ ஏன் அழறே கவலைப்படாதேலே. எங்க நாக்கை நீட்டுலே' பரமஹம்சர் அந்தச் சிறுவனுக்கு ஆசி தந்தார்.

ஆற்று மணல் கொஞ்சம் எடுத்து அவன் நாக்கிலிட்டு 'நல்லா இருப்பேலே' முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டு போய்விட்டார்.

அடுத்த வருடம் அதே தாமிரபரணி நதியில் கழுத்தளவு நீரில் அந்தச் சிறுவன் சாதகம் பண்ணிக் கொண்டிருந்தான். அந்தப் பகுதியில் அவன் ஒரு வித்வானாக பிரகாசித்துக் கொண்டிருந்தான்.

சங்கர சுவாமிகளின் சாபம் அறிந்து, எவ்வளவு மன்றாடியும் சங்கீத வித்வானின் குரலுக்குச் சுவாமிகள் செவி சாய்க்க வில்லை.

அவர் வாய் ஜம்பம் இலவச சங்கீத நிகழ்ச்சிக்குக் கூட காதுகளற்றுக் காற்று வாங்கியது. ஏன்! கோயில்களில் இறைவன் கூட அந்தச் சங்கீத வித்வான் வாய்ப்பாட்டையும், படும்பாட்டையும் கண்டு கொள்ளவில்லை.

அந்த ஊமைச் சிறுவனோ நாளுக்கு நாள் ஓங்கி ஒலித்துக் கொண்டிருந்தான். உயர் புகழ் பெற்றான்.

# 24

# பரமஹம்சர் அருளிய குழந்தைப் பேறு

சொக்கலால் ராம்சேட் பீடி தமிழகத்தில் மட்டுமில்லாது வெளி மாநிலங்களிலும் பிரபலமானது.

அதன் நிறுவனர் முக்கூடலைச் சேர்ந்த சொக்கலால் ராம் சேட்.

கண்ணியமான மனிதரான அவர் தொழிலில் உச்சியில் இருந்த போதிலும் குடும்பத்தில் ஒரு பெருங் கவலை. அவருக்குக் குழந்தைச் செல்வம் இல்லை. ஏனையச் செல்வங்கள் நிரம்ப இருந்தும் குழந்தைச் செல்வம் இல்லாதது அவருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் எல்லையில்லாத துயரைத் தந்து வந்தது.

சங்கர பரமஹம்சர் சுவாமிகள் ஒருமுறை பாப்பாக்குடிக்கு முக்கூடல் வழியாகச் சென்று கொண்டிருந்தார்.

சுவாமிகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த சேட், சுவாமிகளைச் சந்தித்து தன் மனக் குறையினை நீக்கச் செய்ய வேண்டுதல் வைக்க நினைத்தார்.

சுவாமிகளையும் தரிசித்தார். சுவாமிகளின் ஒளிமயமான கண்களைக் கண்டு மெய்சிலிர்த்தார். அவரது திருமேனி ஜொலிப்பதைக் கண்டு மெய்மறந்தார்.

சுவாமிகளின் பாதம் பற்றிக் குழந்தை வரம் வேண்டுமெனக் கண்ணீர் மல்க வேண்டினார்.

‘அவ்வளவுதானேலே.... கவலையை விடு, குழந்தை பிறப்பான். நல்ல பேர் எடுப்பான். ரொம்ப ஜோரா வருவான்லே‘ எனத் தோள் தட்டி எழுப்பினார்.

அருகே இருந்த சிறு பாறையை கையினால் தேய்த்து கைநிறைய வீபூதியை எடுத்து பீடி அதிபரிடம் கொடுத்து ‘உன் மனைவியிடம் கொடுலே உனக்கு ஒரு மகன் பிறப்பான்‘, என ஆசி கூறி அனுப்பி வைத்தார்.

சுவாமிகள் தான் பிள்ளை வரம் வழங்குவதில் கருணைவள்ளல் ஆயிற்றே!

அவரது ஆசியின் காரணமாக சொக்கலால் ராம் சேட் மனைவிக்கு அழகான ஆண் குழந்தை பிறந்தது. வளர்ந்தது. ஊர் போற்றும் வகையில் சிறந்தது.

பிற்காலத்தில் எல்லோராலும் சகல கலா வல்லவர் எனப் புகழப்படும் தொழிலதிபர் ஹரிராம் சேட் தான் அக்குழந்தை.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் பேரருளால் பிறந்த குழந்தைகள் அருள், பொருள், புகழ் போன்ற செல்வங்கள் நிரம்பப் பெற்றுச் சிறந்து விளங்குவார்கள் என்பதற்கு ஹரிராம் சேட் ஒரு நல்ல உதாரணம்.

# 25

# சீடனைத் தேர்ந்தெடுத்த சத்குரு

*சங்கர நாராயணன் என்ற ஆதித்தன் பிள்ளை சங்கர சுவாமிகளின் பிரதான சீடர். அவர் பிறந்த கதையும் வளர்ந்த கதையும் சீடராய்த் திகழ்ந்த கதையும் சுவாரஸ்யமானவை.*

*திருவைகுண்டம் அருகே சிவகளை என்னும் சிற்றூர். அவ்வூரில் சைவப் பிள்ளைச் சமூகத்தைச் சேர்ந்த மாணிக்கம் பிள்ளை, மீனாட்சி அம்மாள் தம்பதியினருக்குக் குழந்தைப் பாக்கியம் இல்லாமல் இருந்தது.*

*கோயில் கோயிலாய்ப் போய்த் தவமாய் தவமிருந்தும் குழந்தைப் பேறில்லை.*

*ஒருமுறை சங்கர சுவாமிகள் சிவகளைக்கு வந்த செய்தி அறிந்து தம்பதியினர் சுவாமிகளை நேரில் தரிசித்தனர். குழந்தை வரம் வேண்டிக் கனிந்துருகினர்.*

*மனமிரங்கிய சுவாமிகள் விபூதி தந்து தம்பதியினருக்கு அருளாசி வழங்கினார். அடுத்த வருடமே ஆண் குழந்தை பிறந்தது.*

*குழந்தைக்கு சுவாமிகளின் திருப்பெயரையே நன்றியோடு 'சங்கர நாராயணன்' என்று சூட்டினார்.*

*இயற்கையாகவே ஆன்மிகம் அவன் முகத்திலும் அகத்திலும் நிரம்பி வழிந்தது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் அவன் வளர்ந்து வந்தான்.*

அவனுக்கு வயது 16 இருக்கையில் சிவகளைக்கு சங்கர சுவாமிகள் வருகை புரிந்தார்.

'தம்பி, அவர் தான் தன் அருளால் உன்னைப் பிறப்பித்தார். அவர் பேர் தான் உனக்கு வைத்தோம். அவரே நம் குலகுரு,' எனச் சொல்லிச் சங்கர நாராயணனைச் சுவாமிகளைப் பார்த்து ஆசி பெற அனுப்பி வைத்தனர். பெற்றோர்.

சுவாமிகளைப் பார்த்த மாத்திரத்தில் சங்கர நாராயணனுக்கு ஒரு இனம் புரியாத உணர்வு எழுந்தது. இணக்கம் விரிந்தது. அவனது தேடலுக்கு விடை கிடைத்த மாதிரி ஒரு மகிழ்வு பெருக்கெடுத்தது.

'இவர் தான் உனது குரு' என்று மனம் முரசு கொட்டியது. 'ஆமாம் ஆமாம்' என அகத்தில் அசரீரி கேட்டது.

காலில் விழுந்தவன் பார்த்த மாத்திரத்தில் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கால்களை இறுகப் பற்றினான். இனி அவையே கதி எனப் பாதங்களில் விழி ஒற்றினான். எழுந்து திருநீறு பெற்றுப் பூசிக் கொண்டபோது எண்ணங்கள் ஏதுமின்றிப் புதிதாய்ப் பிறந்திருந்தான்.

வெற்று வாழ்க்கை வேண்டாம் என முடிவெடுத்தான். சுவாமிகள் பின் நின்றான். அவர் செல்லும் இடம் எல்லாம் பின் தொடரக் காத்திருந்தான். தொடர்ந்தான்.

சிவகளையை விட்டுச் சங்கர சுவாமிகள் புறப்பட்டார். அவர் பின்னாலே அடி தொடர்ந்தான் சங்கர நாராயணன். பற்றற்ற சுவாமிகளுக்கு இப் புதுப்பற்றில் விருப்பமில்லை.

'பின்னாலே நாய்போல் வராதேலே,' கடுமை காட்டினார். விட வில்லை சங்கர நாராயணன். அவர் பின் தொடர்ந்தான்.

'திருட்டுப் பயலே, மேலே வராதேலே' எனக் கோபமாய்ச் சொன்னார். கல்லால் அடித்து விரட்டினார். அடி வாங்கிய சீடன் பொருட்படுத்தாது அவர் அடியொற்றிப் பின் சென்றான்.

குருவின் கல் அடியும் அவரது திருவடிகளைப் போலவே அவனுக்குப் பிடித்திருந்தது.

அடுத்து, சுவாமிகள் சமாதானபுரம் என்ற ஊருக்குச் சென்றார். சங்கர நாராயணனும் தொடர்ந்தான். அங்கும் கல்லால் அடி போட்டார் குரு. அதை ஏற்றுக் கொண்ட சீடன் 'சரணம் சரணம்' என்று மகிழ்வுடனே கூவினான்.

அடுத்த ஊர் முருகன் குறிச்சி.

அங்கேயும் கல்லால் குரு விரட்ட, சங்கர நாராயணன் மௌனமாய், உறுதியாய் நடை தொடர்ந்தான். சுவாமிகளின் மொழி கூசும் படி இருந்தாலும் அவன் செவிகளில் தேனாய்ப் பாய்ந்தது. அவரது ஏச்சும் மொழியும் தெய்வீகம் என உணர்ந்தான்.

முருகன் குறிச்சியில் வெள்ளைக்காரப் பாதிரியார் ஒருவர் ஊசி கோபுரக் கிருத்துவத் தேவாலயம் முன் வைத்து சுவாமிகளை வம்புக்கு இழுத்து, 'தென்னை மர இளநீரில் மீன் குஞ்சை வர வைக்க முடியுமா?', என வம்புக்கு இழுக்க, மீன் குஞ்சுகளை வரவழைத்துக் காட்டினார் சங்கர சுவாமிகள்.

அப்போது உடனிருந்த சங்கர நாராயணன் குருவின் மேன்மையைக் கண்கூடாகக் கண்டு மகிழ்ந்தான். 'சரியான குருவைத் தான் பிடித்திருக்கிறேன்' என இன்னும் இறுகிப் பிடிக்கவே தீர்மானித்தான்.

மீன்குஞ்சுகள் இளநீரில் நீந்துவதைப் பார்த்து, பாதிரியார் மன்னிப்புக் கேட்ட கையோடு விடைபெற்ற சங்கர சுவாமிகளின் கூர்ந்த கண்களுக்குக் கூட்டத்திலிருந்த சங்கர நாராயணன் சட்டெனப்பட்டான்.

'இன்னும் இங்கேயா இருக்கலே' எரிந்து விழுந்தார் சுவாமிகள். 'இனி எப்போதும் உங்களோடு தான்'. மௌனத்தால் பதில் சொன்னான் அசராத சங்கர நாராயணன்.

'சரிலே ஊருக்குள்ள போய் பிச்சைச் சோறு வாங்கி வா,' ஒரு மண் சட்டியைக் கொடுத்து அனுப்பினார் சுவாமிகள்.

இது சுவாமிகள் வைத்த பரீட்சை. ‘சுவாமி திட்டாமல் பேசி விட்டார் ’ என இன்முகத்துடன் மண் சட்டியை ஏந்தியபடி ஓடினான்.

சட்டியை வாங்கிய உடன் அவனுக்குப் பயங்கரப் பசி. சாதாரண பசியல்ல குண்டோதர, மண்டோதரப் பசி.

முருகன்குறிச்சியில் முதல் வீட்டிலேயே உணவு கிடைத்தது. ஒரு புண்ணியவதி மண் சட்டி நிறைய நிறைவாக உணவு கொடுத்திருந்தாள்.

உண்பதற்குக் கை பரபரத்தது. உணவைச் சாப்பிடச் சொல்லி மனமெனும் சாத்தான் வேதம் ஓதியது. உணவைப் பார்த்தவுடன் அவனுக்கு வாயில் எச்சில் ஊறியது. இருப்பினும் சலனப்பட்டு விடாமல் உணவுச் சட்டியை. கைகளில் ஏந்தியபடி சுவாமிகளிடம் ஓடி வந்தான்.

‘கெட்டியான பிள்ளைதான்,’ எனச் சுவாமிகள் மனதில் நினைத்தாலும் அதை வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. சங்கர நாராயணனைத் தேர்ந்தெடுக்க இன்னும் சில தேர்வுகள் வைக்கவே அவர் நினைத்தார்.

சீடர்கள் குருவைத் தேடுவது போல், குருவும் நல்ல சீடனுக்காகக் காத்திருப்பார்கள். இப்போது சுவாமிகள் சீடனை அடையாளம் கண்டு கொண்டார். ஆனால் தேர்வாவதற்குச் சங்கர நாராயணன் சில தேர்வுகளில் வெற்றி பெற்றாக வேண்டும்.

ஒரு சட்டி நிறைய உணவுடன் வந்த சங்கர நாராயணன் சுவாமிகளிடம் சட்டியைக் கொடுத்தான்.

அவனுக்குப் பசி அகோரமாயிருந்தது. பசி இருப்பினும் சோற்றுச் சட்டியைச் சுவாமிகளிடம் கொடுத்துவிட்டு அவரது மொழிக்காகக் காத்திருந்தான்.

சுவாமிகள் சட்டியிலிருந்து ஒரு கவளம் சோற்றை எடுத்தார். உட்கொண்டார். பின் சட்டியை அருகிலிருந்த சாக்கடையை ஒட்டியிருந்த பாறை ஒன்றில் சோற்றுடன் பலமாக வீசி உடைத்தெறிந்தார்.

அப்போதும் சங்கர நாராயணன் அமைதியாய் இருந்தான்.

சுவாமிகள் அவனை அருகில் அழைத்துக் கண்களை உற்று நோக்கினார். அவன் கண்களில் பசி தெரியவில்லை. சட்டியை உடைத்துவிட்டதால் எழுந்திருக்க வேண்டிய சினம் தென்படவில்லை.

'ஆன்மிகத் தேடலே, அவன் கண்களில் திரண்டிருந்தது. பசியின் தாக்கம் தெரியவில்லை. ஞானத்தின் ஏக்கமே தெரிந்தது. ஞானத் தேடலே மிகுந்திருந்தது.

'தேறிட்டேலே நீ தேறிட்டே', கூவியபடி சங்கரநாராயணனை கட்டியணைத்துக் கொண்டார் சங்கர சுவாமிகள்.

ஞானகுருவும் தேடல் நிறைந்த சீடனும் சேர்ந்துவிட்டால் அங்கு வாய்ச் சொற்களால் என்ன பயனும் இல்லை தானே! நீண்ட அமைதி நிலவியது.

சங்கரநாராயணனை முழு மனத்துடன் சீடனாக ஏற்றுக் கொண்ட சங்கர சுவாமிகள் அவருக்குத் தீட்சை தந்தார். ஞானம் தந்தார். தன்னுடனேயே வைத்துக் கொண்டார்.

பின் எப்போதும் குருவுக்கேற்ற சீடனாய்ச் சங்கர நாராயணன் குருவை நிழல் போல் பின் தொடர்ந்தார்.

குருவருளாலும் திருவருளாலும் சங்கர நாராயணன் மூன்று வருடங்களிலேயே அற்புதச் சித்துகளைச் செய்கிற அளவிற்கு வல்லமை பெற்றார்.

பரமஹம்சரின் பிரியத்திற்குரிய சீடர் என்கிற பெறற்கரிய பேறு பெற்றார்.

# 26

# வெள்ளையர் வியந்த உன்னத ஞானி

(You are really a great saint)

**அ**து வெள்ளைக்காரர்களின் ஆட்சி காலம்.

இந்தியர்கள் என்றாலே கேலியும் கிண்டலும் செய்து அவமானப்படுத்துவது என்பது வெள்ளைக்காரர்களின் இரத்தத்தில் ஊறி இருந்த கொடூர வழக்கம்.

பாளையங்கோட்டை அருகே முருகன் குறிச்சியில் ஒரு கிருத்துவ தேவாலயம், ஊசி கோபுரம் என்று அழைக்கப்பட்ட தேவாலயம்.

அந்தக் கோயிலிலிருந்த பாதிரியார் ஒரு வெள்ளைக்காரர். அன்பும் பண்பும் பரப்பி வரும் ஆன்மிகப் பணியில் இருந்தாலும் அவரது இரத்தத்திலும் உள்ளத்திலும் இந்தியர்கள் என்றாலே வெறுப்பு நிரம்பி இருந்தது.

அதிலும் இந்தியச் சாமியார்களைப் பார்த்தால் அவரது அணுகுமுறை ஆணவம் மிகுந்ததாய் மாறிவிடும். பேச்சும் குதறிவிடும்.

அந்த வழியே யாரேனும் சாமியார்கள் சென்றால் அவர்களை அழைத்து ‘ஏ மேன், எங்க ஏசு பிரானும் அவரது 12 சீடர்களும் எத்தனை அற்புதங்கள் செய்திருக்கிறார்கள்? நீ அப்படி ஏதேனும் அற்புதம் செய்வாயா? உண்மையிலேயே உன்னிடம் இறைத்தன்மை இருந்தால் ஏதாகிலும் செய்துகாட்டு பார்ப்போம்‘ என வம்புக்கு இழுப்பார்.

அவரது சாவால்களுக்கு பதில் அளிக்க முடியாமல் சாமியார்கள்

திணறுவதை, அந்தப் பாதிரியாரும் உடனிருப்பவர்களும் ரசித்து மகிழ்வார்கள்.

எதுவுமே தெரியாமல் பஞ்சத்துக்கு சாமியார் ஆனவர்கள் இருப்பார்களே அவர்கள் அந்த பாதிரியாரிடமும் மாட்டிக் கொண்டு கூனிக் குறுகுவது அடிக்கடி நடக்கும்.

ஒருநாள் சங்கர பரமஹம்ச சுவாமிகள் சங்கர நாராயணன் என்கிற ஆதித்தன் பிள்ளையுடன் சர்ச் பக்கம் வந்தார். சுவாமிகளின் கோலத்தைப் பார்த்த பாதிரியாருக்கு ஏக சந்தோஷம்.

இன்று வசமாக இந்த சாமியார் மாட்டிக் கொண்டார் எனக் கொண்டாட்டத்தோடு சுவாமிகளை அழைத்தார். 'நீ சாமியாரா, நீ ஏதேனும் அற்புதம் செய்து காட்டு... அற்புதம்னா என்னன்னு தெரியுமா? நீ அற்புதம் பண்ணுவியா? என விடாப் படியாகக் கேட்க ஆரம்பித்தார்.

'என்ன செய்யணும்னு சொல்லுலே? நீயே சொல்லு செஞ்சு காட்டறேன்லே' என அலட்சியமாய் பதில் சொன்னார் சங்கர சுவாமிகள். இப்படி யாரும் அதுவரை சொன்னதில்லை என்பதால் பாதிரியார் மேலும் குஷியானார். நக்கலாய் 'இதோ இந்த தென்னை மரத்திலிருக்கும் இளநியில் உன்னால் ஒரு மீன் குஞ்சு வர வைக்க முடியுமா?' மீன் குஞ்சு இளநீரில் நீந்திக் கொண்டிருக்க வேண்டும்... உன்னால் முடியுமா? பாதிரியார் வாய்க்கு வந்தபடி கேட்டு வைத்தார்.

வீழ்ந்தார் சாமியார், தனக்கே வெற்றி என்று, கூட இருந்தவர்களைப் பார்த்துப் பெருமிதமாகப் புன்னகைத்து தொண்டையில் கைவைத்து லேசாக கனைத்துக் கொண்டார் 'அவ்வளவுதானே உன் ஆசைலே... இதோ பாரு'. என அலட்சியமாகச் சொன்னபடி ஓங்கி உயர்ந்திருந்த தென்னை மரத்தை உற்று நோக்கினார் சுவாமிகள்.

கண்ணிமைக்கும் நேரத்தில் தென்னை மரத்திலிருந்து ஒரு இளநீர் தொபீர் எனக் கீழே விழுந்தது. வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அத்தனை பேருக்கும் அதிர்ச்சி. ஏதோ



விஷயமுள்ள சாமியார் என வியந்த படி ஆர்வமாக கூடிக் கவனிக்கலாயினர்.

கூட்டம் வேறு கூடி கொண்டிருந்தது வெள்ளைக்காரப் பாதிரியாருக்கும் அதிர்ச்சிதான். ஆனால் எப்படி தென்னை இளநீரில் மீன் குஞ்சு வரும்? எனப் பார்த்துவிடலாம் என அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளாமல் 'நெக்ஸ்ட்' என்றார்.

'நீயே உடைச்சுக்கோ; நீயே ஊத்திக்கோ; நீயே பாத்துக்கோ' என சுவாமிகள் ராகம் பாடினார் அப்பொழுது பாதிரியார் கண் அசைக்க, தேவாலயத்தைச் சேர்ந்த ஆள் ஒருவர்

ஓடோடிச் சென்று அரிவாளும் கண்ணாடிக் குவளையும் எடுத்து வந்தார்.

இளநீரை வெட்டினார். அப்படியே கவிழ்த்தார்.

என்ன ஆச்சரியம் குவளையில் ஊற்றப்பட்ட இளநீரில் மூன்று மீன் குஞ்சுகளும் சேர்ந்து பாத்திரத்தில் விழுந்தன.

மீன் குஞ்சுகள் அசத்தலாய் நீச்சலடிக்கத் தொடங்கின.

பாதிரியார் கேட்டதோ ஒரு மீன் குஞ்சு தான். பார்த்துக்கோ பார்த்துக்கோ எனச் சொல்லியபடி மூன்று மீன் குஞ்சுகளைக் காட்டிவிட்டார் சங்கர சுவாமிகள். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் பிரமித்துப் போய் அப்படியே சுவாமிகளைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டனர். வாயடைத்துப் போய் நின்ற வெள்ளைக்காரப் பாதிரியாரை ‘என்னலே சொல்றே’ என்கிற மாதிரி பார்த்தார் சுவாமிகள்.

‘‘யூ ஆர் ரியலி எ கிரேட் செயிண்ட்’’ என்றபடி பாதிரியார் வணங்கி நின்றார். ‘எனது ஆணவம் இன்றோடு ஒழிந்தது’ என்று நினைத்தபடி மன்னிப்பும் கேட்டார்.

‘இனி யாரையும் இப்படியெல்லாம் சோதனை செய்யாதவே’ என்றபடி அத்தனை பேரும் வியந்து பாராட்டிக் கொண்டும் வணங்கிக் கொண்டும் இருப்பதை லட்சியம் செய்யாதவராய் ‘சங்கர சங்கர சம்போ’ என்று மெலிதாய்ப் பாடிய படியே அவ்விடத்தை விட்டு அகன்றார்.

இந்த சம்பவத்தைக் கண்ணாரக் கண்டு மெய்சிலிர்த்த சங்கர நாராயணன் பின்னாளில் தன்னிடம் சுவாமிகளின் மகிமை குறித்துப் பேசுபவர்களிடம் எல்லாம் மீன் குஞ்சுகள் நீச்சலடித்த சம்பவத்தைச் சிலாகித்துப் பேசுவது வழக்கமாக இருந்தது.

# 27

# அன்பர்களைக் காத்த அற்புத சுவாமிகள்

திருச்செந்தூரில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் இருந்த காலத்தில் நடந்த அற்புதம் இது.

நெல்லைச் சீமையைச் சேர்ந்த கருடலிங்க நாடரும், திருச்செந்தூர் சன்னதித் தெருவில் வசித்து வந்த விஸ்வநாத பிள்ளையும் சுவாமிகளிடம் அளவற்ற பக்தி கொண்ட அணுக்கத் தொண்டர்கள்.

ஒரு நாள் திருச்செந்தூர் செந்தில் ஆண்டவருக்குப் பொங்கல் வைத்துக் கொண்டாட இரண்டு பேரும் முடிவு செய்தனர்.

அதற்காக காலைவேளையில் விஸ்வநாதன் பிள்ளை வீட்டிலிருந்த உருளியை எடுத்துத் தன் தலைமீது வைத்துக் கொண்டு சன்னதித் தெருவில் வந்து கொண்டு இருந்தார்,

அவருடன் கருடலிங்க நாடார் பொங்கலுக்கு வேண்டிய சாமான்களுடன் வந்து கொண்டிருந்தார்.

உருளி என்பது பொங்கலிடப் பயன்படுவது. வெங்கலத்தால் ஆனது.

பேசியபடியே அவர்கள் வந்து கொண்டு இருந்தார்கள். அப்போது எதிர்புறம் சங்கர பரமஹம்ச சுவாமிகள் குழந்தையைப் போல் சுற்றியும் முற்றியும் பார்த்து ரசி த்த வண்ணம் வந்து கொண்டிருந்தார். அவரது உள்ளமும் வாயும் வழக்கம் போல் ‘சங்கர சங்கர சம்போ’ என ஒலித்துக் கொண்டிருந்தன.



சுவாமிகள் கண்களில் பட்ட உடன் அன்பர்கள் இருவருக்கும் ஏக மகிழ்ச்சி. அதே வேளையில் சுவாமிகளும் இருவரையும் பார்த்தார்.

என்ன நினைத்தாரோ சுவாமிகள். விரைவாக ஒடி வந்து கண நேரத்தில் விஸ்வநாதன் பிள்ளையின் தலையிலிருந்த உருளியை வேகமாகக் கீழே தள்ளிவிட்டார்.

விஸ்வநாதன் பிள்ளைக்கும் பொங்கல் சாமான்களைக் கைகளிலும் தோளிலும் எடுத்துக் கொண்டு வந்து கொண்டிருந்த கருடலிங்க நாடாருக்கும் ஒன்றுமே புரியவில்லை.

திகைத்தபடி அப்படியே கல் போல் நின்று விட்டார்கள். கீழே விழுந்து உருண்ட உருளியிலிருந்து ஒரு கருநாகப் பாம்பு படமெடுத்தபடி சாவதானமாக ஊர ஆரம்பத்தது.

கற்சிலை போல் நின்று கொண்டிருந்த இருவருக்கும் பாம்பைக் கண்டதும் பேச்சும் மூச்சும் அறவே நின்று போனது. காற்று மட்டுமே லேசாக வந்து போய்க் கொண்டிருந்தது.

ஒரு வழியாக நிலைக்கு வந்த போது, இருவர் கண்களிலும் கண்ணீர். அப்படியே சுவாமிகளின் கால்களில் விழுந்தார்கள்.

உயிர் காத்த உண்மை சித்தரின் முகம் பார்க்க எழுந்த போது சுவாமிகள் புன்னகைத்த படியே ‘சங்கர சங்கர சம்போ’ எனப் பாடிய படியே சன்னதித் தெருவில் ஒன்றுமே நடக்காத மாதிரி நடந்து கொண்டிருந்தார்.

திருச்செந்தூரில் சுவாமிகள் நடத்திய இந்த திருச்செயல் அவரது அற்புதங்களில் ஒன்றாக இன்றளவும் திருச்செந்தூர் வாழ் மக்கள் மத்தியில் பேசப்பட்டு வருகிறது.

# 28

## விட்ட சாபம் பட்டெனப் பலிக்கும்

ஒரு நாள் திருச்செந்தூர் தேர்வீதியில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் போய்க் கொண்டிருந்தார். வழங்கம் போல் சங்கர சங்கர சம்போ என்று பாடிய படியே குதித்தாடிச் சென்று கொண்டிருந்தார்.

சுவாமிகளின் செயல் அப்போது அங்கு வந்த ஒரு போலீஸ் அதிகாரிக்குக் கோபமூட்டியது. சோற்றுக்கு அலைகிற சாமியார் என நினைத்து, சுவாமிகளைப் பிடித்துக் கேள்விமேல் கேள்வி கேட்டார்.

சுவாமிகள் அவரை ஒரு பொருட்டாகவே மதிக்காமல் இன்னும் ஈடுபாட்டோடு ஆட ஆரம்பித்தார். பாட்டும் களை கட்டியது.

போலீஸ் அதிகாரிக்குக் கோபம் உச்சிக்கேறியது. சுவாமிகளைத் தான் வைத்திருந்த சவுக்கால் அடிக்கத் தொடங்கினார்.

சுவாமிகள் அந்த அடிகளைப் பொருட்படுத்தவில்லை. அவர் பாடிய படியும் ஆடிய படியும் ஆனந்தத் கூத்தாடியவாறும் போய்க் கொண்டே இருந்தார்.

சுவாமிகள் ஏதோ போதையில ஆடிப் பாடுவதாக நினைத்த போலீஸ் அதிகாரிக்கு மேலும் கோபம் தலைக்கேறியது. சின மிகுதியால் அடி மிகுதியானது. சுவாமிகளோ அசராமல் அடி வாங்கிக் கொண்டிருந்தார்.

ஒரு கட்டத்தில் போலீஸ் அதிகாரி கை வலித்து அடிப்பதை நிறுத்தினார்.



சுவாமிகள் அந்த அதிகாரியைப் பார்த்து ‘‘உன்னை ஆத்தா சாப்பிட்டு விட்டால.... என்று சொல்லிவிட்டு வேகமாகப் போய்விட்டார்.

போலீஸ் அதிகாரி ஏதோ புத்தி பேதலித்துவிட்ட பக்கிரி உளறுவதாக நினைத்துச் சவுக்கைச் சுருட்டிக் கொண்டு கிளம்பினார்.

அன்றிரவே நெற்றியில் ஏதோ உறுத்தவே தொட்டுப்பார்த்தார். ஏதோ சின்ன கொப்பளம். மறுநாள் காலை அந்த அதிகாரியின் நெற்றியில் புருவ மத்தியில் அந்தக் கொப்பளம் சற்றுப் பெரிதாக இருந்தது,

இஸ்லாமியர் என்பதால் அவர் அந்தக் கொப்பள்ளத்தைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. மூன்றாம் நாளில் திடீரென அவர் இறந்து போனார்.

அந்தக் கொப்புளம் பெரியம்மை என்ற உண்மை தெரிய வந்த போது சுவாமிகளின் வாய்ச் சொல்லுக்கு இருந்த ஆற்றல் உலகுக்குத் தெரிய வந்தது.

அடாவடிக்குத் தடாலடி தருவது சுவாமிகளின் வழக்கம். சாதாரணர்களின் ஆயிரம் அடிகள் அசாதாரணரான சுவாமிகளின் ஒரு சொல்லுக்கு இணையாகா.

# 29

# நிந்தா ஸ்துதிக்கும் மனமிறங்கும் நின்மல சுவாமிகள்

திருச்செந்தூரில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் இறை லயமாயிருக்கும் திருக்கோயிலைச் சகல பூஜை முறைகளோடு செவ்வனே பராமரித்து வரும் அமைப்பு, சிவத்தையாபுரத்தில் சிறப்பாக இயங்கி வரும் உலக அறிவார்ந்தோர் இயற்கை ஞான சபை.

இவ்வமைப்பின் நிறுவனரும் தலைவருமான தங்க சுவாமிகள் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் சீடரான ஆதித்தன் பிள்ளையின் நேரடி பிரதான சீடர். சங்கர பரமஹம்ச சுவாமிகளின் ஞான வழிச் சீடர்.

இந்த அமைப்பின் பொருளாளராக சேவை ஆற்றி வரும் பாண்டியன் நாடார், தங்க சுவாமிகளின் அன்பிற்குரிய சீடர். சங்கர பரமஹம்ச சுவாமிகளின் செல்லப் பிள்ளை.

சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கும் பாண்டியன் நாடாருக்கும், உள்ள மானசீக நெருக்கம் அலாதியானது. சங்கர சுவாமிகளைப் போலவே வார்த்தையாடுவார், பாண்டியன் நாடார்.

சங்கர சுவாமிகளைப் பற்றிப் பேசும் போது கூட ‘இந்தக் கிழவன்...’ என்று உரிமையோடு திட்டிப் பேசுவார். அந்தளவிற்கு நெருக்கம்.

இப்போது கம்பீரமாக காட்சி அளிப்பது போல, ஆரம்ப காலத்தில் சங்கர சுவாமிகளின் கோயில் இல்லை. மிக எளிமையாகவே இருக்கும்.

மூலஸ்தானம் மட்டும் கான்கிரீட் கட்டடம், அதனை ஒட்டி முன் இருக்கும் தியானப் பகுதி கூரையால் வேயப்பட்டிருக்கும். இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை, கீற்றுகளை மாற்றி விட்டு, புதிதாக வேய வேண்டி இருக்கும்.

பல ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு முறை, இற்று நைந்த போன சீற்றுகளை மாற்றி புதிதாக வேய வேண்டி இருந்தது. அந்த வேலையை, சித்தர்முருகன் நாடார், பாண்டியன் நாடார் இருவரும் இணைந்து  செய்துக் கொண்டிருந்தனர்.

கூரை மீதேறி வேலை பார்த்துக் கொண்டிருந்த பாண்டியன் நாடாருக்கு ஏனோ சலிப்பு. அந்த சலிப்பு ஒருவித கோபமாக மாறியது. அந்த கோபம் சங்கர சுவாமிகளை கடுமையாகத் திட்ட வைத்தது.

‘இந்தக் கிழவன் இதுக்கொரு வழி காட்ட மாட்டேங்கறான்... ரெண்டு வருடத்துக்கு ஒரு தடவை அல்லாட வேண்டியிருக்கு...’, என ஆரம்பித்து சகட்டு மேணிக்கு சுவாமிகளைக் கெட்ட வார்த்தைகளால் அர்ச்சனை செய்ய ஆரம்பித்தார். அந்த அர்ச்சனை, வேலை முடியும் வரை தொடர்ந்தது.

அந்தக் கால கட்டத்தில், சங்கர சுவாமிகளின் கோயில் பராமரிப்பு, பூஜை என்பதெல்லாம் ஒவ்வொரு பௌர்ணமி நாளன்று மட்டும் தான். மற்ற நாட்களில் அந்தப் பக்கம் யாருமே வர மாட்டார்கள்.

புதிதாக கூரை வேய்ந்த மகிழ்ச்சியில் அந்த ஆண்டு பங்குனி மாதம் மக நட்சத்திரத்தில் குருபூஜை நடந்தேறியது. தங்க சுவாமிகளும் பாண்டியன் நாடாரும் அடுத்த பௌர்ணமிக்கு வரலாம் என்று நினைத்தவாறு ஊருக்குச் சென்று விட்டனர்.

அடுத்த பௌர்ணமியின் போது வந்து பார்த்தால், கூரை வேயப்பட்ட கூடம் புத்தம் புதிதாக, ஓடு வேயப்பட்ட கூடமாகக் காத்துக் கொண்டிருந்தது.

தங்க சுவாமிகளுக்கும், சித்தர் முருகன் நாடாருக்கும், பாண்டிய நாடாருக்கும் ஆச்சரியம். யார் இந்த திருப்பணியைச் செய்தார்கள்? என விசாரிக்க ஆரம்பித்தார்கள். பதில் மட்டும் இன்று வரை கிடைக்கவில்லை.

அத்திருப்பணியைச் செய்தது யாராயிருக்கும் என்ற கேள்விக்கு ஓர் ஆன்மிக பதில் உண்டு.

பாண்டியன் நாடாரின் அர்ச்சனையைக் கேட்டு, சங்கர சுவாமிகளே ஓடு வேய்ந்த கட்டிடத்தை உருவாக்கி இருக்க வேண்டும். அல்லது அடையாளம் காட்ட விரும்பாத ஓர் அன்பரை அனுப்பி அத் திருப்பணியைச் செய்வித்திருக்க வேண்டும்.

இறையைத் துதிப்பதில் இரண்டு வகை உண்டு. ஒன்று வந்தனை ஸ்துதி. மற்றொன்று, நிந்தாஸ்துதி.

வந்தனை என்பது வாழ்த்தி வணங்குவது. நிந்தா அல்லது நிந்தனை என்பது நிந்தித்து வணங்குவது.

இன்றைய கால கட்டத்தில் கூட சில பக்தர்கள் தனது பிரிய கடவுளை டேய்... அவனே... இவனே... என அழைத்து கண்டபடி திட்டி வேண்டுதல் வைப்போரை பார்க்கலாம்.

பாண்டிய நாடாரின் நிந்தாஸ்துதி, கள்ளம் கபடமற்ற ஒரு ஞான வழித் தோன்றலின் வேண்டுதல் என்பதால், சங்கர பரமஹம்ச சுவாமிகள், கோயிலுக்கு ஓட்டுக் கட்டடம் கட்டித் தந்து அரள் புரிந்திருக்கிறார்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் இந்த அருள் அற்புத நிகழ்வு, வெகு சிலருக்கே தெரிந்த ஒன்று.

# 30

## எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க

அயிரன்பட்டி தூத்துக்குடி மாவட்டம் கடம்பூர் அருகே இருக்கிற ஒரு சிற்றூர்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் ஒரு தடவை காட்டுவழியே தனித்து அவ்வூர்ப் பக்கம் வந்தார். அவர் வந்த சமயம் அயிரன்பட்டியில் ஒரு பெரிய பிரச்சினை.

அவ்வூரில் ஆடுகள் திடீர் திடீரென செத்துக் கொண்டிருந்தன. இப்படித் தொடர்ந்து மூன்று ஆண்டுகளாக நடந்து வந்ததால் ஆட்டுக்கிடை வைத்திருப்பவர்கள் தாங்கமுடியாத பணச் சேதத்திற்கும், கடும் துயருக்கும் உள்ளானார்கள்.

ஆடுகள் மடிவதைத் தடுக்க தீவிரக் கண்காணிப்பு உள்பட பலவித நடவடிக்கைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். இந்த வேளையில் தான் சுவாமிகள் பாதம் அயிரன் பட்டியில் பட்டது.

வேற்று ஆள் ஒருவர் ஊருக்குள் நுழைவதைக் கண்ட மக்கள் அவரைத் திருட வந்தவராகக் கணித்து சூழ்ந்து கொண்டனர். கேள்வி மேல் கேள்வி கேட்டுக் குடைந்து எடுத்தனர். அவர்கள் கேள்விகளுக்கு அன்போடும் அனுசரணையோடும் பதில் தந்த சுவாமிகள் ‘உங்களுக்கு உதவுவதற்காகத் தான் வந்தேன்லே’ என அழுத்தமாகச் சொன்னார்.

பாதி நம்பியும், நம்பாமலும் சுவாமிகளுடன் பேசிய அந்தக் கிராம மக்கள் நடந்ததை எல்லாம் விலாவாரியாக எடுத்துக் கூறினார்கள்.

‘கவலைப் படாதீங்கலே. நான் தீர்த்து வைக்கிறேன்’ என்று நம்பிக்கை ஊட்டிய சுவாமிகளை, அவர்கள் சற்றும் நம்பாமல் வித்தியாசமாகவே பார்த்தார்கள்.

ஏதோ சாமியாரைப் போல ஒரு பித்துக்குளியா இருக்கும் இவர் என்ன செய்யப் போகிறார் என்று நினைத்த அவர்களைப் பார்த்து ‘என்ன அப்படி பாக்கிறீங்கலே? நான் சரி பண்றேன். இம்... இப்ப எனக்குப் பசிக்குதே என்ன வச்சிருங்கீங்கலே?’ எனப் பசி மயக்கத்தோடு கேட்பவர் போல் கேட்டார்.

‘எங்ககிட்ட என்ன இருக்கும்... பழைய கஞ்சி தான் இருக்கு அதுவும் நாங்க குடிக்கிற அளவுக்கு கொஞ்சமா தான் இருக்கு’ என்றபடி தாங்கள் வைத்திருந்த கலயங்களை எடுத்து வந்தார்கள். சுவாமிகளுக்கும் பங்கிட்டுத் தரமுன் வர, ‘சரி... சரி வாங்கலே. எல்லாரும் சாப்பிடலாம்’ எனக் கூவி சுவாமிகள் அழைக்க, அருகில் வந்து கஞ்சிக் கலயத்தைத் திறந்தார்கள்.

திறந்தால் மிக அருமையான உணவு வகைகள், சுவையான பதார்த்தங்ககள் வாழ்நாளில் வாய் வைத்திராத பட்சணங்கள் அத்தனையும் சூடாகக் கலயங்களில் தயாராய் இருந்தன.

மணம் நாசிகளைத் துளைக்க, வியந்து போனார்கள் அத்தனை பேரும்.

உணவு எடுத்து முடித்தார்கள். வந்திருப்பவர் சாதாரண ஆள் இல்லை, பெரிய சாமியார் என உணர்ந்தார்கள். தங்கள் கவலைகள் இனி மாய்ந்து போகும் ஆடுகள் மாய்ந்து போகாது எனப் பெரிதும் நம்பி பூரணமாக மகிழ்ந்தார்கள்.

சுவாமிகள் எழுந்தார் ‘ஏலே இனி கவலைப்படாதீங்க உங்க ஆடுகள் இனி செத்து விழாது ஊரே செழிப்பாக இருக்கும்’ கட கடவென சொன்னார். அத்தனை பேரும் பக்திப் பரவசத்தில் ஆழ்ந்து, சுவாமிகளின் காலடியில் வீழ்ந்தார்கள். இறையாய் எண்ணி தொழுதபடி இருந்தார்கள்.

அவர்களை ஆசிர்வதித்து விட்டு புறப்பட்டவர், சற்று திரும்பி ‘சொல்ல மறந்துட்டேன்லே வருடா வருடம் பங்குனி மாதம்

*மக நட்சத்திரத்தன்று பொங்கல் வச்சு கும்பிடுங்க... நல்லதே நடக்கும் ஊர்ல இன்பம் பொங்கும்? சொல்லியபடியே பயணத்தைத் தொடர்ந்தார் சுவாமிகள்.*

*சுவாமிகள் நடந்து சென்ற பாதையை வணங்கி வாழ்த்திய படியே பார்த்த அயிரன்பட்டி மக்கள் அத்தனை பேரும் மீண்டும் ஒருசேர தரையில் விழுந்து அவர் திசை நோக்கி வணங்கினர்.*

*அமைதி! அப்படியொரு அமைதி!*

*அதைமீறி சுவாமிகள் சென்ற திசையிலிருந்து 'சங்கர சங்கர சம்போ' என்ற தெய்வீகப் பாடல் இனம் புரியா ராகத்தில் காட்டுவெளி எங்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது.*

*அயிரன்பட்டியில் சுவாமி செய்த அருட்செயலால் பின் எப்போதும் ஆடுகள் கொத்து கொத்தாக, செத்து விழுந்ததாக செய்திகள் இல்லை.*

*இன்றளவும் அம்மக்கள் ஆண்டு தோறும் அருளாளர் நாயகன் சொல்லிச் சென்றவாறு பொங்கல் வைத்து வழிபாடு செய்து வருகின்றனர்.*

# 31

## நோய் தீர்க்கும் ஜீவகாருண்யச் சித்தர்

*சங்கர பரமஹம்ச சுவாமிகள் வெற்றிலை போடும் வழக்கம் கொண்டவர்.*

*வெற்றிலை போடுவதால் ஏற்படும் பலன்கள் ஏராளம். சன்மார்க்கிகள் கண்டிப்பாக வெற்றிலை போட வேண்டும் என்று இராமலிங்க வள்ளல் பெருமான் வலியுறுத்துவார். மருத்துவ ரீதியாகவும் நிறைய உடல் நலன்களை உணர முடியும். இதில் ஆன்மிகப் பலனும் உண்டு.*

*தீராத வயிற்றுவலி நோய் என அபயம் தேடி வரும் அன்பர்கள் மீது தான் போட்டுக் கொண்டு இருக்கும் வெற்றிலைச் சாறை உமிழ்வது சுவாமிகள் வழக்கமாக கொண்டிருந்த நோய் தீர்க்கும் முறை.*

*உடையாம்புளியில் தங்கியிருந்த காலத்தில் எண்ணற்ற அன்பர்களுக்கு அவர்களது நோய் மற்றும் பயத்தைப் போக்க சுவாமிகள் வாய்த் தம்பலத்தைப் (தாம்பூல எச்சில்) பயன்படுத்தி வந்தார்.*

*அவர்கள் நோய் நீங்கியும், பயம் நீங்கியும் சுவாமிகளை வணங்கிச் செல்வதோடு இந்த சிறப்பினை ஊர் முழுக்க சிலாகித்துச் சொல்வார்கள்.*

*இதனால் நாளுக்கு நாள் சுவாமிகளின் கீர்த்தி எட்டுத் திசைகளிலும் பரவி வந்தது.*

ராஜ ராஜ சோழனின் ஆட்சிக் காலத்தில் தஞ்சை பெரு ஆவுடையார் கோயிலில் சிவலிங்கத்தை மூலஸ்தானத்தில் வைத்த போது சரியாக நிலை ஆகாததால் கருவூர் சித்தர் தன் வாய்த்தம்பலத்தால் சரியாக அமைத்து நிலைபெறச் செய்தது இங்கு நினைவு கூரத் தக்கது.

உடையாம்புளியில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் இருந்து வந்த போது இரண்டு நாய்கள் எப்போதுமே சுவாமிகளைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும்.

அந்த ஜீவராசிகள் மீது எப்போதும் சுவாமிகள் அக்கறை காட்டுவார். பரிவோடு கண்காணித்துக் கொண்டிருப்பார். தான் உண்ணும் போதெல்லாம் அவற்றுக்கு உணவு கொடுப்பார்.

ஜீவகாருணியம் என்பது சங்கர பரமஹம்சரின் இயல்பாய் இருந்தது. எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க என்பது வாழ்க்கை நெறியாகத் திகழ்ந்தது.

# 32

# எங்கும் இருக்கும் ஏகாந்த சுவாமிகள்

கோவில்பட்டி அருகே உள்ள உடையாம்புளி என்ற ஊரில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் நெடுநாள் தங்கி இருந்தார்.

அந்த ஊர் அவரது மனதிற்கினிய ஊர். அங்கு வசித்த மக்களிடம் மிகுந்த பிரியம் காட்டினார். ஊர் மக்களும் மிகுந்த அன்பு செலுத்தினர்.

சங்கர சுவாமிகளின் மகத்துவமோ அவர் சித்த நிலையை அடைந்தவர் என்றோ அந்த ஊரில் யாருக்கும் தெரியாது.

உடையாம்புளியின் கிராம அதிகாரி சுவாமிகள் மீது மிகுந்த மரியாதை கொண்டவர். தனது வீட்டில் சில காலம் தங்கி இருக்க வேண்டி சுவாமிகளிடம் வேண்டினார் கிராம அதிகாரி. சுவாமிகளும் சம்மதித்து அவர் வீட்டில் தங்கலானார்.

அந்தச் சமயத்தில் கிராம அதிகாரியின் மகளுக்கு வரன் அமைந்து, கோவில்பட்டியிலே திருமணம் நடப்பதாக நிச்சயிக்கப்பட்டது. திருமணத்திற்காக எல்லோரும் கோவில் பட்டி செல்லும் போது கிராம அதிகாரியின் வயதான தாயாரை யார் கூடவே வீட்டிலிருந்து கவனித்துக் கொள்வது என்ற கேள்வி எழுந்தது. அன்பும், கருணையும், அர்ப்பணிப்பும் கொண்டிருக்கிற சுவாமிகள் தான் சரியான நபர் என எல்லோரும் கருதியதால் கிராம அதிகாரி சங்கர சுவாமிகளை உதவும் படிக் கேட்டார்.

சுவாமிகளும் சம்மதிக்க அனைவரும் திருமணக் காரியங்களுக்காகக் கோவில்பட்டிக்குச் சென்றுவிட்டனர்.

சுவாமிகள் மட்டும் கிராம அதிகாரியின் தாயாருடன் வீட்டில் இருந்தார்.

திருமண நாள் மதிய விருந்தில் கலந்து கொள்ள வந்தவர்களுக்கு ஓர் இன்ப அதிர்ச்சி!

சுவாமிகள் விருந்தில் கலந்து கொண்டு அமர்க்களமாக உணவருந்திக் கொண்டிருந்தார். செய்தி கிராம அதிகாரிக்குப் போனது.

தனது அம்மாவை ''அம்போ'' என்று தனித்து விட்டு விட்டுச் சுவாமிகள் கோவில்பட்டிக்கு வந்து விட்டாரே என்று துயரமும் கோபமும் கொண்டார்.

சுவாமிகளைத் தேடி விருந்து நடக்கும் இடத்திற்கு அவர் வந்த போது விருந்து முடிந்திருந்தது சங்கர சுவாமிகள் உணவருந்திவிட்டு கிளம்பியிருந்தார்.

திருமண வேலைகளை எல்லாம் முடித்துவிட்டு கிராம அதிகாரி சொந்த ஊரான உடையாம்புளிக்கு ஒரு வாரம் கழித்துத் திரும்பினார். சுவாமிகள் அப்போது அவருடைய அம்மாவை வெகு பாந்தமாகக் கவனித்துக் கொண்டிருந்தார்.

சுவாமிகள் இல்லாத நேரம் பார்த்துக் கிராம அதிகாரி தனது தாயாரிடம் சுவாமிகள் பற்றி விசாரித்தார்.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேளையும் சுவாமிகள் உடனிருந்து உணவளித்து மிகுந்த அன்போடும், அனுசரணை யோடும் தாயினும் மேலாகப் பராமரித்து வந்ததாக நெகிழ்ச்சியுடன் கூறினார், கிராம அதிகாரியின் அம்மா.

'திருமண நாளன்று' என்று அதிகாரி ஆர்வமுடன் கேட்டதற்கு அந்த தாய், அன்று மதியம் தனக்கு உணவளித்ததோடு தன்னோடு அமர்ந்து சாப்பிட்டதாகச் சொன்னார்.

அப்போது தான் கிராம அதிகாரிக்கு ஓர் உண்மை உறைத்தது. சுவாமிகள் சாதாரண ஆள் இல்லை. சக்தி வாய்ந்தவர். சித்து தெரிந்தவர். ஒரே நேரத்தில் பல இடங்களில் தோன்றக்

கூடியவர் என்று அக்கம்பக்க ஊர்களில் உலா வந்த தகவல் உண்மையானது என்பதை உணர்ந்தார்,

அது நேரம் சுவாமிகள் அங்கு வர கிராம அதிகாரி தான் தவறாக எண்ணியதைச் சொல்லி அழுது மன்னிப்புக் கோரினார்.

கிராம அதிகாரி, உடனிருந்த உறவினர்கள், தலையாரி வெள்ளையத் தேவர் உள்ளிட்ட ஊர்மக்களும் அப்படியே சாஷ்டாங்கமாக சங்கர சாமிகளின் தாள் பணிந்து அருளாசி வேண்டினர்.

சங்கர பரமஹம்சரோ வழக்கம் போல் புன்னகைத்த படி 'சங்கர சங்கர சம்போ' எனப் பாடி ஆடியபடியே அக்கூட்டத்தை ஆசீர்வதித்தபடியே அவ்விடத்தை விட்டு நகர்ந்தார்.

பிறகு உடையாம்புளி, சங்கர சுவாமிகளை தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டது. கொண்டாடி மகிழ்ந்தது.

# 33

# வறுத்த கொள்ளு முளைக்கும்

கிராம அதிகாரியின் மகளின் திருமணத்தின் போது சங்கர பரமஹம்ச சுவாமிகள் ஒரே சமயத்தில் கோவில்பட்டியிலும் உடையாம்புளியிலும் இருந்த காரணத்தால் அவரது புகழ் அவ்வாட்டாரம் முழுக்கப் பரவி இருந்தது.

அதனால் எந்நேரமும் சுவாமிகளைச் சுற்றி ஒரு கூட்டம் குழுமியபடி இருந்தது. சுவாமிகளின் பேச்சைக் கேட்பதும், தங்களுக்கும் புரியும் படி அர்த்தம் கேட்பதும் சுவாமிகளிடம் சித்து வேலை ஏதேனும் செய்து காட்டும்படி வேண்டுவதும் கூட்டத்தினரது வழக்கம்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு வறுத்த கொள்ளு என்றால் ரொம்பப் பிரியம். விரும்பிச் சாப்பிடுவார். சாப்பிடும் போது உடனிருப்போருக்கும் தருவார். அவர்களையும் சாப்பிடச் சொல்லி வலியுறுத்துவார்.

கிராமப் பகுதிகளில் கொள்ளை 'காணம்' என்பார்கள் ஒருமுறை உடனிருந்த கிராமத்துக்காரர் 'ஏங்க சுவாமி, வறுத்த காணம் முளைக்குமா?' என விளையாட்டாகக் கேட்டார்.

உடனிருந்தவர்கள் சுவாமியின் பதிலுக்காக ஆவலோடு அவர் முகம் பார்த்திருந்தார்கள். சுவாமிகள் ஏதேனும் சித்து வேலை செய்வார் என நினைத்து அதைப் பார்க்கவும் தயாரானார்கள்

'வஞ்சம் இல்லாத நெஞ்சத்திற்கு வறுத்த காணம் முளைக்கும்' என்று உரத்த குரலில் சொன்னார் சுவாமிகள்.

சாப்பிட்டுக் கொண்டிருந்த வறுத்த காணத்தில் கொஞ்சம் எடுத்து அருகிருந்த கிராமவாசி ஒருவரிடம் கொடுத்து அதை விதைக்கச் சொன்னார். என்ன ஆச்சரியம்! மூன்றாம் நாளில் கொள்ளு முளைத்திருந்தது.

உடையாம்புளி மீண்டும் ஒருமுறை சுவாமிகளின் மகத்துவத்தால் திணறிப்போனது. சுவாமிகளைச் சூழும் வெளியூர் அன்பர்கள் அதிகளவில் பெருகத் தொடங்கினர். அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து மக்கள் தேடி வந்து தரிசிக்க ஆரம்பத்தனர்.

உடையாம்புளி நாள்தோறும் திருவிழாக் கோலத்தில் திளைத்தது.

# 34

# துப்பாக்குடியில் சங்கர பரமஹம்ச சுவாமிகள்

சங்கர பரமஹம்ச சுவாமிகள் அவதரித்த ஊரான பாப்பாங்குளத்துக்கு நடை தூரத்தில் உள்ள ஊர் துப்பாக்குடி.

பாப்பாங்குளத்தில் உள்ள குல தெய்வமான வடக்கு வாசல் செல்லி அம்மன் திருக்கோயிலிலும், துப்பாக்குடியில் உள்ள ஆதித்தவர்ணேசுவரர் திருக்கோயிலிலும் தாம் பரமஹம்சரின் மூதாதையர் குருக்களாகப் பணிபுரிந்து வந்தனர்.

பரமஹம்ச சுவாமிகள் துப்பாக்குடி ஆதித்தவர்யேணேசுவரர் கோயிலில் இளமைக் காலத்தில் பணிபுரிந்திருக்கிறார்.

சுவாமிகளின் வம்சாவளியில் வந்த தற்போதைய தலை முறையினர் அம்பாசமுத்திரம் அகத்தியப் பெருமான் கோயிலில் ஒன்று கூடித் தங்கள் தாத்தா சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்குத் தங்கள் குடும்பங்களின் சார்பில் சிறப்பாக ஒரு நற்பணியைத் தொடர்ந்து செய்து வர வேண்டும் என அண்மையில் திட்டமிட்டனர்.

சுவாமிகளின் வம்சாவளித் தலைமுறைப் பேரர்களான திருவாளர்கள் கைலாசபட்டர், சுப்பிரமணியன் பட்டர், ஜானகிராம் பட்டர், இராஜா பட்டர், என்.கே. இராஜா பட்டர், லண்டனில் இறைபணியில் இருக்கும் கணேச பட்டர் மற்றும் பலர் மிகுந்த விருப்பத்தோடு அகத்தியர் கோவிலில் கூடி இருந்தனர்.

சுவாமிகளின் வம்சாவளியினர் இன்று வரை கோயில் பணிகளிலேயே ஈடுபட்டு வருகின்றனர் என்பது வியப்புக்குரிய போற்றுதலுக்குரிய செய்தி.

அம்பாசமுத்திரம், திருப்பரங்குன்றம், இராமநாதபுரம், அரியநாயகிபுரம், மதுரை, பிள்ளையார்பட்டி, கடையம், திருச்செந்தூர் ஆகிய திருத்தலங்களில் உள்ள திருக்கோயில்களில் அவர்கள் இறைபணி ஆற்றி வருகிறார்கள். துப்பாக்குடியில் தங்கள் தாத்தா சுவாமிகளுக்கு ஒரு கோயில் கட்டி பூஜித்து வரலாம் என்று கூட்டத்தில் அவர்கள் ஏகமனதாக முடிவெடுத்தார்கள்.

அப்படி ஒரு கோயில் அமைப்பதை தாத்தா சுவாமிகள் விரும்புகிறாரா, அதற்கு ஒப்புதல் தருவாரா என்றெல்லாம் யோசித்தார்கள் ஏற்கனவே இறைலயம் அடைவதற்கு முன்பு ஒரு நாள் சங்கர பரமஹம்ச சுவாமிகள் அழகர் பட்டாச்சார்யா வீட்டுக்கு வருகை புரிந்து கொடுத்துச் சென்ற சுவாமிகளுடைய அழகிய ஓவியத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் தீர்மானித்தார்கள்.

எல்லாம் சரி. தாத்தாவின் அனுமதி?

அப்போது கூட்டத்தில் இருந்த ஒருவருக்கு ஒரு குரல் அசரீரி போல் மானசீகமாய் உதயமாகத் தொடங்கியது. ஆம்! சங்கர பரமஹம்ச சுவாமிகளின் குரல் தான் அது.

கட்டப்பட இருக்கும் கோயிலில் வைக்க வேண்டிய பொருட்கள், நிவேதனங்கள் பற்றி நிதானமாகச் சொன்ன சுவாமிகள், ‘எலே, நீங்க கோயில் கட்ட இடம் எனக்குச் சம்மதமா எனத் தெரிஞ்சுக்க ஆசைப்படறீங்க தானே?’ எந்த இடம் சரியான இடங்கறத குறிப்பா காட்டறேன். அங்கபோங்க. ஒரு வயசான ஆள் வருவான். அவன் உங்ககிட்ட வந்து எதாவது தா எனக் கேட்பான். அவன் கிட்ட கையிலிருக்கிறா காசோ, பணமோ, பொருளோ எதாச்சும் கொடுங்க! அப்படிக் கொடுக்கிற இடம் தான் கோயிலுக்கு ஏற்ற இடம் என்று அச்சரம் பிறழாமல் ஆணித்தரமாக ஒலித்தது சுவாமிகளின் தெய்வீகக் குரல்.

*எல்லோரும் துப்பாக்குடிக்குப் போனார்கள். கோயிலுக்கு தாங்கள் தேர்ந்தெடுத்திருக்கிற பகுதிக்குப் போனார்கள். அங்கே கண்ணுக்கு எட்டிய தூரம் வரை எவரும் தென்படவில்லை.*

*பொறுமையோடு காத்திருந்தார்கள், பிற விஷயங்களைப் பேசியபடி கொஞ்சம் நேரம் கழிந்திருக்கும். ஒரு வயதான பெரியவர் அந்தப் பக்கம் வந்தார். 'ஏதாவது தா' அவர் குரல் உரிமையோடு கேட்டது. ஆச்சரியப்பட்டுப் போனார்கள், அய்யன் பட்டரின் வாரிசுகள். கொடுத்தார்கள். பெற்றுக் கொண்டு பெரியவர் வந்த வழியே மெல்ல நடந்தார்.*

*அவர் அப்படியே அசலாக சங்கர பரமஹம்சராக அவர்களுக்குத் தெரிந்தார். 'ஏதாவது தா' என்ற குரல் கூட அவரின் ஏகாந்தக் குரலே! உறவினர்கள், இதைப் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அனைவரும் வியந்து போனார்கள் தாத்தாவின் மகத்துவத்தைப் பூரணமாக உணர்ந்தார்கள் அவர் வந்து போன திசையை வணங்கி அவர் நின்று வாங்கிய இடத்தில் கோயில் பணி ஆரம்பித்தார்கள்.*

*2012-ஆம் ஆண்டு வாக்கில் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திருநாமத்தோடு சுவாமிகள் சுட்டிக் காட்டிய அதே இடத்தில் ஒரு திருக்கோயில் உருவானது. சுவாமிகள் இறைபணி செய்து வந்த துப்பாக்குடி ஆனந்தவல்லி உடனிருக்கும் ஆதித்தவர் ணேச்சுவர் கோயிலின் அருகில் உருவான அக்கோயிலில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் கருணையோடு கம்பீரமாக வீற்றிருக்கிறார். தேடி வரும் அன்பர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார்.*

# 35

## துப்பாக்குடியில் நேர்ந்த அருள் அற்புதம்

துப்பாக்குடியில் உள்ள சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கோயிலில் நடந்த ஒரு நிகழ்வு அதிசயமானது அற்புதமானது.

சுவாமிகள் அக்கோயிலில் முழு மனதுடன் அமர்ந்து துப்பாக்குடியையும் அன்பர்களையும் பலத்த பாதுகாப்புடன் பாதுகாத்து வருகிறார் என்பதற்குச் சான்றே அந்த அதிசய நிகழ்வு.

குடமுழுக்கு முடிந்த பின்னரும் சிற்சில கோயில் நிர்மாணப் பணிகள் வேகமாக நடந்து கொண்டிருந்தது.

கோயிலின் உள்ளே கருணையும் கம்பீரமும் கலந்த பாவனையோடு ஒரு நாற்காலியில் சுவாமிகள் அமர்ந்திருக்கிற மாதிரி உள்ள புகைப்படமே மூலவர்.

சுவாமிகளைப் போற்றும் வகையில் அருகில் ஒரு சிறு பிரம்பும், பாதக்குறடும் (பாதணி), பூஜைக்குரிய சாமான்கள், வேட்டி, துணிமணிகள், அணையா அகல் விளக்குகள் என மூலவருக்குரிய சிறிய அறை தெய்வீகமாக இருந்தது.

புதிதாகக் கட்டப்பட்டு இருந்ததால் கூடுதலான குளிர்த் தன்மை அறை முழுவதும் ஆக்கிரமித்திருந்தது.

ஒரு நாள் பூஜையெல்லாம் முடித்துவிட்டு மாலை மங்கும் போது பூசகர் வெளியேறிவிட்டார்.

திடீரெனப் பூட்டிய அறைக்குள் ‘படப்பட’ என வெடி வெடித்த சத்தம். புகையும் தூசும் கதவிடுக்கில் வெளியேறி. பயமுறுத்தின. என்ன நடந்தது! ஏது நடந்தது! என யூகிக்க முடியாத நிலை என்ன குற்றம் செய்து விட்டோமோ? வே காபக்காரத் தாத்தா கோபத்தை அவ்விதம் வெளிக் காட்டுகிறாரா! என ஓடிவந்தவர்களுக்குப் பயம்.

மறுநாள் எல்லோரும்கூடி பயந்த படியே கதவைத் திறந்தார்கள்.

உள்ளே புதிதாக ஒட்டப்பட்டிருந்த மொசைக் டைல்ஸ் வெடித்துச் சிதறியிருந்தன. மின்சார ஒயர்களும் மின் இணைப்புப் பெட்டிகளும் கருகி இருந்தன. வேட்டி துணி மணிகள் தீயினால் பொசுங்கி அப்போதும் புகை விட்டுக் கொண்டிருந்தன.

ஒரு தீ விபத்து நடந்து முடிந்திருக்கும் அறிகுறி. சுவரில் பல இடத்தில் தீக் காயங்கள். நாற்காலியும், தாத்தா புகைப்படமும் கூட தப்பவில்லை. தீ நாக்குகள் அவற்றையும் பதம் பார்த்திருந்தன.

‘‘ஐயகோ தாத்தா’’ என விசும்பும் குரலுடன் ஒருபுறம் தெய்வக் குற்றமோ எனப் பதறிய படி தாத்தா சுவாமிகளில் புகைப்பட பிரேமை கைகளால் தட்டி விட்டுப் பார்த்தார்கள்.

தாத்தா சுவாமிகளின் படம் மட்டும் கொஞ்சம் கூடப் பாதிக்காமல் தீயின் சுவடு தாக்கம் சிறிது கூட இல்லாமல் வைத்தது வைத்த மாதிரியே ஒளியூட்டிக் கொண்டிருந்தது.

புகைப்படத்தின் சுவாமிகளின் திரு உருவத்திற்கு மிக அருகில் ஒரு மில்லி மீட்டர் தூரம் வரை தீயில் எரிந்திரிந்தும் தாத்தா சுவாமிகள் மட்டும் தெய்வீகமாக ஒளிர்ந்து கொண்டிருந்தார்.

எல்லோருக்கும் ஏக நிம்மதி. மின் கசிவு ஏற்பட்டு உள்ளே தீப்பிடித்திருக்கலாம் அல்லது தீபத்தின் நாக்குகள், விளக்கு எண்ணெயின் சிதறல்களுக்குத் தாவி அருகில் இருக்கிற

துணிமணிகளை துவம்சம் செய்திருக்கலாம் என ஆளாளுக்குக் காரணம் சொன்னார்கள்.

புகைப்படத்தில் தாத்தா சுவாமிகள் எலே இது ஒரு சின்ன சோதனை லே, இனி எந்த பிரச்சினையும் இருக்காதுலே என்று கூறுவது போல் கூர்ந்து பார்த்துக் கொண்டும் அருள்பாலித்துக் கொண்டும் இருந்தார்.

அடுத்த சில நாட்களில் உள் அறையும் புகைப்படமும் புணரமைக்கப்பட்டு விட்டன. இப்போது துப்பாக்குடிக்கு வந்த பாருங்கள், பிரமித்துப் போவீர்கள்.

# 36

# சங்கர பரமஹம்ச சுவாமிகளும் இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகளும்

ஞானாலயா வள்ளலார் கோட்டம் அமைத்து வள்ளல் இராமலிங்க அடிகளாருக்கும் சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கும் வாரம் தோறும் குருபூஜையும் வருடம் முழுவதும் தினமும் அன்னதானமும் வழிபாடும் பல வருடங்களாக நடத்திப் பூஜித்து வரும் இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகள் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் சீடர்களில் முக்கியமானவர்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள், திருஞானானந்தா சுவாமிகளிடம் நிகழ்த்திய அற்புதங்களும், அவருடனான அனுபவங்களும் குரு - சீடர் உறவுக்கும் அன்புக்கும் அழுத்தமான எடுத்துக்காட்டுகள் என்று சொல்லலாம்.

# 37

# பத்து வயதில் முதல் காட்சி

**அ**ப்போது திருஞானானந்தா சுவாமிகளுக்குப் பத்து வயதிருக்கும். ஒருநாள் இரவு திருச்செந்தூர் அருகில் உள்ள சிறுநாடார் குடியிருப்பில் உள்ள வீட்டில் படுத்து தூங்கிக் கொண்டிருந்தார். சற்றுத் தள்ளி அவரது பெற்றோர் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென சுவாமிகளுக்கு விழிப்புத் தட்டியது. வீட்டுக்கு வெளியே தெருவில் ஏதோ சத்தம் மெலிதாக ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்க முடிந்தது.நேரம் ஆக ஆக அந்தச் சத்தம் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தது, கூர்ந்து கேட்கலானார்.

அந்த ஒலி இப்போது வீட்டு வாசலின் முன் நின்று நிலைத்து ஒலிக்க ஆரம்பித்தது. சுவாமிகள் லேசாகத் தலையைத் தூக்கி சத்தம் வரும் வாசலைப் பார்த்தார். சுவாமிகள் தன்னையும் அறியாமல் கட்டிலில் இருந்து எழுந்து கதவுகளைத் திறந்து வாசலுக்கு வந்தார்.

வாசலில் ஒருவர் ஆடிக் கொண்டிருந்தார். ஆடிக் கொண்டிருப்பவரோடு சேர்ந்து கொண்டு சுவாமியும் ஆட ஆரம்பித்தார். ஆனந்தமாய் ஆடும் அவரை உற்றுப் பார்த்தார். தெய்வீகப் பேரொளி அவர் முகத்தில் தெரிந்தது. முன்னர் பார்த்திராத முகம்.

வந்தவர் பாடிய ‘சங்கர சங்கர சம்போ’ எனும் பாடல் ஒரிரு நிமிடங்களில் சுவாமிகளுக்கும் பரிச்சயமாகி சுவாமியும் பாட ஆரம்பித்தார். இப்போது இரண்டு பேரும் ஒரே மாதிரி பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருந்தார்கள்.



இதற்கிடையில், பையன் எழுந்து வாசல் புறம் சென்று கொண்டிருப்பதை யதேட்சையாக கவனித்த அம்மா, அப்பாவை எழுப்பி விஷயத்தைச் சொன்னார்.

அப்பா வாசல் பக்கம் வந்தார். வாசலில் ஆடியவர் அவர் கண்களுக்குத் தெரியவில்லை. தனது மகன் பித்துப் பிடித்தவனைப் போல் தனியாக ஆடிக் கொண்டிருப்பதைக் கண்டு பதைபதைத்தார்.

ஏதோ காத்துக் கருப்பு பிடித்திருக்குமோ என அஞ்சி வீட்டினுள் சென்று ஒரு விளக்குமாறை எடுத்து வந்தார்.

ஆனந்தக் களிப்போடு ஆடிக் கொண்டிருந்த சுவாமிகளை அப்படியே விளக்குமாறால் அடிக்க ஆரம்பித்தார்.

அவர் உச்சந்தலையில் ஓங்கி அடிக்கும் போது தான், சுவாமிகளுக்கு என்னமோ நடப்பது புரிந்தது. சுவாமிகளின் தந்தை அப்படியே தலை உச்சி முடியைப் பிடித்துத் தர தர வென இழுத்துச் சென்றுபடுக்கையில் தள்ளினார். திருஞானானந்தா சுவாமிகள் அன்றிரவு அப்படியே தூங்கிப் போனார். இச் சம்பவத்தை திருஞானானந்தா சுவாமிகள், காலப் போக்கில் மறந்து போனார். சின்னஞ் சிறுவனான சுவாமிகளுக்கு அன்று நடந்தது அவ்வப்போது ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தது. ஆடலோடு பாடல் பாடி அமர்க்களப்படுத்திய அந்த முகம் மட்டும் மனதில் ஆழப் பதிந்தது,

# 38

# இருபது வயதில் தீட்சை

அப்போது திருஞானானந்தா சுவாமிகளுக்கு இருபது வயதிருக்கும். சரியான வாலிப வயது. தூத்துக்குடியில் சித்தப்பாவோடு சேர்ந்து வியாபாரம் செய்து கொண்டிருந்தார்.

சித்தப்பாவின் நண்பர்களான பார்த்தசாரதி நாடார், தங்க சுவாமிகள் ஆன்மீகத்தில் ஈடுபாடு கொண்டவர்கள். திருச்செந்தூரில் இறைநிலை அடைந்திருந்த சங்கர பரமஹம்ச சுவாமிகளைக் குருவாகக் கொண்டு வழிபட்டு வந்தார்கள். வணிகத்தில் இருந்தாலும் வாலிபத்தில் மிதந்தாலும் அந்த வயதில் திருஞானானந்தா சுவாமிகளுக்கு ஆன்மீகத்தில் மிகுந்த நாட்டம் இருந்தது. தனிமை, தியானம், தவம் எனத் தீவிரமாக இருந்தார்.

சுவாமிகளின் அதீத ஈடுபாட்டைத் தினமும் கண்டு வந்த பார்த்தசாரதி நாடாரும், தங்க சுவாமிகளும், சித்தர் முருகன் நாடாரும் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறி, திருச்செந்தூருக்கு அழைத்தனர். எதிர்பாராத விதமாக பார்த்த சாரதி நாடார் சென்னை சென்று விட்டார். அவர்கள் அழைத்த மாதிரியே திருச்செந்தூருக்குச் செல்ல சுவாமிகள் ஆயத்தமானார்.

திருச்செந்தூர் செல்லவிருந்த தினத்திற்கு முதல் நாள் இரவு சுவாமிகள் தியானத்தில் அமர்ந்திருந்தார். தியானத்தில் வந்தார் ஒரு மகான். திருஞானானந்தா சுவாமிகள் அவரை உற்று நோக்கினார். எங்கேயோ பார்த்த முகம். ஏற்கனவே

கண்டிருந்த உருவம். ஒரே நொடியில் தியானத்திலேயே அவர் யாரென்பதற்கான விடை வட்டமடித்தது. அந்த முகம் பத்து வயதில் நள்ளிரவில் வீட்டு வாசலுக்கு வந்து ஆடல் பாடலை நிகழ்த்திய அதே முகம்.

மகான் போல் மனதிற்கினியவராகக் காட்சி தந்த அவர், சுவாமிகளுக்கு தியானத்தின் போதே மெய்யுணர்வு தீட்சை தந்தார்.

யாருக்கும் கிடைக்காத பாக்கியம். அப்போதும் அவர் யார், பெயர் என்ன என்று சுவாமிக்குத் தெரியவில்லை. ஏதோ பெரிய மகான் என்று மட்டும் எண்ணி பூரிப்படைந்திருந்தார்.

மறுநாள் திட்டமிட்டபடி அங்கு ஏற்கனவே திருச்செந்தூரில் இருந்த தங்க சுவாமிகள், சித்தர் முருகன் நாடார் திருஞானானந்தா சுவாமிகளை திருச்செந்தூர் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். அங்கு தங்க சுவாமிகள் திருஞானானந்தா சுவாமிகளுக்கு ஞான வழி முறைகளை உணர்த்தினார்.

கோயிலினுள் இறைநிலை அடைந்திருக்கும் சங்கர பரமஹம்ச சுவாமிகளை தரிசிக்கும் போது தான் அவரது திரு உருவப் படத்தை உற்று நோக்கினார் சுவாமிகள். உள்ளமும் உடம்பும் ஒரு கணம் சிலிர்த்துப் போனது.

பத்து வயதில் ஆடலும் பாடலும் இணைந்த ஆனந்தக் களிப்பினில் இணைந்தவர், இப்போது இருபது வயதில் தவத்தில் காட்சி தந்து மெய்யுணர்வு தீட்சை தந்து தன்னுடன் இணைத்தவர் சங்கர பரமஹம்ச சுவாமிகள் தான் என்பதை உணர்ந்த போது, திருஞானானந்தா சுவாமிகளின் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர்.

அன்று தனது கோயிலிலேயே சங்கர பரமஹம்சர் சுவாமிகள், திருஞானானந்தா சுவாமிகளை ஆட்கொண்டு அருள் தந்தார். அது திருஞானானந்தா சுவாமிகள் பெற்ற பேறு.

அப்பேறுக்கு காரணமான தங்க சுவாமிகளே, திருஞானானந்தா சுவாமிகளின் ஆன்மிக வாழ்விற்கு ஒரு திருப்புமுனையாகத் திகழ்கிறார். இன்றளவும் தங்க சுவாமிகளை தனது நெஞ்சத்தில் வைத்து போற்றி வருகிறார் திருஞானானந்தா சுவாமிகள் என்பது குறிப்பிடத்தக்கது.

# 39

# தவத்தில் வந்த குறட்பாக்கள்

திருச்செந்தூரிலிருந்து திரும்பியிருந்த திருஞானானந்தா சுவாமிகளுக்கு வணிகத்தை விடத் தவம் பிடித்துப் போனது. ஏற்கனவே இருந்து வந்த நிலைக்கும் அடுத்த அதீத நிலையில் சதா சர்வகாலமும் இறைச் சிந்தனையில் இருந்து வந்தார்.

ஒரு நாள் மாலை தவத்தில் இருந்த போது திருக்குறளில் இருக்கும் மூன்று குறட்பாக்கள் அவருக்குக் காட்சியாகத் தெரிந்தது. சங்கர பரமஹம்ச சுவாமிகளே தியானத்தின் போது எழுந்தருளி அக்குறட்பாக்களை காட்சிப்படுத்தினார்.

அக்குறளைத் திரும்பத் திரும்பப் படித்தார். தியானத்திலேயே திரும்பத் திரும்பச் சொன்னார். அவற்றின் பொருள் உணர்ந்தார்.

அக்குறள்களே பின்னர் அவர் தவ வாழ்வை வழி நடத்தியது. தியானம் முடிந்து எழுந்த திருஞானானந்தா சுவாமிகளுக்குப் புதிதாய் பிறந்த உணர்வு.

அதன் பின் உலக வாழ்க்கையில் கொண்டிருந்த பற்று குறையத் தொடங்கியது. பற்றற்ற ஆனந்த பரவச நிலை எந்நேரமும் வியாபித்திருந்தது. பிரபஞ்ச வெட்ட வெளியில் தானதுவாக ஆன நிலை.

சகஜ நிலையில் நடக்கும் பொழுதும் கண்களுக்குக் கீழுள்ள உடல் பாகங்களைக் கூட உணர முடியாத உன்னதம் கிடைத்தது. திருஞானானந்தா சுவாமிகளின் மாற்றம் அவருக்கே ஆச்சரியமளித்தது.

*அதே சமயம் தெய்வப் புலவரின் குறட்பாக்கள் அவர் மனதில் அசாரி போல் எந்நேரமும் ஒலித்துக் கொண்டே இருந்தன.*

**அக்குறட்பாக்கள் எவை தெரியுமா ?**

அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு. - 343

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். - 341

வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல். - 363

*திருஞானானந்தா சுவாமிகளுக்கு அருட்பாக்களாக விளங்கிய அக்குறட்பாக்களின் பொருள் என்ன தெரியுமா?*

*ஐம்பொறிகளுக்கும் உரிய ஐந்து புலன்களின் ஆசையையும் வெல்லுதல் வேண்டும். அவற்றிற்கு வேண்டியவற்றை எல்லாம் ஒருங்கே விட்டு விட்டால் ஞானத்தை அடைவதற்கு தடையே இல்லை.*

*ஒருவன் எந்தப் பொருளிலிருந்து பற்று நீங்கியவனாக இருக்கின்றானோ அந்தந்தப் பொருளால் அவன் துன்பம் அடைவதில்லை.*

*அவா அற்ற நிலைமை போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகில் இல்லை. வேறு எங்கும் அதற்கு நிகரான ஒன்றும் இல்லை.*

# 40

# கோபம் அழித்த சத்குரு

தூத்துக்குடியில் வணிக நிறுவனத்தில் தங்கி வணிகத்தில் கவனமும் ஆன்மீகத்தில் பெருங் கவனமும் திருஞானானந்தா சுவாமிகள் கொண்டிருந்த காலம்.

வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்டு தனிமையைத் தேடு வதும் தவத்தில் மூழ்குவதும் சுவாமிகளுக்குப் பிடித்துப் போயிருந்தது. இமையா நாட்டம் எனப்படும் உயர் நிலையை அக்கால கட்டத்தில் அடைந்திருந்தார், சுவாமிகள்.

ஒரு நாள் ஒரு கோபம். கோபம் தவிர்க்க வேண்டியது, தவநிலையின் முதல் பாடம். சுவாமிகளால் கோபத்தை ஏனோ அடக்க முடியவில்லை.

கோபத்தோடு தவத்தில் அமர்ந்தார். அடுத்த நொடிகளிலேயே அவர் உடல் நிலையில் மாறுதல் ஏற்பட்டது.

தலையில் டன் கணக்கில் பாரம் ஏறின மாதிரி, தாங்க முடியாத அவதிக்குள்ளானார். தொடர்ந்து மூன்று நாட்கள், தலையைக் கூடத் தூக்க முடியாத பாரம்.

மூன்றாம் நாள் இரவு மிகுந்த மனத் துயரோடு படுத்துக் கொண்டு தவம் செய்து கொண்டிருந்தார். நள்ளிரவு இருக்கும். யாரோ காலில் தட்ட கண் விழித்துப் பார்த்தார், எதிரே ஏகாந்தமாய் சங்கர பரமஹம்ச சுவாமிகள். என்னப்பா... தலை வலிக்குதா. எச்சரிக்கையா இரு. கோபம் ஒரு சத்துரு'. சற்குரு ஆறுதலாய் பேசினார்.

குரு பேச்சில் பிரமித்துக் கொண்டிருக்கும் போதே சுவாமிகளின் தலை பாரம் மின்னல் போல் மறைந்தது.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் தட்டிவிட்டுச் சென்றது காலை மட்டுமல்ல, அவரது கோப உணர்வை என்பது திருஞானானந்தா சுவாமிகளுக்குப் புரிய ஆரம்பித்தது. தனது பக்தர்கள் அனைவரையும் 'லே' என அழைக்கும் சங்கர பரமஹம்ச சுவாமிகள், தன்னை 'யப்பா' என அழைத்தது திருஞானானந்தா சுவாமிகளுக்கு ஒருவிதப் பெருமிதத்தை உண்டு பண்ணியது.

வீட்டைப் பூட்டிவிட்டுத் தானே படுத்தோம். உள்ளே எப்படி சங்கர சுவாமிகள் வந்தார் என யோசித்தபடியே திருஞானானந்தா சுவாமிகள் வெளியே வந்தார்.

ஒளி பொருந்திய சந்திரனாய்த் தெரிந்த பரமஹம்சர் பெரு வெளியில் விண்வெளியில் கரைந்து போனார். வானத்தைப் பார்த்துக் கை குவித்தார், திருஞானானந்தா சுவாமிகள்.

வானில் நிலவு இல்லை. ஆம். அன்று அமாவாசை.நிலவு தான் சீடனைத் தேடிப் பூமிக்கு வந்து விட்டதே!

# 41

# அமிர்த தாரணை

திருஞானானந்தா சுவாமிகள், நாளுக்கு நாள் அதிகப்படுத்திய ஆன்மீக ஈடுபாடும், அதீத தவமும் அவரை ஓர் உயர் நிலைக்கு இட்டுச் செல்ல ஆரம்பித்தன.

'அமிர்த தாரணை' என்பது ஓர் உயர்ந்த சித்த நிலை. அந்நிலையை எய்தியவர்களுக்கு, தியானத்தின் போது அண்ணாக்கில் அமிர்தம் தொடர்ந்து ஊறிக் கொண்டிருக்கும். அமிர்தம் என்றால் அது தான் அமிர்தம். தித்திக்கும் தேன் தோற்கும். ஒரு துளி அமிர்தம் கிடைத்தாலே அந்த நாள் முழுதும் பசி, தூக்கம், சோர்வு இருக்காது. பதிலாக இன்பம் மிகும். ஆனந்த பரவசம் பெருகும்.

திருஞானானந்தா சுவாமிகளுக்கோ நாள் முழுதும் அமிர்தம் ஊற ஊற ஆனந்த மயமாகத் தவ நிலையிலேயே இருந்தார்.

அமிர்த தாரணையில் இன்னொரு ரசசியம் உண்டு. தொடர்ந்து அமிர்தம் சுரக்கப் பெற்றவர்களுக்குக் கூடிய விரைவில் இறைலயமாகும் சூழல் ஏற்படும். சுவாமிகளுடன் இருப்பவர்கள் விரைவில் சுவாமி இவ்வுலகை விட்டு விடை பெறப் போகிறார், எனப் பேச ஆரம்பித்தனர். நெருக்கமானவர்கள் மத்தியில் அது பீதியைக் கிளப்ப ஆரம்பித்தது.

திருஞானானந்தா சுவாமிகள் இது குறித்து குழப்பம் கொண்டார். போதாக் குறைக்கு, அமிர்த தாரணை சரியானவுடன் வா எனச் சொல்லி ஆன்மிக சகாக்கள் அவரை ஒதுக்க ஆரம்பித்தனர்.

நாளுக்கு நாள் குழப்பம் அதிகரித்தது. ஒருநாள் குழப்பம் மிகுந்த நிலையில் குருநாதர் ஆலயம் நோக்கி திருச்செந்தூர் சென்றார்.

அவர் திருச்செந்தூர் போய்ச் சேர்ந்த போது, இருள் கவ்வ ஆரம்பித்திருந்தது.

ஆலயத்திலோ அக்கம் பக்கத்திலோ யாருமில்லை. எதிரே 'ஹோ' என்ற சத்தத்தோடு கடல் அலைகள் முட்டி மோதித் திரும்பிக் கொண்டிருந்தன.

கடல் அலைகளின் சப்தத்தைப் போலவே திருஞானானந்தா சுவாமிகளின் மனத்திலும் ஒரு இனம் புரிய முடியாத சத்தம் தொடர்ந்து ஒலித்த வண்ணம் இருந்தது. அது, குழப்பங்களின் கூட்டுக் குரல்

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கோயிலுக்கு பக்கத்தில் ஆவுடையப்ப சுவாமிகளின் ஒடுக்கமான கோயில் உள்ளது. அங்கு தான் சங்கர பரமஹம்ச சுவாமிகள் ஆலயத்தின் அப்போதைய பூசகர் கருப்பன் இரவில் தங்குவது வழக்கம். அங்கே சென்றார் திருஞானானந்தா சுவாமிகள்.

பூசகர் கருப்பன், திருஞானானந்தா சுவாமிகளைக் கண்டு அவரது கவலை படர்ந்த முகத்தைப் பார்த்து கோயிலுக்கு உள்ளே சென்று படுத்துக் கொள்ளுங்கள் என்றார். சங்கர பரமஹம்ச சுவாமிகளின் ஆலயத்திற்குச் சென்ற சுவாமிகள், நேரே குருநாதரை கண்ணீர் மல்க தரிசித்தார். எவ்வளவு நேரம் கண்ணீர் விட்டாரோ, அவர் அறியவில்லை. இரவு நெடு நேரம் ஆகியிருந்ததது.

சன்னதியின் கதவைச் சாத்தி உள் தாழ்ப்பாள் போட்டு விட்டு உள்ளேயே படுத்துக் கொண்டார். எங்கோ தூரத்தில் ஒரு நாயின் குரல், அழுகுரல் போல் ஒலித்துக் கொண்டிருந்தது.

சுவாமிகளுக்குத் தூக்கம் வரவில்லை. கண் கொட்டாமல் குருநாதரையே பார்த்துக் கொண்டிருந்தார். கண்களில் கடல் அலை போல் கண்ணீர்.

மௌனமாய், தனது பிரார்த்தனையை, அன்பு மிரட்டலாய் குரு முன் வைத்தார்.

சுவாமி தயவு கூர்ந்து இன்றைக்குள்ள இங்க வந்து... இந்த அமிர்த தாரணையை சரி செய்து தராவிட்டால் வங்க கடலில் என் உடல் மிதக்கும்... அப்பொழுது நடுநிசி நேரம் ஆகிவிட்டது.

அன்பெனும் பிடிக்குள் அகப்பட்டார், சங்கர பரமஹம்ச சுவாமிகள். அக்கணமே பூட்டிய சன்னதிக்குள் திஞானானந்தா சுவாமிகளுக்கு திருக்காட்சி அளித்தார், சங்கர பரமஹம்சர்.

''யப்பா... எப்ப வந்த... என்ன விஷயம்''?

எத்தனையோ கேள்விகளுடன், குழப்பங்களுடன் வந்திருந்த திருஞானானந்தா சுவாமிக்கு எதையும் கேட்கத் தோன்றவில்லை. எல்லாமே சங்கர பரமஹம்ச சுவாமியைப் பார்த்த மாத்திரத்தில் மறந்து போயிருந்தது.

''ம்... சுவாமிகளை பார்க்க நினைச்சேன்... வந்துட்டேன்...''

மெலிதாக பதில் வந்தது.

''நீ ஒண்ணுமே எடுத்துக்கலேயே... கொஞ்சமா உணவு எடுத்துக்கோ'', கனிவான குரலில் குழந்தையின் பசி பொறுக்காத தாய்மை வெளிப்பட்டது.

''இல்ல... எனக்குப் பசியில்ல... பசித்தால் எடுத்துக்க பழம் வைத்திருக்கிறேன்''

''இல்லப்பா... கொஞ்சோல எடுத்துக்கோ, மீண்டும் வலியுறுத்தினார், சுவாமிகள்.

தாயினும் சால பரிந்தக் குரல்!

''இல்ல... வேணாம்.''

''சரி... படுத்துக்கோ!

என்று சொல்லியபடியே மறைந்து போனார் சங்கர பரமஹம்ச சுவாமிகள். அதைக் கேட்டு அப்படியே தூங்கிப் போனார் திருஞானானந்தா சுவாமிகள்.

மறுநாள் காலை

உடல் முழுவதும் ஆனந்த பரவசம், உள்ளத்தின் பாரமும் அறவே இல்லாதவராய் புதிதாய் பிறந்தவர் போல் திருஞானானந்தா சுவாமிகள் எழுந்தார்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளை வணங்கினார்.

ஊர் திரும்ப தீர்மானித்து கோயிலை விட்டு வாசல் தாண்டி வெளியே வந்தார்.

அப்போது ஒன்றை உணர முடிந்தது.

எப்போதும் சுரந்து கொண்டிருந்த அரிய தவ ஆற்றலின் பயனான அமிர்த தாரணை நின்றிருந்தது.

திருஞானானந்தா சுவாமிகளின் தவ வாழ்க்கையின் அடுத்த உயர்ந்த கட்டம் ஆரம்பிப்பதற்கான அறிகுறியே.. அது.

# 42

# போகர் பெருமானும் சங்கரர் பெருமானும்

அடிக்கடி திருச்செந்தூர் செல்வதும், கடற்கரையில் சங்கர பரமஹம்ச சுவாமிகள் இறை நிலை அடைந்த திருக்கோயிலில் அதிக நேரம் செலவழிப்பதும் திருஞானானந்தா சுவாமிகளின் வழக்கமாகிப் போனது.

பல சமயம் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திருக்கோயிலிலேயே இரவு முழுதும் தங்கி விடுவதும் உண்டு.

அன்று மக நட்சத்திரம். மிகுந்த ஆர்வத்தோடு திருஞானானந்தா சுவாமிகள், பரமஹம்சர் திருக்கோயிலுக்கு வந்தார். இரவு நெருங்கிக் கொண்டிருந்ததால், பூசகர் கோவிலைப் பூட்டி விட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்.

சுவாமிகளைப் பார்த்த மாத்திரத்தில் பூசகர், 'கோயிலைப் பூட்டியாச்சு, கோயிலுக்குள் படுக்க முடியாது இங்க வெட்ட வெளியிலும் படுக்காதே. செந்தில்வேலன் கோவில் பக்கம் போய் படுத்திருந்து விட்டுப் காலையில வா, என விரட்டினார்.

கோயிலில் இரவு முழுதும் இருந்து, அங்கேயே படுத்துறங் கலாம் என ஆசை ஆசையாக வந்த சுவாமிகளுக்கு ஏமாற்றம். சங்கர சுவாமிகளின் மடியில், காலடியில் துயில் கொள்ள வந்தவருக்கு ஏமாற்றத்தைத் தாங்க இயலவில்லை.

பூசகரிடம் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார். பூசகர் மசியவில்லை. கோயிலின் வெளிப்புறத்தில் கூடத் தங்கவிட வில்லை சுவாமிகள் செந்திலாண்டவன் சன்னதிக்கே போக வேண்டியதாய் ஆயிற்று.

கந்த சஷ்டி மண்டபத்திற்கு வந்து படுத்தார். தன்னந் தனியாளாகப் படுத்திருந்தார். தவ நிலையில் ஆழ்ந்து இருந்தார். அந்த நிலையில், தலை மாட்டில் இரண்டு பேர் உட்கார்ந்திருந்ததை உணர்ந்தார். உற்றுப் பார்த்தார். ஒருவர், தெரிந்த முகம். சங்கர பரமஹம்ச சுவாமிகள்.

இன்னொருவர் யாராயிருக்கும் ?

யாரேனும் சக்தி வாய்ந்த பெருமானாயிருக்கும். இருவரும் மெலிதாகப் பேசிக் கொண்டிருந்தனர். சுவாமிகளின் தூக்கம் தங்கள் பேச்சுச் சத்தத்தால் தடைபட்டு விடக் கூடாது என்பதில் அவர்கள் கவனமாக இருந்தனர். 'நல்லா தூங்கட்டும் யாருமில்லாத இந்த இடத்தில் நாம ரெண்டு பேரும் நம்ம பிள்ளைக்கு காவலா இருப்போம்', என்றார் அந்த சுவாமி.

'சரிங்க போகர் பெருமானே!' சங்கர பரமஹம்சர் தலை அசைத்தது திருஞானானந்தா சுவாமிகளுக்கு அந்த இருட்டிலும் நன்கு தெரிந்தது. தனக்கு காவலாயிருப்பவர்கள் தனது குருநாதர் சங்கர பரமஹம்ச பெருமானும், ஈடிணை சொல்ல முடியாத குலகுரு போகர் பெருமானும் என்பதை நம்ப முடியாமல், தனது பாக்கியத்தை எண்ணி வியந்தபடியே தூங்கிப் போனார், திருஞானானந்தா சுவாமிகள்.

மறுநாள் காலை சங்கர பரமஹம்ச சுவாமிகளின் கோயிலுக்குப் போனார். உள்ளே தீபாராதனை நடந்து கொண்டிருந்தது. மூலஸ்தானத்தில் காட்டிய தீப ஒளி பெருகி பிரார்த்தனை செய்ய கை குவித்த சுவாமிகளின் நெற்றிக்கும் உச்சிக்குமாக வியாபித்தது. அந்த வெம்மையை சுவாமிகளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

ஏதோ ஓர் அபூர்வ சக்தி ஊடுருவுவதை உணர்ந்தார், சுவாமிகள். அச்சக்தி ஒரு தெய்வீக சக்தி என்பதைப் பூரணமாக உணர்ந்த தருணத்தில் ஒரு 'வாக்கு' சுவாமிகளுக்கு மட்டும் கேட்டது. அது குருநாதர் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் குரல் என்பதும் புரிந்தது.

'ஏம்பா நான் தான் உனக்குள்ளேயே இருக்கேனே. எதுக்காக என்னை வெளியே தேடி நீ அலையறே. எல்லாம் சரியாகவே



நடக்கும் கவலைப்படாதே' சங்கர பரமஹம்ச சுவாமிகள் இப்படிச் சொல்லவும் பூசகர் எழுப்பிய மணியோசை 'ஆம் ஆம்' என்பது போல ஒலித்தது.

சங்கர பரமஹம்சரின் அருட் துணையோடு, தான் அடுத்த நிலைக்குச் செல்வதை திருஞானானந்தா சுவாமிகள் உணர்ந்தார், தெளிவுற்றார்.

சென்ற அமவைாசையின் போது, பூசகர் கருப்பன் கோயிலுக் குள் படுத்துக் கொள் என அனுமதி அளித்ததால், சங்கர பரமஹம்ச சுவாமிகளை நேரில் தரிசனம் காணும் வாய்ப்பு கிடைத்தது. அதே பூசகர் இந்த மக நட்சத்திர நாளில் கோயிலில் படுக்க விடாமல் துரத்தி விட்டதால் குல குரு போகர் பிரான், ஞானகுரு சங்கர பரமஹம்ச சுவாமிகளின் தரிசனம் கிடைத்திருக்கிறது. இதற்கு காரணம், சங்கர பரமஹம்ச சுவாமிகள் அவர் தான் பூசகரை அப்படி பேசச் செய்து நற்பயன்களை தந்திருக்கிறார் என்பதை சுவாமிகள் உணர்ந்தார்.

இம் மாதிரி குருமார்கள் சிலசமயம் சிறிது கடினமாக நடத்தி இறுதியில் நல்லதை நிகழ்த்தி வைப்பார்கள் என்றவாறெல்லாம் எண்ணியவாறு தூத்துக்குடிக்குப் பயணமானார், திருஞானானந்தா சுவாமிகள்.

வெளியே, தூரத்தில் ஒரு வானொலியில் ‘இருக்கும் இடத்தைவிட்டு இல்லாத இடம் தேடி எங்கெங்கோ அலைகின்றாய் ஞானத் தங்கமே’, பாடல் ஒலித்துக் கொண்டிருந்தது.

அந்த ஞானப் பாடலைத் தனக்காக சங்கர பரமஹம்ச சுவாமிகளே ஒலி பரப்ப வைத்ததாக நினைத்தார் திருஞானானந்தா சுவாமிகள். அவரை அறியாமல் புன்னகை பூத்தது. கண்களில் அந்த நகை பிரதிபலித்தது.

# 43

# ஜோதியாய்......
# அருட் பெருஞ்ஜோதியாய் !



ஒரு நாள் தூத்துக்குடியில் மொட்டை மாடியில் படுத்துக் கொண்டிருந்தார்.

கண்களை மூடிக் கனவும் தூக்கமும் இல்லாத அறி துயிலில் இருந்தார் திருஞானானந்தா சுவாமிகள். நட்ட நடு நிசி.

*சித்தர்களும், மகான்களும் சஞ்சாரம் செய்யும் தெய்வீக நேரம். வானில் ஓர் ஒளி தோன்றியது.*

*அது பேரொளியாய், பெருஞ்ஜோதியாய் விஸ்வரூபமெடுத்தது. அந்த அருட்பெருஞ்ஜோதி கீழிறங்கி வந்தது.*

*அப்பேரொளியைப் பார்த்த மாத்திரத்தில் திருஞானானந்தா சுவாமிகள் ஒளியை நோக்கி இரு கரம் குவித்துக் கும்பிட்டார். அவ்வொளி திருஞானானந்தா சுவாமிகளின் தலை உச்சியில் ஊடுருவி நிலை பெற்றது. அதுவரை ஒளியைக் கரம் குவித்துக் கும்பிட்ட சுவாமிகளின் கரங்கள் ஒளியின் பாதையில் பயணித்து விரைவில் தன்னையே வணங்கி நின்றது. இவை யாவும் சில நொடிகளில் நடந்தேறியது.*

*அந்த அருள் ஜோதி சாட்சாத் சங்கர பரமஹம்ச சுவாமிகளே என்பதை திருஞானானந்தா சுவாமிகள் உணர்ந்தார். பிறவிப் பயன் பெற்றதாகப் புளகாங்கிதம் கொண்டார்.*

# 44

# முகத்தில் முகம் பார்க்கலாம்

*ஒருமுறை இரவு 8.30 மணி வாக்கில் திருஞானானந்தா சுவாமிகள் திருச்செந்தூர் சங்கர பரமஹம்ச சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றார். அவர் போன பாதை ஒரு இடுகாடு.*

*அவ்வழியே போகும் போது சுவாமிகளுக்கு ஒரு கேள்வி எழுந்தது.*

*இப்படி இருட்டில் இடுகாட்டுப் பகுதியில் சிரமப்பட்டுப் போயெல்லாம் சுவாமிகளைத் தரிசிக்கிறோமே. உண்மையில் சுவாமிகள் தன்னை எந்த நிலையில் வைத்திருக்கிறார் என்று அறிய ஆசைப்பட்டார். அப்படி யோசித்த படியே, கோயிலுக்குச் சென்று சுவாமிகளை தரிசித்து விட்டு, தியானம் மேற்கொண்டார். பின் திருசெந்தூர் கோவில் கடற்கரைப் பாதை வழியாகத் திரும்பினார்.*

*திரும்பும் வழியில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அது, கோயிலுக்குச் செல்லும் போது அவர் மனதில் எழும்பிய கேள்விக்குப் பதிலைத் தந்தது.*

*திருஞானானந்தா சுவாமிகள் மட்டும் நடந்து கொண்டிருந்தார்.*

*அப்போது ஒரு பெரியவரும் 10 வயதுக் குழந்தை ஒன்றும் தூரத்தில் தெரிந்தார்கள். அவர்கள் சுவாமிகளுக்கு எதிர்புறமிருந்து வந்து கொண்டிருந்தார்கள்.*

*அப்பெரியவர் கையைப் பாலகன் பிடித்துக் கொண்டு வருகிறானா? அல்லது பாலகனின் கையைப் பிடித்துக்*



கொண்டு பெரியவர் வந்து கொண்டிருக்கிறாரா என்று வித்தியாசம் காண முடியாதபடி அவர்கள் கைகோர்த்து வருவதை ரசித்தபடி சுவாமிகள் நடந்து கொண்டிருந்தார்.

அவர்கள் இருவரும் சுவாமிகளை ஓரிடத்தில் கடந்தார்கள். கடக்கும் சமயத்தில் சுவாமிகள் அந்தப் பாலகனை யதேச்சையாக நோக்கினார். இருவர் விழிகளும் நேர் கோட்டில் ஒரு நொடி சந்தித்தன. அந்தத் தருணத்தில் அப்படியே அசந்து போனார் திருஞானானந்தா சுவாமிகள். அப்படியொரு அதிசயக் காட்சி !

அச்சிறுவனை முகத்தோடு முகமாகப் பார்க்கும் போது அச்சிறுவனின் முகம் அப்படியே திருஞானானந்தா சுவாமிகளைப் போலவே இருந்தது. கண்ணாடியில் தன்னைப் பார்ப்பது போன்றே பாலகனின் முகம் தெரிய, ஒரு கணம் தன்னை மறந்து, ஐந்தாறு அடி சென்று விட்டு, திரும்பிப் பார்த்தார்.

அங்கே அந்த பெரியவரும், பாலகனும் இல்லை.

கணப் பொழுதில் மறைந்து போயிருந்தார்கள்.

முகத்தில் முகமாகக் காட்சியுற வைத்த அதிசயம் புரிந்தது, சங்கர பரமஹம்சரின் பேராற்றல் பெரும் அற்புதம்.

'நீ என் பாலகன்' என்பது தான் இந்நிகழ்வு மூலம் சங்கர பரமஹம்ச சுவாமிகள் சொன்ன விடை.

# 45

# பிரதமம் தந்த பெருமகனார்

சங்கர பரமஹம்ச சுவாமிகள் இறைலயம் அடைந்த திருக் கோயிலைச் சுற்றி குப்பை கூளங்களும் முட்செடிகளும் சேர்ந்து அசிங்கமாக இருந்தது. கோவிலின் பின்புறம் மணல் திட்டுகள் குவிந்திருந்தன.

ஒருமுறை, திருஞானானந்தா சுவாமிகள் கோயிலுக்கு வந்த போது, குருநாதர் சங்கர பரமஹம்ச சுவாமிகளின் குரல் அவருள் ஒலித்தது.

நீ முன்னாடி நின்று, இதை எல்லாம் சரி செஞ்சிட்டு போப்பா' அன்பாய் சொன்னார் சங்கர சுவாமிகள்.

தானே களத்தில் இறங்கினார், திருஞானானந்தா சுவாமிகள். மணல் திட்டைக் கரைப்பது, மணலை எடுத்துக் கொட்டிச் சமமாக்குவது, முட்செடிகளை வெட்டி அப்புறப்படுத்துவது, குப்பைகளை வேறிடத்திற்குக் கொண்டு சென்று கொட்டுவது என சகல வேலைகளையும் பார்த்துக் கொண்டிருந்தார்.

நல்ல வெயில் நேரம். அனல் பறக்கும் வெயில். ஆனால் என்ன ஆச்சரியம்? வேலை பார்த்துக் கொண்டிருந்த இடத் தில் மட்டும் வெம்மையின் தாக்கம் இல்லை. காலடி வெது வெதுப்பின்றி மெல்லிய குளிர்ச்சியாய் இதமாய் இருந்தது.

அப்போது தூக்குச் சட்டியைத் தூக்கிக் கொண்டு, ஒரு மெலிதான உருவம் திருஞானானந்தா சுவாமிகள் அருகில் நெருங்கி வந்தது. 'யப்பா... களைப்பா இருக்கா? இந்தா இதைக் குடி. உனக்குத் தான் கொண்டு வந்தேன் எனத் தூக்குச் சட்டியை சுவாமிகளிடம் தந்தது.




வந்தவரை அப்போது தான் பார்த்தார், சுவாமிகள். பரிச்சயமான குரலாயிருந்ததால் உற்று முகத்தைப் பார்த்தார். அந்த உருவத்தின் முகத்திலிருந்த பொலிவு சுவாமிகளை ஈர்த்தது.

‘இல்லே, இருக்கட்டும்’ என வாங்க மறுத்தார். சுவாமிகள் ‘இல்லே உனக்குத் தானே கொண்டு வந்தேன் குடி’ என தாயினும் மேலாகப் பரிவான குரலில் சொன்னார்.

தயங்கிய படியே சட்டியை வாங்கிய சுவாமிகள் ‘இருங்க குடிச்சிட்டு சட்டியைத் தந்துடுறேன்’ என்று சொல்ல, ‘நான் இங்க தானே இருக்கேன். குடிச்சிட்டு வைச்சிடு. பிறகு வந்து வாங்கிக்கறேன்’ என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

‘திருஞானானந்தா சுவாமிகள் அந்தத் தூக்கு சட்டியிலிருந்த பிரதமத்தை (பாயாசம்) விரும்பிக் குடித்தார். அப்படியொரு சுவையான பாயாசத்தை அதற்கு முன்பு அவர் குடித்ததில்லை. அப்படியொரு அற்புத ருசி. அமிர்த தாரணையின் சுவையை விட ருசி மிகுந்ததாக இருந்தது.

மாலை வேலையை முடித்துவிட்டுக் கிளம்பும் போது, தூக்கு சட்டி வைத்த இடத்திலேயே இருந்ததைக் கண்டு பக்கத்தில் இருந்தவர்களிடம் விசாரித்தார் திருஞானானந்தா சுவாமிகள்.

வந்தவர் பற்றிய அடையாளம் சொல்லி விசாரித்தார். அப்படி ஒருவர் அந்தப் பகுதியிலேயே இல்லை என்று பலரும் சொன்னார்கள். அதன் பிறகு, பல மாதங்கள் ஆகியும், தூக்குச் சட்டியை வாங்கிச் செல்ல அவர் வரவே இல்லை.

அப்படியெனில் அன்று வந்தவர் யாராயிருக்கும்? தனக்காக வேலை பார்த்துக் கொண்டிருந்தவருக்குக் களைப்பை நீக்க, பிரதமம் தந்தவர் யாராயிருக்கும்? வேகாத வெயிலில் தனது குழந்தை வேலை பார்க்கிறதே என எண்ணி ஓடி வந்த தாய் யாராயிருக்க முடியும்? அவர் கருணை வள்ளல், சங்கர பரமஹம்சர் அன்றி வேறு யாராய் இருக்க முடியும்?

# 46

# அந்தமானில் அருட்காட்சிகள்

---

*திருஞானானந்தா சுவாமிகள் வணிகம் பொருட்டு அந்தமான் சென்று அங்கேயே ஒன்றரை ஆண்டுகளுக்கு மேலாகத் தங்கி விட்டார்.*

*அவருக்கு அடிக்கடி சங்கர பரமஹம்ச சுவாமிகள் நினைவு வரும். 'என்னை இப்படி தூரத்தில் கொண்டு வந்து வச்சுட்டீங்களே' எனக் கண்ணீர் மல்க அழுது கொண்டே இருப்பார். நினைவிலும், கனவிலும், தவத்திலும் சங்கர சுவாமிகளே ஆக்கிரமித்து இருந்தார்.*

*ஒரு நாள் அந்தமானில் உள்ள கார் நிக்கோபார் தீவில் கடற்கரை ஓரத்தில் அமைந்துள்ள அரசாங்க விடுதியில் உள்ள பால்கனியில் அமர்ந்து கொண்டு கடலை வெறித்தபடி பார்த்த வண்ணம் இருந்தார்.*

*உள்ளமும் உதடும் சங்கர சுவாமிகளின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டிருந்தன. கண்களிலோ நீரோடை போலக் கண்ணீர்.*

*திடீரென்று திருஞானானந்தா சுவாமிகள் கண் முன் ஓர் அற்புதக் காட்சி! காட்சியின் நாயகன், சங்கர பரமஹம்ச சுவாமிகளே! சாட்சாத் கடலில் இருந்து விஸ்வரூபமாய் உதித்து வந்து காட்சி தந்த சங்கர பரமஹம்ச சுவாமிகள், 'யப்பா தூரத்தில் எல்லாம் நீ இல்லை. உன்னோட உன் பக்கத்திலேயே நான் இருக்கேன் பார்'... என இதமாய்ச் சொன்னார்.*

தலை பிடித்து முகர்ந்து முத்தமிட்டார், சங்கர பரமஹம்ச சுவாமிகள் சில நொடிகளில் மறைந்தும் போனார்.

அதுமுதல் வெகு தூரத்தில் அந்தமான் தீவில் தனித்திருக்கிறோம் என்ற கவலை, திருஞானானந்தா சுவாமிகளுக்கு எழவில்லை. சங்கர சுவாமிகளை மனமுருகி நினைப்பார். அவர் வர, இவர் புத்துணர்வு பெறுவார்.

இவ்விதம், அந்தமானில் போர்ட்பிளேயரில் ஒருமுறை காட்சி தந்து அருள்பாலித்தார்.

அதனைத் தொடர்ந்து, அருட்சக்தி நிரம்பக் கொண்டவராக, திருச்செந்தூரில் சங்கர சுவாமிகளின் திருக்கோயிலில் இருக்கும் போது கிடைக்கும் பூரணப் புத்துணர்ச்சியோடு அந்தமானை வலம் வந்தார் திருஞனானந்தா சுவாமிகள்.

# 47

# குருவாய், தந்தையாய், தாயாய், சேயாய்

ஞான குருக்கள் தங்கள் சீடர்களுக்குக் குருவாய், தந்தையாய், தாயாய் தெய்வமாய் அருகிருந்து அருள் தருவது வழக்கம்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள், ஒருமுறை திருஞானானந்தா சுவாமிகளுக்குச் சேயாய் காட்சி தந்து அருள் மழை பொழிந்தது ஓர் அபூர்வ நிகழ்வு. அந்த அதிசயம் அந்தமானில் இருக்கும் போது நிகழ்ந்தது.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் நினைவுகளை அசை போட்டபடி தியானத்தில் அமர்ந்திருந்தார், திருஞானானந்தா சுவாமிகள். அப்பொழுது அங்கு பிரசன்னமான சங்கர சுவாமிகள், சுவாமிகளின் தலை மீது கை வைத்து ஆசிர் வதித்தார். உடனே பசி சோர்வு இல்லாமல் போன பேரானந்த பரவச நிலை, பிரபஞ்சம் முழுவதும் தானாய் நிறைந்து நின்ற பரிபூரணமான அற்புத அருள் ஆனந்த நிலை.

திடீரெனக் கைகளில் யாரோ எதையோ வைப்பது மாதிரி உணர்ந்து கண் விழித்தவருக்கு அதிர்ச்சி. அவர் கைகளில் ஒரு பச்சிளம் குழந்தை பொக்கை வாய் பூத்தபடி திருஞானானந்தா சுவாமிகளையே பார்த்துக் கொண்டிருந்தது.

குழந்தையை சுவாமிகள் வியப்போடு கவனித்த போது, இன்னொரு இன்ப அதிர்ச்சி புரிய வந்தது.

சங்கர சுவாமிகள் தான் குழந்தையாக மாறி சுவாமிகளின் கைகளில் தவழ்ந்து கொண்டிருந்தார்.

குருவாய் வழி காட்டியவர். தந்தையாய் நெறிப்படுத்தியவர். தாயாய் அன்பு காட்டியவர். இப்போது சேயாய்... அப்படியொரு ஒளி பொருந்திய கண்களை திருஞானானந்தா சுவாமிகள் தரிசித்ததே இல்லை.

குழந்தை சிரித்தது. பிஞ்சுக் கரங்களால் சுவாமிகளை ஸ்பரிசித்தது. குட்டிக் கால்களால் எட்டி உதைத்துக் குதூகலித்தது.

குருவைக் குழந்தையாய்க் பார்த்த சுவாமிகளின் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர்! ‘இப்படியே இருந்திடறேன்’ என்று அழுதபடி சொன்னார்.

‘இதுதான் நிறைவான நிலை’.

‘இன்னும் நீ நிறைய வேலைகள் செய்ய வேண்டியிருக்கு. நீ கீழிறங்கி வா’ என்று சொல்லியபடி குழந்தையாயிருந்த சங்கர பரமஹம்ச சுவாமிகள் கணப் பொழுதில் மறைந்து போனார்.

ஞான குருவே குழந்தையாய்த் தவழும் மடிக்கும், கைகளுக்கும் சொந்தக்காரர் பெரும்பேறு பெற்றவர்கள் என்கின்றன சித்தர் இலக்கியங்கள்.

திருஞானானந்தா சுவாமிகள், சங்கர பரமஹம்ச சுவாமிகளின் பேரன்புக்குப் பாத்தியமானவர் என்பதற்கு இந்த நிகழ்வு ஓர் ஆன்மிகச் சான்று.

# 48

## சுவாமிகள் சூட்டிய தவப் பெயர்

இமயமலையில் ஜோதி பர்வதத்தில் வள்ளல் பெருமானுக்குக் கோயில் எழுப்பியவர் திருஞனாானந்தா சுவாமிகள். தினமும் வள்ளல் பெருமான், குரு சங்கர பரமஹம்சப் பெருமான் திருவள்ளுவப் பெருமான், ஆகிய மூவருக்கும் வழிபாடு செய்வது சுவாமிகளின் வழக்கம்.

அதற்கெனவே மூன்று பெருமான்களும் உள்ள மூவர் திருவுருவப் படத்தை உருவாக்கி, வழிபாட்டுக்கு வைத்து விடுவார் சுவாமிகள்.

இமயமலையில் உருவாக்கிய வள்ளல் பெருமான் கோயிலிலும் மூவர் படத்தை வைக்க விரும்பினார். தமிழகத்திலிருந்து படம் அனுப்பி வைக்க ஏற்பாடும் செய்திருந்தார்.

மூன்று மாதத்திற்கு முன்னரே அனுப்பி வைத்த மூவர் திருவுருவப் படம் வரவில்லை. சாதாரணமாக ஒரு வாரத்தில் வர வேண்டிய படம் மூன்று மாதங்கள் ஆகியும் வரவேயில்லை.

இதோ விழா தொடங்கப் போகிறது. பெருமான்கள் இல்லாது விழாவா? திருஞானானந்தா சுவாமிகள் துயரத்துக்கு உள்ளானார். நிலை கொள்ளாமல் தவித்தார்.

12000 அடி உயரத்தில் விழா. எப்படி வரும் கூரியர் ?

யாருமே எதிர்பார்க்காத அந்த நேரத்தில், ஒருவர் ஒரு பெரிய பார்சலை ஏந்திய படி ஓடி வந்தார். கூட்டத்தில் யாரிடம்

*தருவது என்று அவருக்குத் தெரியவில்லை. விசாரித்து, தேடிப் பிடித்து சுவாமிகளின் கரங்களில் அப் பார்சல் ஒப்படைக்கப்பட்டது. பிரித்தால் உள்ளே மூவர் திருவுருவப் படம். சரியான நேரத்தில்,*

*ஜம் ஜம்மென்று கோயிலில் அமர்ந்தார்கள் - மூன்று பெருமான்களும்!*

*தமிழ் தெரியாத வட நாட்டவர் உள்பட கூடியிருந்த அனைவரும் 'சங்கர சங்கர சம்போ' 'அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி' 'அன்பே சிவம்' என உரக்க ஓதியபடி கோயில் விழா களை கட்டியது.*

*விழா நடந்த அன்று இரவு, திருஞானானந்தா சுவாமிகள், அருட் பெருஞ்ஜோதி கோயில் உள்ளே அமைதியாய், தனியாக அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்தார்.*

*சற்று முன் புகைப்படமாக வருகை புரிந்திருந்த சங்கர பரமஹம்ச சுவாமிகள் அப்போது தியானத்தில் நேரடியாகக் காட்சி தந்தார்.*

*ஞானமென்றால் அறிவு என்று அர்த்தம். கலை அறிவு, இயந்திர அறிவு என்று பல அறிவுகள் இருக்குது. நீ அருள் அறிவில் ஆனந்தத்தைப் பெற்றவன். இதனாலே உனக்கு இன்னையிலிருந்து திருஞானானந்தா என்று பெயர் வைக்கிறேன். அப்பெயரே நிலைத்திருக்கும், நெகிழ்ச்சியோடு திருஞானானந்தா சுவாமிக்குப் பெயர் சூட்டினார், சங்கர பரமஹம்ச சுவாமிகள்.*

*அந்தப் பெயரே, அதுமுதல் சுவாமிகளின் பெயரானது.*

*சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அருளோடு பெயர் சூட்டப் பெற்ற திருஞானானந்தா சுவாமிகளின் அருட் பணிகள் சங்கர பரமஹம்ச சுவாமிகள் வகுத்த பாதையில் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.*

# 49

# சங்கரர் பரமஹம்ச சுவாமிகள் பாடி அருளிய திருப் பாடல்

*ச*ங்கர பரமஹம்ச சுவாமிகள் ஞானம் செறிந்த திருப்பாடல் ஒன்றைப் புனைந்துள்ளார்.

வாழ்வின் நிலைமை பற்றியும் மரணமில்லாப் பெருவாழ்வு குறித்தும் ஞானப் பொக்கிஷமாக அந்தத் திருப்பாடல் விளங்குகிறது.

வாழ் நாளாம் கடிகாரம் தனக்குச் சாவி வழங்குவது
ஒருகாலே ஒருகால் கண்டீர் கோனாகும்
அம்முள் நிற்பது இன்றோ என்றோ குறித்துரைக்க
அதற்குள் கண்டடைவீர் குருவைத் தேடி.

சங்கர பரமஹம்ச சுவாமிகள் அருளிய இப் பாடலின் உட்பொருள்

மனிதர்களின் வாழ்வின் தன்மை ஒரு கடிகாரத்தைப் போன்றது. அதில் கடிகாரம் என்பது உடல், அதனுள் இயங்கும் முள்ளைப் போன்றது மனித உயிர். அந்த முள்ளை இயக்கும் விசையைப் போன்றதே வாழ் நாட்கள். ஆனால் சாவி கொடுத்து, இயங்கும் கடிகாரத்தைப் போலவே மனித வாழ்க்கை இருந்து கொண்டு இருக்கிறது.

அந்த சாவி விசையின் இயக்கத்தைக் கொண்டு, உயிராகிய முள் இயங்குகிறது. அந்த உயிரின் இயக்கம் இன்று நிற்குமோ? அல்லது என்று நிற்குமோ? என யாருக்கும் தெரியாது. சாவி கொடுத்து இயங்கும் கடிகாரத்தை, கடிகாரப் பழுது நீக்கும் நிபுணரைக் கொண்டு தானியங்கும் கடிகாரமாக மாற்றினால் கடிகார இயக்கத்தில் தடைவராது.

அதுபோல் மெய்ஞ்ஞானக் குருவைக் கொண்டு மெய்யுணர்வு தவத்தின் மூலமாக, உடம்பை வளர்ப்பது போல் உயிரையும் வளர்த்தால் என்றும் அழியாது விளங்கும் மரணமில்லாப் பெருவாழ்வு வாழலாம். உடம்பாகிய கூடு விழுவதற்குள் ஞான குருவினைத் தேடிக் கண்டடைந்து நித்திய மெய்வாழ்வை பெற்றுக் கொள்ளுங்கள்.

# 50

# சங்கர சுவாமிகளுக்குப் பிடித்த பாடல்

*சங்கர பரமஹம்ச சுவாமிகள் அடிக்கடி சீடர்களுக்கு அகத்தியப் பெருமான் அருளிய பாடல் ஒன்றைப் பாடி அதன் பொருளை மிக அழகாக விளக்குவார்.*

*அப்பாடலும் சுவாமிகளின் அருள் நிறைந்த விளக்கமும் தேடல் நிறைந்த எவரையும் ஆன்மிக உலகிற்கு ஈர்க்க வல்லது.*

வழிபடு மெய்ஞ்ஞானம் வாய்க்கும் வழிகேளாய்
சுழினை என்னும் அவ்விடம் கருத்தும் விழி வைக்கும்
சாதகத்தினால் ஆண்டொன்று தப்பாமல் சாதிக்கில்
பேதகம் ஒன்றில்லை பிடி.

- **அகத்தியர் மதிவெண்பா** - 100

*உலகில் உள்ள எல்லா சமயங்களும் மதங்களும், மார்க்கங்களும், போற்றி வழிபடும் மெய்ஞ்ஞானம் எவ்விதம் கை கூடும் என்றால், குருவருளால் உணர்த்தப்படும் மெய்யுணர்வை உணர்ந்து, அதில் ஐம்புல உணர்வை ஒடுக்கி, சுழினை எனப்படும் சிர நடுப் பகுதியான உச்சி சகஸ்கர தளத்தில் மனதை ஒருமுகப் படுத்தி எண்ணமற்ற மோன நிலையில் நிலைக்க வேண்டும்.*

*அவ்வண்ணம், எண்ணமற்ற மோன நிலையில் நிலைக்கும் சாதனையை ஒரு வருடம் இடைவிடாது செய்தால் குருலிங்க சங்கமம் உண்டாகும்.*

*அதனால் குரு சிஷ்ய அறிவு, இரண்டறக் கலந்து ஒன்றாகி, இறைத் தன்மையில் முழுமையாகக் கரைந்து, எவ்வுலகிலும், எல்லா உயிர்களுக்குள்ளும் ஊடுருவிக் கலந்து, பேதம் இல்லாமல் யாதும் தானாகி நிற்கும் அனுபவம் கிடைக்கும்.*

*மனிதப் பிறவியின் இலட்சியமான அந்த அனுபவத்தை இந்தப் பிறவியிலேயே விடாது பிடித்து நிலைத்துக் கொள்ளல் வேண்டும்.*

*மனிதப் பிறவியின் லட்சியத்தை சங்கர சுவாமிகளின் வாய்மொழியாய் கேட்பவர்கள் நெகிழ்ந்துருகிப் போவார்கள்.*

# 51

# ஆனந்தக் களிப்பு

*சங்கர பரமஹம்ச சுவாமிகள் சர்வ சதா காலமும் பாடிக் கொண்டிருந்த பாடல்கள் 'சங்கர சங்கர சம்போ', என்னும் தாயுமான சுவாமிகள் அருளிய ஆனந்தக் களிப்பு ஆகும்.*

*ஆனந்தக் களிப்பின் அனுபவங்களைத் தன் முழுமை அனுபவமாகக் கொண்டிருந்ததால் சங்கர சுவாமிகளின் திருவாய் அடிக்கடி அப்பாடல்களை ஒலித்த வண்ணம் இருக்கும்.*

*சங்கர சுவாமிகள் என்ற திருப்பெயர் அவருக்கு அமைந்ததற்குக் காரணமே 'சங்கர சங்கர சம்போ', என்ற பாடல் வரிகளைத் திரும்பத் திரும்ப அவர் உச்சரித்த படியே இருந்தது தான்.*

*தாயுமானவர் சுவாமிகள் அருளிய ஆனந்தக் களிப்பில் மொத்தம் 30 திருப்பாடல்கள் உள்ளன. ஆனந்தக் களிப்பூட்டும் அந்தப் பாடல்களில் சில*

*சங்கர சங்கர சம்போ சிவ சங்கர சங்கர சம்போ*

ஆதி அநாதியும் ஆகி - எனக்கு
ஆனந்தமாய் அறிவாய் நின்று - இலங்கும்
சோதி மவுனியாய்த் தோன்றி அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி - சங்கர

சொன்ன சொல் ஏதென்று சொல்வேன் - என்னைச்
சூதாய் தணிக்கவே சும்மா இருத்தி
முன்னிலை ஏதும் இல்லாதே - சுகம்

முற்றச் செய்தே எனைப் பற்றிக் கொண்டாண்டி - சங்கர

பற்றிய பற்றற உள்ளே - தன்னைப்
பற்றச் சொன்னான் பற்றிப் பார்த்த இடத்தே
பெற்றதை ஏதென்று சொல்வேன் - சற்றும்
பேசாத காரியம் பேசினான் தோழி - சங்கர

பேசா இடும்பைகள் பேசிச் - சுத்தப்
பேயங்கமாகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசாப் பிசாசைத் துரத்தி - ஐயன்
அடியிணைக் கீழே அடக்கிக் கொண்டாண்டி - சங்கர

அடக்கிப் புலனைப் பிரித்தே அவன்
ஆகிய மேனியில் அன்பை வளர்த்தேன்
மடக்கிக் கொண்டான் என்னைத் தன்னுள் - சற்றும்
வாய் பேசா வண்ணம் மரபும் செய்தாண்டி சங்கர

மரபைக் கெடுத்தனன் கெட்டேன் - இத்தை
வாய்விட்டுச் சொல்லிடின் வாழ்வு எனக்கு இல்லை
கரவு புருடனும் அல்லன் - என்னைக்
காக்கும் தலைமைக் கடவுள் காண் மின்னே - சங்கர

உள்ளதும் இல்லதுமாய் முன் உற்ற
உணர்வதுவாய் உன் உளம் கண்டது எல்லாம்
தள்ளெனச் சொல்லி என் ஐயன் - என்னைத்
தானாக்கிக் கொண்ட சமர்த்தைப் பார் தோழி - சங்கர

பாராதி பூதம் நீ அல்லை - உன்னிப்
பார் இந்திரியம் கரணம் நீ அல்லை
ஆராய் உணர்வு நீ என்றான் - ஐயன்
அன்பாய் உரைத்த சொல் ஆனந்தம் தோழி - சங்கர

அன்பருக்கு அன்பான மெய்யன் - ஐயன்
ஆனந்த மோனன் அருட்குரு நாதன்
தன் பாதம் சென்னியில் வைத்தான் என்னைத்
தான் அறிந்தேன் மனம் இறந்தேனே - சங்கர

இறப்பும் பிறப்பும் பொருந்த எனக்கு
எவ்வண்ணம் வந்தது என்றெண்ணியான் - பார்க்கில்
மறப்பும் நினைப்புமாய் நின்ற - வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது தோழி - சங்கர

மனதே கல்ஆல் எனக்கு அன்றோ - தெய்வ
மவுன குருவாகி வந்து கைகாட்டி
எனதாம் பணியற மாற்றி - அவன்
இன்னருள் வெள்ளத்தில் இருத்தி வைத்தாண்டி - சங்கர

அருளால் எவையும் பார் என்றான் - அத்தை
அறியாதே சுட்டி என் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள் கண்டது அல்லாற் - கண்ட
என்னையும் கண்டிலேன் என்னேடி தோழி - சங்கர

என்னையும் தன்னையும் வேறாய் - உள்ளத்து
எண்ணாத வண்ணம் இரண்டற நிற்கச்
சொன்னதும் ஒரு சொல்லே - அந்தச்
சொல்லால் விளைந்த சுகத்தை என் சொல்வேன் - சங்கர

நலமேதும் அறியாத என்னைச் - சுத்த
நாதாந்த மோனமாம் நாட்டம் தந்தே சஞ்
சலமேதும் இல்லாமல் எல்லாம் - வல்லான்
தாளால் என் தலை மீது தாக்கினான் தோழி - சங்கர

சிந்தை பிறந்ததும் ஆங்கே - அந்த
சிந்தை இறந்து தெளிந்ததும் ஆங்கே
எந்த நிலைகளும் ஆங்கே - கண்ட
யான் தான் இரண்டு அற்று இருந்ததும் ஆங்கே - சங்கர

வேண்டா விருப்பும் வெறுப்பும் - அந்த
வில்லங்கத்தாலே விளையும் சனனம்
ஆண்டான் உரைத்தப் படியே - சற்றும்
அசையாது இருந்துக் கொள் அறிவாகி நெஞ்சே - சங்கர

அறிவாரும் இல்லையோ ஐயோ - என்னை
யார் என்று அறியாத அங்க தேசத்தில்
வறிதே காமத் தீயில் சிக்கி - உள்ள
வான் பொருள் தோற்கவே வந்தேன் நான் தோழி - சங்கர

# 52

# சித்தர் பெருமான்களும் சங்கர பரமஹம்ச சுவாமிகளும்

## - ஓர் ஒப்பீடு

*சித்தர்களுக்கே உரிய சித்தாடல்கள் சங்கர பரமஹம்ச சுவாமிகளுக்கு வெகுவாகக் கைவரப் பெற்றிருந்தன.*

*பெரும்பாலும் சித்த பிரான்களின் சித்தாடல்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தவும், நோய் நொடிகளைத் தீர்க்கவும், மக்களை நல்வழிப்படுத்தி ஞானத்தை உபதேசிக்கவும் சித்தர்களால் மேற்கொள்ளப்பட்டன.*

*சங்கர பரமஹம்ச சித்தரின் சித்தாடல்கள், அதற்கு முன்னரும் பின்னரும் பற்பல சித்தர்களால் நிகழ்த்தப்பட்டவை என்பதை அறியும் போது, சங்கர சுவாமிகளின் மேம்பட்ட சித்தர் நிலையை உணர முடிகிறது.*

### திரும்பும் அடி

*ரவுடிகளின் அடாவடிகளைத் தடுக்கப் போன சுவாமிகளை, ரவுடியின் அடியாட்கள் தாக்குகிறார்கள். ரவுடிகள் அடித்த அடியெல்லாம் தங்களுக்கே விழுகின்றனவே தவிர, சங்கர பரமஹம்சர் மீது சிறு துரும்பும் விழவில்லை.*

*இதே நிகழ்வைத் திருவிளையாடல் புராணத்தில் காணலாம். மதுரையம்பதியில் மண் சுமந்த ஆதி சித்தரான சோம சுந்தரரைக் காவலர் பிரம்பால் அடிக்க, அந்த அடி உலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளின் முதுகில் விழுந்ததாகப் புராணம் புகழும்.*

திருமாளிகைத் தேவரை கட்டி இழுத்துச் செல்ல மன்னர் நரசிம்மரின் படை வீரர்கள் வர, மாளிகைத் தேவரின் பார்வை பட்டு அவ் வீரர்கள் தங்களையே கட்டிப் போட்டுக் கொண்டு மன்னர் முன்னர் நின்றனர்.

தேவரின் தலையை வெட்டி வரச் சென்ற சேனாதிபதி உள்ளிட்ட போர் வீரர்கள் தங்கள் தலைகளை வெட்டிக் கொண்டு மாய்ந்தது திருவாடுதுறை சிவன் கோவில் தமிழ் புராணச் செய்தி.

## குரு - சீடர்

வள்ளல் பெருமானின் சீடரான கல்பட்டு ஐயா, பெருமானின் சீடரான வரலாறு சுவைமிக்கது.

தக்கதொரு குரு தன்னைத் தேடி வந்து அழைத்துச் செல்வார் எனக் கல்பட்டு ஐயா, பிரார்த்தனையுடன் காத்திருந்தாராம். ஒருநாள் வள்ளல் பெருமானே நேரில் வந்து கல்பட்டு ஐயாவை அழைத்துச் சென்று சீடராக்கிக் கொண்டார்.

அது போன்றே பத்து வயதில், திருஞானானந்தா சுவாமிகள் பாலப் பருவத்தில் இருக்கும் போதே, குடியிருக்கும் வீட்டிற்கே வந்து பார்த்து, ரசித்து, ஆன்மிகம் உணர்த்தி சீடராக்கிக் கொண்டார், சங்கர சுவாமிகள். தக்க பருவத்தில் தடுத்தாட் கொண்டு அரவணைத்துக் கொண்டார்.

குருவுக்கு ஏற்ற சீடராய், திருஞானானந்தா சுவாமிகள், இன்றும் சங்கர பரமஹம்சருக்குத் தினமும் பிரார்த்தனை, வாரம் தோறும் குருபூஜை, வருடம் முழுதும் 6 லட்சம் பேருக்கு மேல் அன்னதானம் எனச் சங்கர சுவாமிகள் அருளிய ஆன்மிகத் தொண்டுகளை ஆற்றி வருகிறார்.

## நீர் மேல் நடப்பது

பேராசை கொண்ட அன்பர்களுக்குப் புத்தி புகட்ட தாமிரபரணி நதியில் குதித்து நீர் மேல் நடந்து சென்றார், சங்கர சுவாமிகள்.

ஆதி சங்கரரின் சீடரான பத்மபாதர் நீரின் மேல் நடந்து வந்தது ஓர் ஆன்மிகப் பதிவு. ஏசு பிரானும் கடல் மேல் நடந்து வந்ததை பைபிள் பதிவு செய்து வைத்திருக்கிறது.

## இறந்தாரை எழுப்புவது

செத்தாரை எழுப்புவது என்பது சித்தர்களுக்கு மட்டுமே சாத்தியமான ஒன்று.

விதிப்படி இறந்து போன சிறுவன் சங்கர பாண்டியை உயிர்ப்பித்துக் கொடுத்தார், சங்கர சுவாமிகள். செத்த கிளியை சிறுமிக்கு உயிர்ப்பித்துக் கொடுத்து மகிழச் செய்தார். மோசடிப் பேர் வழி கள்ளுக் கடைக்காரரையும் உயிர்ப்பித்தார், கருணை வள்ளல், சங்கர சுவாமிகள்.

திருநாவுக்கரசர் அப்பூதி அடிகளின் மகனைப் பிழைக்க வைத்து எழச் செய்ததை எத்தனை முறை படித்து மகிழ்ந்திருப்போம்.

சுந்தரர் முதலை வாயில் இருந்து மீட்டு இறந்த சிறுவனை உயிர்ப்பித்ததை, திருஞானசம்பந்தர், இறந்து சாம்பலாகிய பூம்பாவையை, மீண்டும் உயிர்ப்பித்ததை, வள்ளல் பெருமான் இறந்தாரை எழுப்பி, உயிர் கொடுத்து உலா வரச் செய்ததை உலகம் நன்கறியும். ஏசு பிரான் தன் பக்தர்களை உயிர்ப்பித்ததை ஆன்மீக உலகம் குறித்து வைத்திருக்கிறது.

## அட்டமா சித்து

பதஞ்சலி முனிவர் ஆயிரம் சீடர்களுக்குத் திரைக்குப் பின்னாலிருந்து உபதேசம் செய்து கொண்டிருந்தார். ஆர்வம் மிகுதியால் ஒரு சீடர் திரையை விளக்கி பார்த்த போது, ஆதி சேஷனைப் போன்று பாம்பு ரூபத்தில் காட்சி அளித்தாராம்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளும் அய்யன்கண் தேவருக்கும் பாம்பாய்க் காட்சி அளித்து மிரளச் செய்தது சித்து விளையாட்டே. சடைச்சியின் வீட்டில் குழந்தையாய் மாறியதும் சித்தின் மகிமையே!

## மீன் வரவழைத்தது

கருவூரார் ஊர் ஊராய் சுற்றிக் கொண்டிருந்த போது, ஓர் ஊரில் வேதியருக்கு ஆன்மிகச் சந்தேகங்கள் எழ அவர்களுக்கு உபதேசம் செய்ய ஆரம்பித்தார். சித்தர்களின் மகத்துவத்தை மெய்ப்பிக்க, வன்னி மரத்திலிருந்த பல வண்ண மீன்களைத் தெறிக்க வைத்தார்.

சங்கர பரமஹம்ச சுவாமிகள், முருகன் குறிச்சியில் வெள்ளைக்காரப் பாதிரியாரின் ஆணவத்தை அடக்க, இளநீரில் மூன்று மீன் குஞ்சுகளை வரவழைத்து நீச்சலடிக்க வைத்தது சித்தர்களின் மகத்துவத்தை உலகறியச் செய்ய நடத்திய சித்தாடல் அன்றோ!

## பசியாற்றல்

ஒரு நாள் வடலூர் தருமச் சாலையில் திடீரென்று அன்பர் கூட்டம் அலைமோதியது. ஓரளவு உணவே இருந்தது. பொறுப்பாளர் கல்பட்டு ஐயா கவலைக்குள்ளானார்.

சீடரின் முகக் கவலையைக் கண்ணுற்ற வள்ளல் பெருமான் ‘கவலைப்படாதே’ எனச் சொல்லித் தானே உணவு பறிமாறினார். அத்தனை பேரும் வயிராற உணவு உண்ட பின்னரும், பாத்திரத்தில் அன்னம் மீதமிருந்தது. அது கருணை வள்ளலின் அருளாற்றல்.

இதே கருணை தான் ஒரு சித்தராக சித்தியாகியிருந்தது சங்கர சுவாமிகளுக்கும் அயிரன்பட்டியில் ஆட்டுக்கிடாக்களை இழந்து கவலையாயிருந்த அத்தனை மக்களுக்கும் மிகக் குறைந்த உணவினைப் பெரும் விருந்தாக, சுவை மிகுந்த விருந்தாக மாற்றி அமைத்தார் சங்கர சுவாமிகள்.

## பரகாய சித்தி

பரகாய சித்தி என்னும் கூடு விட்டுக் கூடு பாயும் சித்தி சித்தர்களிடையே ஏகப் பிரசித்தம்.

திருமூலரும் ஆதி சங்கரரும் பரகாய பிரவேசம் செய்ததை ஆன்மிகப் பதிவாய்க் காண முடிகிறது. இச் சித்தில் வல்லவர்

சங்கர சுவாமிகள் என்பதற்கு உதாரணம் தான் ரவுடியைத் திருந்த மேற்கொண்ட பரகாயப் பிரவேசம்.

## பல இடங்களில் தோன்றுவது

ஒரே சமயத்தில் பல இடங்களில் தோன்றுதல் சித்தர்களுக்கே உரிய உயர்ந்த சித்து.

திருவதிகையில் வள்ளல் பெருமான் ஒரே சமயத்தில் நான்கு இடங்களில் தோன்றி அன்பர்களுக்கு அருளாசி வழங்கினார். சங்கர பரமஹம்சர் ஒன்பது ரூபமாய்க் காட்சி அளித்ததும், ஒரே நேரத்தில் திருமண வீட்டிலும், கிராமத்திலும் இருந்ததும் இந்த சித்தின் மகிமையால் தான்.

## வாய்த் தம்பலம்

வாய்த் தம்பலம் என்பது வாயில் குதப்பட்ட வெற்றிலை எச்சில், வெற்றிலைப் பிரியரான சங்கர பரமஹம்ச சுவாமிகள் தாம்பூலம் போட்டுக் கொண்டு தாம்பூலச் சாற்றை உமிழ்ந்து அன்பர்களின் நோய்களைத் தீர்த்ததை அவர் நிகழ்த்திய அற்புதங்களில் கண்டு வியந்தோம்.

மகா சித்தரான கருவூரார் தஞ்சைப் பெரிய கோயில் கட்டிய வேளையில், சிவலிங்கம் நிலை பெறாமல் இருந்ததை அறிந்து, போகர் பெருமானின் அறிவுரைப்படி தஞ்சை விரைந்து வாய்த் தம்பலம் கொண்டு, ஆவுடையாரை ஆடாமல் அசையாமல் நிலை பெறச் செய்ததை புராணம் வியப்போடு இன்றும் வர்ணிக்கிறது.

## வறுத்ததது விளைவது

திருமாளிகைத் தேவர், கோயிலில் வழங்கப்பட்ட பயிற்றஞ் சுண்டலை மறுநாள் நிலத்தில் போட்டு செழிப்பான பயிர்களாக வளரச் செய்த மகிமை சங்கர பரமஹம்சரிடம் இருந்தது. வறுத்த கொள்ளை முளைக்க வைத்துக் காட்டினார் சங்கர சுவாமிகள்.

## ரசவாதம்

சித்தர்களுக்கு மட்டுமே சாத்தியமான சித்தி ரசவாதம்.

காலாங்கி நாதர், சிவவாக்கியர், கொங்கணர் முதலான பதினெட்டுச் சித்தர்களும் ரசவாதம் மூலம் தங்கம் செய்து, ஏழை எளியவர்களுக்கும், நற்பணிகளுக்கும் உதவி வந்தனர்.

வள்ளல் பெருமான் ரசவாதத்தால் தங்கம் செய்து எளியவர்களுக்கு உதவியதோடு, அத் தங்கத்தைக் கொண்டு ஞானம் பெருக்கும் சத்திய ஞான சபையை அமைத்தது வரலாறு.

அந்த வழி வந்த சங்கர பரமஹம்ச பெருமானும் ரசவாதத்தில் வல்லவர். தங்கம் செய்து, ஏழைபாழைகளுக்கு வழங்கினார். அம்பாசமுத்திரம் அகத்தியர் கோயிலில் மூலவர் சிலை அமைய ரசவாத யுக்தியைக் கையாண்டார்.

சிதம்பரத்தில் ஆடவல்லான் சிலை அமைக்க திருமூலர் ரசவாதம் செய்தது நிலைத்திருக்கும் வரலாறு அல்லவா?

கண்டச் சித்து என்பது எவரையும் மிரள வைக்கும் சித்தி. தன்னைத் தானே கண்ட கண்டமாக்கி அக்கடா என்று சிதறிக் கிடப்பதே கண்டச் சித்து.

## கண்டச்சித்து

அய்யன்கண் தேவர் முன்பு, சங்கர பரமஹம்சர் கண்ட கண்டமாகக் காட்சி அளித்தது, இச் சித்தின் மகிமையே.

வள்ளல் பெருமான் ஒரு முறை தர்மச் சாலைக்கு வெளியே கண்ட கண்டமாகக் கிடக்க, அன்பர் வேலூர் சண்முகம் பிள்ளை பார்த்து பயந்து கூச்சலிட்டார். பின்பு தன் சுய திருவுரு கொண்ட வள்ளல் பெருமானார் 'இதை யாரிடமும் சொல்லாதே', என்பதே அன்பருக்கு இட்ட கட்டளையாகும்.

## அன்ன தானம்

ஜீவகாருணியம் என்னும் பசியாற்றுதல் சித்த பிரான்களுக்குப் பிடித்தமான அருந்தொண்டு.

வடலூரில் வள்ளல் பெருமான் தர்மச் சாலையை நிறுவி அன்பர்களுக்கும், பக்தர்களுக்கும், ஏழை எளியோருக்கும் உணவு வழங்கி வந்ததைப் போலவே, சங்கர பரமஹம்சரும் செல்லும் இடமெல்லாம் அன்னக் கொடி நட்டு, பசித்த வயிறுகளுக்கு உணவு வழங்கி வந்தார்.

## குழந்தைகளோடு குழந்தையாய் ...

நெரூர் சித்தர் சதாசிவ பிரமேந்திரருக்கு குழந்தைகள் என்றால் கொள்ளைப் பிரியம். அவர்களோடு இன்னொரு குழந்தையாய் விளையாட ஆரம்பித்து விடுவார்.

ஒருமுறை, குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்த போது, அவர்களை அழைத்துக் கொண்டு மதுரை சென்றார். அங்கு வேண்டிய உணவையும் விளையாட்டுப் பொருட்களையும் வாங்கித் தந்தார். பின் உடனடியாக நெரூர் திரும்பி வந்து குழந்தைகளுடன் விளையாடி விட்டு, அவர்களை வீட்டிற்கு அனுப்பினார்.

இதெல்லாம், விளையாடும் நேரத்தில் அவர் நடத்திய சித்தாடல். பெற்றோர்களுக்கு, குழந்தைகள் மதுரையில் வாங்கிய விளையாட்டுச் சாமான்களுடன் வீடு திரும்பியது ஆச்சரியத்தையே ஏற்படுத்தியது.

ஏனெனில் தெருவில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் அவ்வளவு துரிதமாக மதுரை சென்று வர சாத்தியமே இல்லை.

சங்கர பரமஹம்சரும் குழந்தைகளின் பால் எல்லையற்ற அன்பு கொண்டவர். அவர்களோடு சக வயதக் குழந்தையாய் விளையாட ஆரம்பித்து விடுவார். அவரின் சப்பரமும், 'சாமி வருது சப்பரம் வருது' என்ற கோஷமும், குழந்தைகளுக்கும்,

வேடிக்கை பார்க்கும் ஊர்க்காரர்களுக்கும் உணர்ச்சி பூர்வமானதாக இருக்கும்.

குழந்தைகளுக்குப் பிரியமான பூந்தி, லட்டு போன்ற பட்சணங்களை தனது தவ ஆற்றலால் ஓலைப் பெட்டியில் மண்ணைப் போட்டு வரவழைத்து தருவார். அவர்கள் ஆசையோடு சாப்பிடுவதைப் பார்த்து மகிழ்ந்து போவார்.

வாழையடி வாழையென வந்த சித்தர் மரபில் வாராது வந்த மாமணியாய் உதித்தவரே சங்கர பரமஹம்ச சுவாமிகள். அவர் ஒரு அருள் ஞானச்சித்தர் என்பதற்கு மேற்படி நடந்த உண்மைச் சம்பவங்களும், அற்புதங்களுமே சான்று.

நாம் அனைவரும் ஒப்பற்ற அருள் ஞான சித்தராகிய சங்கர பரமஹம்ச சுவாமிகளின் ஞான வழி நடந்து, வாழ்க்கையின் முழுமையைப் பெற்று மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்து உய்வோமாக!

# 53

# கருவூராரும் சங்கர பரமஹம்சரும்

## - ஓர் ஒப்பீடு

சங்கர பரமஹம்சர் ஓர் நிறை ஞானியாகவே விளங்கினார். வாராத வந்த சித்தர் குல மரபில் தோன்றி, சித்த வாழ்வினை சீர்படி வாழ்ந்து இறையோடு இறையாக இரண்டறக் கலந்து, சித்தி பெற்று சித்தரானார்.

சங்கர பரமஹம்சரின் வாழ்வும், நிகழ்த்திய அற்புதங்களும், நிறைவும் மகா சித்தரான கருவூர் சித்தரின் சித்த திவ்விய சரித்திரத்தைப் போலவே பல வகைகளில் இருக்கிறது என்று அறிய வரும் போது, ஆச்சரியமும் பரவசமும் மிகுகிறது.

### குலம்

கருவூர் சித்தர் கரூரில் பிராமண குலத்தில் உதித்தார். கோயில் பணியே, அவரது குடும்பத்தாரின் ஜீவனமாக இருந்தது. கோயில்களுக்கு சிலை செய்தல், சிலைகளின் பழுதுகளை நீக்கித் தருதல் அவரது குலத் தொழிலாக இருந்தது.

சங்கர பரமஹம்சர் பாப்பாங்குளத்தில் ஒரு பிராமண குடும்பத்தில் அவதரித்தார். அவரது மூதாதையரும் பெற்றோரும் கோயில் பணியையே மேற்கொண்டு வாழ்ந்து வந்தனர். கோயில்களில் பூஜை வழிபாடு செய்யும் பூசகர்களாக இருந்த வந்தனர். சங்கர பரமஹம்சரும் கோயில்களில் பூசகராகவே பணி புரிந்து வந்தார்.

### கோபம், சாபம்

கருவூராருக்கு கோபம் என்பது இயல்பாகவே இருந்தது. அவரது கோபம் கடவுளரையும் விட்டு வைக்கவில்லை.

நெல்லையப்பர் கோயிலுக்குச் செல்லும் கருவூரார் இறைவனை மூன்று முறை வாசலில் நின்று அழைக்கிறார். இறைவன் வராததால் இங்கு நெல்லையப்பர் இல்லை போலிருக்கிறது என்று சொல்லி, இறை இல்லாத இடத்தில் எருக்கம் பூ வளரட்டும் எனச் சாபமிட்டுச் சென்று விடுகிறார். பின் நெல்லையப்பரே ஓடோடி வந்து, நைவேத்தியத்தின் போது கூப்பிட்டால் எப்படி பதில் அளிக்க முடியும் என நியாயம் கேட்க வேண்டியிருந்தது.

மானூரில் வேதியர் கூட்டம், கருவூராரை அநாசாரமுள்ளவர் எனச் சொல்லி விட, உடனே அவ்வூரில் வீட்டில்லாமல் போக சாபமளித்தார், கருவூரார் பிரான் என்பது வரலாறு.

சங்கர பரமஹம்சரின் திவ்விய சரித்திரம் முழுவதம் அவரது ரௌத்ரம் பிரசித்தம். அநீதி கண்டு பொங்கி எழுவது, ஏழை எளிய மக்களுக்கு எதிராக உள்ளவர்களுக்குச் சீற்றத்தோடு சாபம் வழங்குவது, அபலைப் பெண்டிரைச் சீண்டுவோரை ரவுடிகளை சம்ஹாரம் செய்வது சங்கர பரமஹம்சரின் இயல்பான குணமாகவே அறிய முடிகிறது.

பணி புரிந்த பாப்பாக்குளம், கடையம் கோயில்களில் ஏற்பட்ட நிகழ்வுகளில் ரௌத்ரம் கொண்டு தீபாரதணைத் தட்டையும், ஒலிக்கும் மணியையும் அந்தரத்தில் விட்ட படி வெளியேறியது அப்படியே அசலாக கருவூராரைப் போன்ற ரௌத்ர வெளிப்பாடு.

அதுவும் கடையம் கோயிலில், 'யாரோ எசமான் வரானாம்…நீ நிப்பயாம்' என்று அம்மனிடமே கோபமாகச் சொல்லிவிட்டு, திரும்பிக் கூடப் பார்க்காமல் வெறியேறியது, கருவூராரின் கோபத்திற்கு இணையானது சங்கர பரமஹம்சரின் ரௌத்ரம் என்பதைத் தெளிவாக உணர முடிகிறது.

## ரசவாதம்

உயர்ந்த ஞான நிலையை அடைந்த சித்த பிரான்களுக்கு இயல்பாகவே கை வருவது ரசவாதம். சித்த பிரான்கள் அனைவரும் ரசவாதத்தில் வல்லவர்கள்.

மகா சித்தரான கருவூராரும், சித்த பிரான்களின் ஞான வழித் தோன்றலான சங்கர பரமஹம்சரும் தங்கள் ரசவாத சித்தாடலை வெளிப்படுத்திய அற்புதங்களை ஆன்மீக உலகு அழகாகப் பதிவு செய்துள்ளது.

சோழ மன்னன் தன் மனத்தில் உதித்ததை ஓவியமாக வரைந்து அதைப் போல சிதம்பரத்தில் ஆடவல்லாரின் சிலையை அமைத்த போது, அக்காலத்து சிறந்த சிற்பிகள் அனைவரும் முனைந்தும் சிலை அமையவில்லை. அரசன் கொடுத்த தங்கம் உருகி ஓடியதே தவிர, சிலை நிலை பெறவில்லை.

திருமூலரின் அழைப்பை ஏற்று கருவூரார் உடனே சிதம்பரம் விரைந்தார். சில மணிகளில் தன் ரசவாத மகிமையால் நடராஜப் பெருமானின் சிலையை அழகுபடி உருவாக்கித் தந்தார்.

மிக அற்புதமான அந்த சிலையை கலப்படச் சிலை எனக், குறை காண, சித்தரான திருமூலப் பெருமானே மன்னரிடம் நேரில் வந்து கருவூராரின் ரசவாத சித்தை விளக்கிச் சொல்லி பெருமிதம் கொண்டது, ஓர் ஆன்மிகப் பதிவு.

அம்பாசமுத்திரத்தில் அகத்தியர் கோயிலில் மூலவர் சிலையை அமைக்க சிற்பிகள் எவ்வளவோ முயன்றும் தோல்வியே கிட்டியது. சிலை உருகி ஓடியதே தவிர நிலை கொள்ளவில்லை.

கோயில் பணிகளை வேடிக்கைப் பார்க்க வந்த சங்கர பரமஹம்சர் சிற்பிகளின் திணறலைத் தீர்த்து வைக்க, தான் கொண்டு வந்திருந்த கெந்தக செப்புக் காசைக் கொடுத்து, அதனை கலந்து உருக்கி, சிலை செய்து கொடுத்து உதவிய சம்பவம் வரலாற்றுப் பதிவாய் வியக்க வைக்கிறது.

ரசவாத மகிமையால் கருவூரார் உருவாக்கித் தந்த தங்கத்தால் ஆன சிவலிங்கங்கள் அவர் சென்ற இடங்களில் எல்லாம் இன்றும் உள்ளது.

கெந்தகச் செம்பின் மகத்துவம் யாதெனில் அச்செம்பை பல மடங்கு உள்ள சாதாரண செம்புடன் உருக்கிக் கலந்தால் சாதாரண செம்பு முழுதும் தங்கமாகும்.

சங்கர பரமஹம்சர் உருவாக்கித் தந்த சிலையை, பரமஹம்சரின் ரசவாத மகிமையை இன்றும் அம்பாசமுத்திரம் அகத்தியர் பெருமான் கோயிலில் தரிசிக்கலாம்.

## தண்ணீரில் நடந்தது

கருவூரார் தேச சஞ்சாரம் செய்வதில் விருப்பமுடையவர். தமிழகத்தின் தென் பகுதி அவருக்குப் பிடித்தமான பகுதி.

தாமிரபரணி நதி மீது அலாதிப் பிரியம். நதியில் நீராடி இறைவனைத் தொழுது அன்றாடப் பயணத்தை தொடங்குவார்.

கரை புரண்டு ஓடும் தாமிரபரணியில் குதித்து நீச்சலடித்து மகிழ்வது கருவூராருக்கு மிகவும் பிடிக்கும். சில சமயங்களில் தண்ணீர் மேல் நடந்து சென்று மகிழ்வார். பார்ப்பவர் அதிசயித்து வணங்குவது வழக்கம்.

சங்கர பரமஹம்ச சுவாமிகளின் திவ்விய சரித்திரத்தில் தாமிர பரணி முக்கிய இடம் பெற்றுள்ளது. தாமிரபரணியே சங்கர பரமஹம்ச சுவாமிகளின் அதிகாலை வாசஸ்தலம்.

ரசவாதம் கற்றுக் கொள்ள ஆசைப்பட்ட மூன்று அன்பர்களை அழைத்து வந்து, கரை புரண்டு ஓடும் தாமிரபரணியில் குதிக்கச் சொன்னார். சுவாமிகள், அவர்கள் பயந்தோட, அவர்களில் ஒருவர், நீங்க குதிங்க பார்க்கலாம் எனச் சொல்ல, சங்கர சுவாமிகள் நட்டாற்றில் குதித்து, தண்ணீர் மீது நடந்து வந்ததை பார்த்த மக்கள் வியந்து கும்பிட்டு நின்றது வரலாறாய் அற்புதமாய் பதிவாகி உள்ளது.

## சீடரான பெண்மணிகள்

கருவூரார் ஸ்ரீரங்கத்திற்குச் செல்கிறார். அங்கு அபரஞ்சி என்ற தாசிப் பெண் அறிமுகம் ஆகிறார். அவளது அழகையும், ஆற்றலையும், ஆன்மிக அதிர்வலைகளையும் கண்டு அவளோடு தங்குகிறார்.

அவளுக்கு உபதேசம் தருகிறார். தீட்சை தருகிறார். கூடவே கலந்து களிக்கிறார்.

மறுநாள் அரங்கனை தரிசித்து விட்டு வந்து, அரங்கன் அணியும் மார்பு மாலை ஒன்றை பரிசளித்து விடை பெறுகிறார்.

அரங்கனின் மாலை அபரஞ்சி சூடியிருப்பது களவு எனத் தீர்மானிக்கப்பட்டு விசாரிக்கப்படுகிறது.

கருவூராரும் விசாரிக்கப்படுகிறார். கோயில் அதிகாரி 'அபரஞ்சிக்கும் உங்களுக்கும் என்ன உறவு' என ஊர் மக்கள் முன்னிலையில் கேலியாகக் கேட்க,

'அவள் என் அகமகிழ் சிஷ்யை அரங்கனின் மனம் நிறை பக்தை' என்கிறார்.

அதை நிரூபிக்க அரங்கனே தோன்றி, அசரீரியாக ஒலிக்கிறார்.

அது ஒரு ஆன்மிகப் பரவச வரலாறு.

சங்கர பரமஹம்சரின் ஞான வாழ்க்கையிலும் ஒரு தாசிப் பெண். ஆசை மிகுதியால் சங்கர சுவாமிகளைப் போல மகவு பெற திட்டமிடுகிறாள். அதற்கான சூழ்நிலை வாய்க்கும் போது, சங்கர சுவாமிகள் குழந்தையாக மாறி 'கெக்கே பிக்கே' எனக் கைகொட்டிச் சிரிக்கிறார். அவள் சுவாமிகளின் மகத்தவம் உணர்ந்து, காலடி வீழ்ந்து மன்னிப்பு கோருகிறாள்.

பின்னர் அப் பெண்ணை மன்னிப்பதோடு, அருள் தந்து, ஆசி தந்து, ஆன்மிகப் பணிக்கு அழைக்கிறார். அவரும் தன் இறுதி நாள் வரை சங்கர பரமஹம்ச சுவாமிகள் வழி நடந்து அருள் தொண்டாற்றி இறைவனை சேர்கிறாள்.

அண்டி வரும் பெண்டிரை சித்தர்கள் ஞான நிலையில் அணுகுவர். சிஷ்யையாக இணைத்துக் கொள்வர். உலகம் வேறு பார்வை பார்க்கும். விமர்சிக்கும். பின் உள்ளம் உணர்ந்து போற்றி வணங்கும்.

## குருநாதர்கள்

கருவூராருக்கு போகர் பெருமாள், காலாங்கி நாதர், காகபுசண்டர் திருமூலர், அகத்தியப் பெருமான் முதலான அரும்பெரும் சித்தர்கள் குருநாதர்களாக இருந்து உபதேசம் செய்திருக்கிறார்கள். அசுவினி தேவரின் வேதை மார்க்கத்தை கற்றுக் கொண்டார், கருவூரார்.

சங்கர பரமஹம்சரின் குருநாதர் அகத்தியப் பெருமான். பொதிகை மலையில் தரிசனம் தந்து, உபதேசங்கள் அருளி சீடனாக அரவணைத்துக் கொண்டார், அகத்தியப் பெருமான்.

கருவூராருக்கும், சங்கர பரமஹம்சப் பெருமானுக்கும் அகத்திய மாமுனியே குருநாதர் என்பது ஆன்மிக ஒற்றுமை.

## ஊரார் எதிர்ப்பு

உலகமே வணங்கித் துதித்த கருவூராருக்கு பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து வந்த ஊரான கரூரில் பலத்த எதிர்ப்பு. அவரது சக வேதியர் குலமே அவரை கடுமையாக எதிர்த்தது. அவமரியாதை செய்தது. எள்ளி நகையாடியது. அவதூறு பரப்பியது. மது குடிப்பவன், மாமிசம் திண்பவன் அநாசார மிக்கவன் என அரசர் வரை புகார் சொன்னது.

ஒரு கட்டத்தில் அரசன் வீரர்களை விட்டு கருவூராரின் இருப்பிடத்தை சோதனையிடச் சொன்னான். படை வீரர்கள் சோதனை இட்ட போது, மதுவோ, மாமிசமோ, அநாச்சார பொருட்களோ ஏதுமில்லை. இருந்தவை அனைத்தும் பக்தி பரவசம் காட்டிய பூஜைப் பொருட்களே.

பதிலாக அப்பொருட்கள் புகார் சொன்னவர்கள் வீட்டிலிருந்தது கண்டு பிடிக்கப்பட்டு, அரசனின் கடும் நடவடிக்கைக்கு உள்ளானது.

சங்கர பரமஹம்சர் வாழ்விலும் இதே மாதிரி சம்பவம் நடந்தேறியது. கருவூரார் மீது சமத்தப்பட்ட அத்தனை புகார்களும் சங்கர சுவாமிகள் மீதும். ஒரு சாராரால் சுமத்தப்பட்டது.

சாதி, மதம், ஏழ்மை போன்றவற்றைப் பொருட்படுத்தாமல் சகலரையும் சமமாக பாவித்ததே சக வேதியர் கோபத்திற்கு இருவரும் உள்ளானதற்கு முதல் காரணம்.

அவர்கள் இருவருக்கும் இருந்த பேரும், புகழும், தவ ஆற்றலும், பொறாமைக்கும், காழ்ப்புணர்ச்சிக்கும் அடுத்தடுத்த காரணங்களாக இருந்தன.

ஒரு நாள், ஊர் மக்களைத் திரளச் செய்து சோதனையிட வைத்தனர் பகை கொண்ட உறவினர்கள்.

சங்கர பரமஹம்சர் பணி புரிந்த பாப்பாக்குடி கோயில் சோதனையிடப் பட்ட போது, ஆன்மிகப் பொருட்கள் இருந்தனவே அன்றி புகார் கொள்பவர்கள் பட்டியலில் இருந்த, படுபாதகப் பொருட்கள் ஏதுமில்லை.

அதற்குள் சீற்றத்துடன் சூடத் தட்டையும், ஒலிக்கும் மணியையும் அப்படியே அந்தரத்தில் விட்டு விட்டு, கோயிலையும் ஊரையும் விட்டு சங்கர சுவாமிகள் வெளியேறியது, தனிக் கதை.

இரு சித்த பிரான்களுக்கு மட்டுமல்ல, பல சித்தர்களுக்கு இந்த மாதிரி உள்ளூர் எதிர்ப்பு அல்லது மக்கள் ஏற்காத நிலை இருந்தது கண்கூடு.

## மலை வாசம்

சக வேதியர்களின் அவதூறு, எதிர்ப்பு காரணமாக மனமுடைந்த கருவூரார் குருநாதர் போகர் பெருமானின் ஆலோசனை கேட்டு மீண்டும் பற்பல கோயில்களுக்குச் செல்கிறார்.

திருவிடை மருதூர் சென்று இறைவனிடம் முறையிடுகிறார் இறைவன் தன் திருக்கரங்களை கருவூராரின் தலைமீது வைத்து அருளாசி தருகிறார்.

ஒரு முறை, மனம் சலித்த கருவூரார் கரூர் அருகிலிருக்கும்

வெண்ணேய் மலைக்குச் சென்று குடில் அமைத்து சில காலம் தவ வாழ்க்கை வாழ்கிறார்.

கடையம் கோயிலில் நித்யகல்யாணி அம்மனுக்கு அர்ச்சனை செய்து கொண்டிருந்த போது, ஏற்பட்ட சங்கர சுவாமிகளை எரிச்சலூட்டிய சம்பவம் அவரை கோயிலை விட்டு வெறியேற வைக்கிறது.

சீற்றமுடன் வெளியேறிய சங்கர சுவாமிகள் கோயில் அருகிலேயே இருக்கும் சித்தர் மலைக்குச் செல்கிறார், அங்கே தவம் மேற்கொள்கிறார்.

## சித்தி அடைதல்

வெண்ணெய் மலையில் தவ நிலையில் இருந்த கருவூராரிடம் இறைவன், அடுத்த நிலை அடைய ஆணை இடுகிறார்.

கரூர் வந்த கருவூராரக்கு இறைவனின் நோக்கம் புரிகிறது, காத்திருக்கிறார்.

ஒரு நாள், அமராவதி நதியில் குளித்துக் கொண்டு இருக்கும் போது, வேதியர் கூட்டம் துரத்த ஆரம்பிக்கிறது. அவர்கள் கைகளில் கத்தி, கம்பு போன்ற கொலை வெறி ஆயுதங்கள்.

அக் கூட்டம் துரத்த, கருவூரார் ஓட்டம் எடுக்கிறார், பதற்றம் ஏதும் இல்லை. கரூர் ஆநிலையப்பர் கோயில் நோக்கி ஓடுகிறார்.

துரத்தி வருபவர்கள் பார்த்திருக்க, கோயிலுக்குள் இருக்கும் இறைவன் சன்னதி நோக்கி ஓடுகிறார். சிவலிங்கத்தை நோக்கி ஓடுகிறார்.

சிவலிங்கத்தை நெருங்கியவர் சிவ ரூபத்தை இறுகப் பற்றுகிறார்.

ஒரு கணத்தில் ஒளி வெள்ளம் நிரம்பிய, பேரொளிச் சூழலில் இறையோடு இறையாக இரண்டற கலக்கிறார். இறையோடு ஐக்கியமாகிறார். இறைவன் ஆகிறார்.

சங்கர பரமஹம்சர் சித்தர் மலையில் தவமிருந்து, காண

வரும் அன்பர்களுக்கு அருளாசி வழங்கி வந்த காலத்தில் ஒரு நாள் மாலை, அன்பர்கள் முன்னிலையில் தவக் குகைக்குள் நுழைகிறார்.

அவர்கள் அத்தனை பேரும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, ஒரு கோடிச் சூரியப் பிரகாசம் போல் பேரொளி எழும்ப - அக்கணத்தில் இறையோடு இறையாய் இரண்டறக் கலந்து சித்தி அடைகிறார்.

மகா சித்தரான கருவூரார் போல அன்பர்கள் முன்னிலையில் சங்கர பரமஹம்சரும் சித்தி அடைந்தது இறையின் பேரருள். இறை விருப்பம். சித்த மகிமை.

# நன்றியுடன்...

‘இறைவனுக்கும்
சித்தர்களுக்கும்
என்ன வித்தியாசம்?’

‘சித்தர்கள்
நடமாடும் தெய்வங்கள்’

இது ஓர்
ஆன்மிக ஞானியிடம்
கேட்கப்பட்ட கேள்விக்கு
அவர் தந்த விளக்கம்.

அப்படி ஒரு
நடமாடும் தெய்வம் தான்
சங்கர பரமஹம்ச சுவாமிகள்.

சங்கர பரமஹம்ச
சுவாமிகளின்
திவ்விய வரலாறு
இப்போது
உங்கள் கரங்களில்...

இப்புண்ணியப் பணிக்கு
எனக்கு வரம் தந்த -

இறையருள் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்
வள்ளல் பெருமான் இராமலிங்க சுவாமிகள்
சங்கர பரமஹம்ச சுவாமிகள்

அனைத்துமாய் இருந்து
வழி நடத்தும்
இமயஜோதி திருஞானானந்தா சுவாமிகள்

ஆகியோருக்கு நன்றி பல.

இந்நூலுக்கு
அணிந்துரை
வழங்கி
பெருமை சேர்த்த
பாரதியார் பல்கலைக் கழக
மேனாள்
துணைவேந்தர்
இளங்கோவன் ஐயா
நீதியரசர்
வைத்தியநாதன் ஐயா
இருவருக்கும்
இதயமிகு நன்றி

கதைக் களத்தில்
உதவிய
சங்கர பரமஹம்ச சுவாமிகளின்
வழித் தோன்றல்கள்
சங்கர பாண்டிய நாடாரின்
வழித்தோன்றல்கள்
ஆதித்தன் பிள்ளையின்
வழித் தோன்றல்கள்
ஆகியோர்
நன்றிக்குரியவர்கள்.
நூலுக்காக

பயணித்த ஊர்களான
திருச்செந்தூர்
ஏரல்
சிவகளை
கடையம்
பாப்பாக்குடி
பாப்பாங்குளம்
துப்பாக்குடி
ஆகிய ஊர்களையும்
அவ்வூர்களில் உதவிய

நல்லிதயங்களுக்கு
நன்றி

இவ்வூர்கள்
சங்கர பரமஹம்ச
சுவாமிகளின்
திருப்பாதம் பட்ட
திருத்தலங்கள்.

நூலைச்
செம்மைப்படுத்தித் தந்த
முதுபெரும் சன்மார்க்கி
இராம. இருசுபிள்ளை ஐயா
சன்மார்க்கச் செம்மல் வேதபுரி ஐயா
மூத்த தமிழறிஞர் புலவர் குறளகன்
பேராசிரியர் பாண்டியராஜன்
பேராசிரியை சிவகாம சுந்தரி
ஆகியோருக்கு
என்றென்றும் நன்றி.

ஓவியங்களால் சிறப்பு சேர்த்த
ஓவியர் கோவை ஜீவானந்தம்
முகப்போவியர் சுப்பிரமணியன்
இருவரின்
தெய்வீக விரல்களுக்கும் நன்றி

சங்கர பரமஹம்ச
சுவாமிகள் பற்றிய
பிரசுரங்கள்
சிறு நூல்கள்
கர்ண பரம்பரைக் கதைகள்
செவிவழிச் செய்திகள்
நூல் படைக்கப்
பேருதவி புரிந்தன.
தொடர்புடையவர்களுக்கு நன்றி.

இந்நூல்
உருவான
இயற்கைசூழ்
இறைசூழ்
கோவை
ஜோதியகமும்
அன்புசால்
அன்னையர்
தாரியா,
தார்ஸியயுஸ்
ஆகியோரும்
நன்றியுடன்
வணங்கத்தக்கவர்

நூலுக்கு
அழகு சேர்ந்த
தமிழக அரசு விருதாளர்
கருடா கிராபிக்ஸ் மணிகண்டன்
உதவியாளர்கள்
சுதா
அம்பிகா
ஆகியோருக்கு
இதயமிகு நன்றி.

குருவருள்
திருவருளால்
அமைந்த
இத் திவ்விய சரித்திரம்
உருவாக
ஒவ்வொரு கட்டத்திலும்
உறுதுணையாக இருந்து
ஊக்கமளித்த
கரூர்
கோவை
சேலம்

நெய்வேலி
வடலூர்
திருப்பூர்
குடியாத்தம்
சென்னை
மலேசியா
ஜெர்மனி
அமெரிக்கா
சுவிட்சர்லாந்து
ஆகிய கோட்டங்களின்
அன்பு மிகுந்த அன்பர்கள்
ஒவ்வொருவருக்கும்
அனந்த கோடி நன்றிகள்.

இந்நூலில்
தவறிருப்பின்
சுட்டிக் காட்டுங்கள்,
திருத்திக் கொள்ள
பூரண சம்மதம்.

அடுத்த பதிப்புக்கு
அது
ஏதுவாய் இருக்கும்.
இந்நூல்
என் வாழ்வில்
ஒரு
பெரும் பேறு.



நன்றியுடன்,

**ஜி. சிவராமன்.**

itzsivaraman@gmail.com

